Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor:* P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 253, 254

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 8 ஜீவியச் சந்தா ரூ. 25.





பொருளடக்கம்.

1. திருநறையூரநுபவம்
2. மார்கழித்திங்களநுபவம்
3. ஸ்ரீவைஷ்ணவர்களென்பது யாரை?
4. அட்வகேட் அனந்தாசார்ய ஸ்வாமிகள்
5. திருவரங்கம் பெரிய கோயிலநுபவம்
6. தூயபெருநீர் யமுனைத் துறைக் கதை
7. ஸ்ரீரங்க ஸபையில் உபந்யாஸங்கள்
8. V. R. திருவத்யயன கோஷ்டி
9. A. K. ராஜகோபாலையங்கார் ஷஷ்டியப்தபூர்த்தி
10. சென்னை வைணவ மகாநாடு.
11. நம்பெருமாளும்–மணவாள மாமுனிகளும்
12. திருவரங்கத் தமிழ் மாலை.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1970 ஜனவரி, பிப்ரவரி௴ ஸௌம்யஹு தை, மாசி௴

# ஸ்ரீராமாநுஜன்-253, 254







சென்னை ஸத் க்ரந்த ப்ரகாசன ஸபா மூலம் மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P B. அண்ணங்கராசாரியர்

| ஸ்புடம்-22 | ஸௌம்யஹு தைமீ - மாசிமீ<br>1970 ஜனவரிமீ - பிப்ரவரிமீ | ஸஞ்சிகை 1, 2. |
|---|---|---|


## நூற்றெட்டுத் திருப்பதி யந்தாதி

### 20, திருநறையூர்—நாச்சியார்கோயில்

செய்ய சடையோன் திசைமுகத்தோன் வானவர்கோன்
ஐயமறுத் தின்ன மறியாரே—துய்ய
மருநறையூர் வண்டுழாய் மாயோன் செவ் வாயோன்
திருநறையூர் நின்ருன் செயல். (20)

| | | | |
|---|---|---|---|
| துய்ய மருநறை ஊர் வள்துழாய் | பரிசுத்தமான நறு மணமும் தேனும் பொருந்திய செழிப்பான திருத்துழாயை யணிந்தவனும் | செயல் | செய்கையைப்பற்றி |
| செம் வரயோன் | சிவந்த திருவதரத்தை யுடையவனும் | செய்ய சடையோன் திசைமுகத்தோன் வானவர்கோன் | சிவனும் பிரமனும் இந்திரனும் |
| திரு நறையூர் நின்ருன் மரயோன் | திருநறையூரில் நிற்பவனுமான எம்பெருமானுடைய | ஐயம் அறுத்து இன்னம் அறியார் ஏ | நிஸ்ஸந்தேஹமாக இன்னமும் தெரிந்து கொண்டாரில்லையே!. |

* * *திருவாய்மொழியில் *கட்கரிய பிரமன் சிவனிந்திரனென்றிவர்க்குங் கட்கரிய கண்ணன்* என்றும், *ஆம்வண்ணமின்னதொன்றென்று அறிவதரியவரியை* என்றுமுள்ள பாசுரங்களை யடியொற்றி இச்செய்யுள் பணித்தபடி. .... .... *

---

அறிவிப்பு:— ஸ்ரீராமாநுஜனுக்கு இருபத்திரண்டாமாண்டு பிறந்து விட்டது. இந்த வருஷம் முதலாக வருஷச்சந்தா எட்டு ரூபா யென்பதை அனைவரும் கவனித்துக்கொள்க.

நம்மாழ்வார் நந்தகோபனை நிதியெடுத்தவ னென்கிறார். "எடுத்த பேராளன் நந்தகோபன்றன் இன்னுயிர்ச் சிறுவனே!" என்றன்றோ கண்ணனை விளிக்கின்றாராழ்வார். உண்மையில் நந்தகோபனுக்குக் கண்ணபிரான் கிடைத்தது ஜன்ம தரித்ரனுக்கு நவநிதிகிடைத்தது போலவேயன்றோ? அவனுக்குக் கண்ணன் கிடைத்தன னென்பது மட்டுமேயோ? அவனைத் தன்னிஷ்டப்படி நியமிக்கும் பாக்கியமுமன்றோ பெற்றிருந்தான். ஒருநாள் மாலைப் பொழுதில் கண்ணன் தெருவிலே சென்று நின்றான்; அப்போது யசோதை கண்ணனை நோக்கி "வானிடைத் தெய்வங்கள் காண அந்தியம்போது அங்கு நில்லேல் ஆழியங் கையனே வாராய்" என்று உள்ளே வருமாறு அழைத்தாள். அவனோ விளையாட்டில் பராக்காலே வந்திலன்; அப்போது சொல்லுகிறாளவள்—"உந்த மடிகள் முனிவர் உன்னை நான் என் கையில் கோலால், நொந்திட மோதவுங் கில்லேன்" என்று. பயலே! இப்படி நீ துருதுருக் கையாய் வர்த்திப்பதை உன் ஸ்வாமி கண்டால் உன்னை வெறுமனே விடுவரா? சீறிச் சிவந்து பொடிந்து நிற்பரே, நானும் உன்னையடிக்கக் கோலிக் கையில் கோலை யெடுக்கிறேன், ஆனாலும் என் குழகனே அழகனே! உன்னையடிக்கக் கைவரவில்லையே என்கிறாள். கண்ணனை ஸர்வஸ்வாமியென்று தெரிந்து கொண்டிருந்துமிவள் அவனுக்கும் ஸ்வாமியாக நந்தகோபனை வைத்து "உந்தமடிகள்" என்று சொன்ன அழகு என்னே! ஆண்டாளும் * நாயகனாய் நின்ற நந்தகோபனென்கிறாள்.

### ஒருதலையில் இழவும் ஒருதலையில் பேறுமானவிதற்கு ஹேது

வஸுதேவதேவகிகள் பெற்றும் பேறிழந்தது ஏன்? நந்தகோபரும் யசோதையும் அசிந்திதமாக நிகரில்லாப்பேறு பெற்றது ஏன் ? என்று சிந்திப்பார்க்குச் சொல்லுகிறோம். வஸுதேவ தேவகிகள் நெடுங்காலம் தவம் புரிந்தனர்....எம்பெருமானே எமக்குப் புதல்வனாகப் பிறக்கவேணுமென்று பலவாண்டு கிடந்து நோன்பு நோற்றனர். இத்தகைய ஸாதநா நுஷ்டானத்தை எம்பெருமான் ஸஹிக்குமவனல்லன். தனது நிர்ஹேதுகக்ருபைக்கு வெற்றியையன்றோ அவன் விரும்புவான். சில விடங்களில் அல்பவ்யாஜமாத்திரத்தை எதிர்பார்ப்பதுமுண்டு! மிகக் கனத்த ஸாதநாநுஷ்டானம் காணுமிடத்து அவத்யம் காட்டி நிற்பது அவன் செயல். வஸுதேவருடைய தீவிரமான ஸாதநாநுஷ்டானம் கண்ணபிரானுடைய திருமுகத்திலே விழிக்குமளவுக்கு உதவிற்று. அவனது தவம் அவ்வளவிலே உபக்ஷீணமாயிற்றென்க. "இருகரையுமழிக்கும் க்ருபாப்ரவாஹ முடையவன்" என்று ப்ரஸித்தனான பெருமான் அந்த அருள் வெள்ளத்தை உடனே திருவாய்ப்பாடியில் மடைமாறினன். "நிர்ஹேதுக க்ருபையின் பிரபாவம் இங்ஙனேயாயிற்று இருப்பது !" என்று காட்டினது திருவாய்ப்பாடியிலே.

### இவ்வர்த்தத்தில் வேதபுருஷனுடைய ஸம்வாதம்

வேதம் ஓதுகின்றது—" அந்நவான் அந்நாதோ பவதி" என்று. " அந்நவாந் பவதி" என்றாலே போதுமே; 'அந்நாதோபவதி' என்றும் தனிப்பட ஓதவேணுமோ? அன்னம் கிடைக்கப் பெற்றவன் அந்நவான். அவன் தனக்குக் கிடைத்த அன்னத்தைப் புஜிக்கமாட்டானோ? அதைப் புஜிப்பவனாகவுமாகிறானென்று தனிப்படச் சொல்லுவது எதற்காக? என்று சங்கிக்க நேரும். இந்த சங்கையைப் பரிஹரிக்கவே வஸுதேவரும் நந்தகோபரும் தோன்றினர். *அந்நவாந் பவதிக்கு வஸுதேவர் இலக்காய் நின்றார்.

*அந்நாதோ பகவதிக்கு நந்தகோபர் இலக்காய் நின்றூர். *அந்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத் என்ற சுருதியின்படி அன்னமாகிய பரப்ரஹ்மத்தை வஸுதேவர் வெறுமனே பெற்றூரேயல்லது புஜிக்கப் பெற்றிலர்; அது பெற்றவர் நந்தகோபரேயாயினர். இவற்றுக்கு ஹேது, ஒரு தலையில் ஸாதநாநுஷ்டாநப்ராவண்யமும் மற்றொரு தலையில் அஃதில்லாமையுமேயாம். ஸாதநாநுஷ்டானம் செய்யுமாறு சாஸ்த்ரமே விதித்திருக்க அதனைப் பொல்லாங்காகக் கருதுவது கூடுமோ எனின்; எம்பெருமானைப் பெறுதற்கு ஸாதனுனுஷ்டானம் சாஸ்திர ஸம்மதமன்று. *நாஸௌ புருஷகாரேண நசாபி அந்யேந ஹேதுநா, கேவலம் ஸ்வேச்சயைவாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்று பகவான் சொல்லி வைத்திருக்கின்றுன். காலவிசேஷத்திலே ஒரு அதிகாரி விசேஷத்தைத் தானே தன் இச்சையேயடியாகக் கடாக்ஷிப்பதாகக் கூறி யிருப்ப தொன்றே வெற்றிபெறும். ''கோஸலகோகுல சராசரம் செய்யுங் குண மொன்றின்றியே அற்புதமென்னக் கண்டோம்'' என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணையின் வியாக்கியானம் ஸேவித்துத் தெளிவது.

### கண்ணபிரானுடைய சேஷ்டித போக்யதை

திருவயோத்தியில் திருவவதரித்த இராமபிரானுடைய சரிதையைப் பன்னிரண்டு பிராயமளவும் ஒன்றுமறியப் பெறுகின்றிலோம். விச்வாமித்திர முனிவனது வேள்வி காத்தது முதலாகவே இராமபிரானது சரிதை ஆரம்பமாகின்றது. அப்போது இராமனுக்குப் பன்னிரண்டு வயது. அதற்கு முந்தினசரிதைகள் தெரியவருகின்றில; கண்ணபிரானுடைய சரிதைகள் பிறந்தவன்றே தொடங்கி அபரிமிதங்கள். அதிலும் பன்னிரண்டு பிராயமளவும் பேரின்பமும் இன்சுவையும் வடிவெடுத்த சரிதைகள். பிராயம் முதிர்ந்த பிறகு செய்தருளின கீதோபதேசம், பாரதயுத்த நிர்வஹணம் முதலான பெருஞ்செயல்கள் கிடக்க. நம் ஆழ்வார்களின் ஈரச்சொற்களை அப்ரமேயமாக விளைவித்தவை கண்ணபிரானுடைய சிறுச் சேவகங்களே யன்றே. கண்ணபிரானுடைய திவ்வியசேஷ்டிதங்கள் இத்தனை அற்புதமாக அமைந்தில வென்றுல் ஆழ்வார்களின் அருளிச் செயல்கள் இத்தனையழகு பெற்றிருக்க விரகில்லையே. ஆண்டாள் தன்னுடைய திருப்பாவைக்குக் கண்ணபிரானுடைய கதைகளை இலக்காகக் கொண்டில ளென்றுல் '' கோதை தமிழ் ஐயைந்துமைந்து மறியாத மானிடரை வையஞ் சுமப்பதும் வம்பு '' என்னும்படியான ஏற்றம் அதற்கு ஏற்றிராதே.

### கண்ணபிரானும் பலராமனும்

கண்ணபிரானுடைய திவ்விய சேஷ்டிதங்கள் இவ்வளவு ரஸ்யமாக அமைந்ததற்குக் காரணம் நம்பிமூத்தபிரானேடு [ஸ்ரீபலராமனேடு] சேர்க்கையே யென்று வேதாந்தவாசிரியர் திருவுள்ளம்பற்றுகின்றூர். அவர் தசாவதாரஸ்தோத்ரத்தில் பலராமஸ்துதி பத்யத்தில்'

''க்ஷீரம் சர்க்கரயேவ யாபிரப்ருதக்பூதா: ப்ரபூதைர் குணை:
ஆகௌமாரகமஸ்வதந்த ஜகதே க்ருஷ்ணஸ்ய தா: கேலய:''

என்று பணித்தது காண்க. கண்ணபிரானேடு பலராமன் கூடியிருந்திலனுகில் கண்ணபிரானுக்கு அபாயங்கள் அபரிஹார்யமாகுமென்று பட்டர் திருவுள்ளம் பற்றுகிறூர். ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தரசதகத்தில் பலராம ஸ்துதி பத்யத்தில், ''யத் விச்லேஷலவோபி காலியபுவே கோலாஹலாயாபவத்'' என்றருளிச் செய்ததுகாண்க.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் காளியமர்த்தநம் சொல்லத்தொடங்கிய பராசர பகவான் "ஏகதாது விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தா வநம் யயௌ" என்றார். கண்ணபிரான் நாடோறும் பலராமனோடு கூடவே விருந்தாவனம் செல்வது வழக்கம்; ஒரு நாள் அவனை விட்டுத் தனியே சென்றான். அன்று தான் காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டது. "தமையன் ஒரு நாள் பேரநிற்க, தம்பி பாம்பின் வாயிலே புகும்படி யாயிற்று" என்பது பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி, இதையே காட்டுவது மேலே யுதாஹரித்த பட்டர் ஸ்ரீஸூக்தி.

நம்பிமூத்தபிரான் ஆதிசேஷாம்சமாகையாலே வெண்ணிறத்தன்; கண்ணபிரானோ *கண்ணனென்னுங் கருந்தெய்வம்* என்று ப்ரஸித்தன். திருவாய்ப் பாடியில் இவ்விருவரும் முன்னும் பின்னுமாக நடந்து செல்லுமழகு, வெள்ளிமலைக் குட்டியொன்று முன்னே செல்ல, நீலமணி மலைக்குட்டியொன்று அதன் பின்னே செல்லுகின்றதோ! என்றெண்ணலாம்படி யிருந்ததாம். பெரியாழ்வார் திருமொழி (1—7—5)காண்க.

பலராமனுக்குத் திருவாய்ப்பாடியில் நல்ல பெயர்; அவன் வம்பு தும்பு சேஷ்டைகளொன்றும் செய்வதில்லை யென்று ப்ரஸித்தி; இதனை

'ஸமந்நம்பு வேற்கண்ணல்லாள் முன்னம்பெற்ற வளைவண்ண நன்மாமேனி
தன்னம்பிநம்பியு மிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான்" (பெரியதிருமொழி 10-7-4)

என்று ஆய்ச்சிகள் சொல்லுவர்கள். *அண்ணற்கண்ணானோர் மகனைப்பெற்ற அசோதை நங்காய்!* என்று யசோதைப்பிராட்டியை விளிப்பர்கள். 'அண்ணற் கண்ணான்' என்பதற்கு இருவகையாகப் பொருள்பணிப்பர்; 'அண்ணல் கண்ணான்' என்று பிரித்து 'இவனே ஸர்வ ஸ்வாமியென்று கோட்சொல்லித்தரவல்ல திருக்கண்களையுடையவன் என்பதொன்று. 'அண்ணற்கு அண்ணான்' என்று பிரித்து அண்ணனான பலராமனுடைய பிரகிருதிக்குச் சேர்ந்திராதவன் என்பது மற்றொன்று. தீம்புசெய்ய அறியானவன்; தீம்பிலே தகணேறுமவன் இவன். நந்தகோபாலனுக்கு ஏற்றம் சொல்லுகிற ஆண்டாள் *கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனைப் பெற்ற நந்தகோபாலன்* என்கிறாள்.

கண்ணபிரான் தீமைகள்செய்ய ஆயர்மனைகளிலே புகுவன்; வீட்டிலுள்ளார் புழைக்கடைப்பக்கமாக இருக்கும் ஸமயம் பார்த்து தயிர் பால் நெய் வெண்ணெயுள்ள அறையிலேபுக்கு சேஷ்டைபண்ணுவன். சத்தம்கேட்டு ஓடி வந்து 'பயலே! யார் நீ? என்று கேட்டால் 'பலராமன் தம்பிநான் ' என்பனும் கண்ணன். ,பலராமன் யோக்யனாகையாலே இவனும் யோக்யனாகவேயிருப்பன்' என்றெண்ணிக்கொண்டு போய்விடட்டுமவர்கள்' என்பது கண்ணன் கருத்துப்போலும். "பட்டிமேய்ந்தோர் காரேறு பலதேவற்கோர் கீழ்க்கன்றாய்" என்ற ஆண்டாளருளிச்செயல் ஆண்டாளொருத்தியே பேசத்தகுவதன்றோ. .... .... *

மார்கழித்திங்களனுபவம் இவ்வளவு போதும்.



# ஸ்ரீ வைஷ்ணவர்களென்பது யாரை?

ஸ்ரீ வைஷ்ணவ லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பலமுக மாகப் பேசியுள்ளன. ''யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷமாலா; யே பாஹுமூலபரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி'' என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்தச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்தக்கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்துகிடக்கின்றன. பகவத்கீதையில் பத்தாவது அத்தியாயத்தில் (ச்லோ.5) "அஹிம்ஸா ஸமதா" என்ற விடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளா நின்ற நமது பாஷ்யகாரர், 'ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்'' என்று உரைத்தருளினர். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் ஸமமதிராத்ம ஸுஹ்ருந்விபக்ஷபக்ஷே — இதி பகவத்பராசரவசநமிஹ தத்தத்பதைஃ ஸ்மாரிதம்*என்றருளிச் செய்தார். ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (3-7-20) *நசலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சைஃ ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணு பக்தம்* என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் *ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே*என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத்தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டு மவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியையுடையவனா யிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீவைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோ மத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக்காணமுடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவுகட்டவேண்டியதாகும். முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும் போதும் 'புத்தகங்களில் வாசிக்கும் போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமா!' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்

ஸ்ரீ வசந பூஷணத்தில் ''குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்'' என்ற விடத்து ஜநந்யாசார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில் —

"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணா நிற்க, சிலர், செவிபொறுக்கவொண்ணாத பருஷோக்திகளைப் பண்ணக் கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப்பார்த்து, இவர்கள் பருஷித்ததுந்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை ......... என்றருளிச் செய்தார்" என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தாநமும் பீதாம்பர தாநமும் செய்தருளியதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதையெல்

லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும்போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம்; கேட்பவர்களும் கண்ணுங் கண்ணீருமாயிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அனுஷ்டானம் எங்ஙனே யிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

நமக்கு நைச்யா நுஸந்தாநம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் ''நீசனேன் நிறை யொன்றுமிலேன்'' என்றும் ''சீலமில்லாச் சிறியன்'' என்றும் பலவாறு பாசுரங்களை முன்விட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால்' என்னையா நீச னென்றாய்? என்னையா நிறையொன்று மில்லாதவனென்றாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்றாய்? பாவீ! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்கவேணும் என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதை யுண்டு ?ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன். என்று பலபடியாக நிகர்ஷாநு ஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா ? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ள வேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா ? என்று நாம் யோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்து கொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டின விடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்கியர் என்று பிறர் சொன்ன விடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போது தான் அவர்களுடைய நைச்யாநு ஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர;' என்று நைச்யாநு ஸந்தானம் பண்ணுமவர்கள் ''த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர;'' என்கிற பரோக்திகளை உகந்திருக்கிறார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙன மிருந்தார்கள் என்றே சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநு ஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணுகின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது;

சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று காலமணி காலம் சொல்லி முடிப்பர்கள்· இதேவார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பராகில் கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானு தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களேயல்லது, தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே? அப்படிப்பட்டவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவர்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீ வைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யம் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம்* [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்வது போல, *வைஷ்ணவ்யம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்* [வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீ வைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது. அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்க வேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அனர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். அப்படிப்பட்ட துணிவு பிறக்கப் பெற்றவர்களே ஸ்ரீ வைஷ்ணவர்கள். .... *

---

சென்னை முத்தியாலு பேட்டையில் வாழும்

ஸ்ரீமதுபயவே. (அட்வகேட்) P. B. அனந்தாசாரியர் ஸ்வாமிக்கு

15-11-69-ல் எழுபதாண்டு நிறைவு விழா மிகச்சிறப்பாக நடைபெற்றது.



# திருவரங்கம் பெரிய கோயிலில் திவ்யாநுபவம்

பகற்பத்து இராப்பத்தென்கிற திருவத்யயநோத்ஸவம் ஸகல திவ்யதேசங்களிலும் நடைபெற்றாலும் நம்பெருமாள் ஸந்நிதியில் நடைபெறுமடைவு பரம விலக்ஷணமென்பதை அறியாதாருமுளரோ? * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று நாடெங்கும் நிச்சலும் வாழ்த்தப் பெறுகின்ற எம்பெருமானாருடைய செங்கோல் செவ்வனே செல்லுமிடமன்றோ திருவரங்கத் திருப்பதி. *ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்* என்று இமவந்தந்தொடங்கி இருங்கடலளவும் ஸ்ரீவைஷ்ணவ ஸமுதாயமனைத்தும் மங்களாசாஸனம் செய்துவருவது பழுதுபடாமே ஓங்கிவருமழகைத் திருவரங்கத்திலன்றோ நாம் அனுபவித்து மகிழவேண்டும். இந்த மகிழ்ச்சி அடியேனுக்குப் பதினாறாவது பிராயம் முதல் நாற்பதாவது பிராயமளவும் அனேகமாக அவிச்சின்னமாய்க் கிடைத்து வந்தது. சென்னையில் பிரவசன நிர்ப்பந்தத்தை ஏற்றுக்கொண்ட காலம் முதலாக [1931 ஆம்ஆண்டு முதலாக] இப்பெரும் பாக்கியத்திற்குக் குறை விளைந்தது. ஆயினும், கார்த்திகைத்திங்களிலேயே பகற்பத்து மஹோத்ஸவம் சிற்சிலவாண்டுகளில் ப்ராப்தமாகப் பெறுவதுண்டே; அத்தகைய ஸந்தர்ப்பங்களில் இழவாமல் ஸேவித்துவரும் பாக்கியமுடையேனடியேன். அந்த பாக்கியம் இந்த ஸம்வத்ஸரத்தில் எட்டு நாள் ப்ராப்தமாயிற்றடியேனுக்கு. திருநெடுந்தாண்டக மஹோத்ஸவமொருநாளும் பகற்பத்தில் ஏழுநாளும் ஸேவித்து '' முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே '' என்று ஆழ்வார் ஆசாஸித்தருளின பேற்றை இந்நிலத்திலேயே பெற்று அநுபவிக்கலாயிற்று. பெரியாழ்வார் *தென்னாடும் வடநாடுந் தொழ நின்ற திருவரங்கம்* என்றார். தென்னாடும் வடநாடும் மட்டுமா திருவரங்கத்தைத் தொழவருகின்றது? * யாவரும் வந்தடிவணங்க அரங்கநகர் துயின்றவனே! என்று குலசேகராழ்வார் பணித்தபடியே எண்டிசையுமுள்ளாரும் வந்தன்றோ தொழுகின்றனர். அனைவரும் ஒரே விதமான ஆனந்தத்தையநுபவிக்க இயலாதன்றோ. அவரவர்கள் தம்தமது ருசிக்கு ஏற்றபடி ஒரோ அனுபவங்களில் மண்டி ஆனந்தித்தாலும் நாம் அநுபவிக்குமானந்தம் முக்கியமாக அரையர் ஸேவை கோஷ்டியில் அந்வயிக்குமதனால்.

பெரிய கிதயுகம் பெற்றிப் பேரின்பவெள்ளம் பெருக நடை பெறுமிந்த திவ்ய கோஷ்டி * பொலிக பொலிக பொலிகவென்று போற்றத்தக்கதாய், அரையர் ஸ்வாமிகள் எழுவர்விளங்க, * கண்டோங் கண்டோங் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோமென்று ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணலாம்படியமைந்திருந்த அழகு அற்புதமென்னத்தகுமத்தனை. இந்தகோஷ்டியில் தற்காலம் ஸகலவிதத்திலும் பெரியவராயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமதுபயவே. (அரையர்) சடகோபாசாரியர் ஸ்வாமி திருநக்ஷத்ரப்ரயுக்தமான திருமேனி தளர்ச்சியையுங்கணிசியாது கைங்கரியத்தில் பரிபூர்ணமாக அந்வயித்திருந்து அனைவரையும் ஆனந்திப்பித்தது உத்ஸவத்திற்குத் தனிப்பட்ட சிறப்பைத் தந்ததென்னத் தட்டில்லை.

இவ்வாண்டில் ஓர் அதிசயம், எம்பெருமானாருடைய காலந் தொடங்கி மூவாயிரம் ஸேவிப்பது மட்டுமே அரையர்களுடையதாய், இயற்பா ஆயிரம் ஸேவிப்பது அமு

தனுருடையதாயிருந்து வந்தது. இவ்வாண்டில், அமுதனுர்வம்சஸ்தர்களின் அச்ரத்தையினுல் அந்த கைங்கரியமும் அரையர்களுக்கே ப்ராப்தமாயிற்று என்றறிந்து மகிழ்ந்தோம்.

உபந்யாஸ கோஷ்டி:— சென்றமாதத்து ஸ்ரீராமாநுஜனில் அறிவித்திருந்த படி கோயிலில் ஆறுநாள் உபந்யாஸங்கள் அடைவேநடைபெற்றன. இவ்வுபந்யாஸ கோஷ்டியை மிகுந்த ச்ரத்தையுடனும் தகுந்த வ்யவஸ்தைகளுடனும் நடத்தி வைத்தவர் — ஸ்ரீவைஷ்ணவஸுதர்சன பத்ராதிபரும் புத்தூர் வக்கீல் ஸ்வாமி யென்று ப்ரஸித்தருமான ஸ்ரீமதுபயவே. S. கிருஷ்ணஸ்வாமிஜயங்கார் ஸ்வாமியாவர். அவர்தாமே தமது ஸுதர்சனபத்ரிகையின் 23—1. இதழில் "ஸ்ரீரங்கம் சபையில் உபந்யாஸங்கள்" என்ற தலைப்பின்கீழ் வெளியிட்டுள்ள கட்டுரையை மற்ருெருபக்கத்தில் வெளியிட்டுள்ளோம். அதில் அந்த ஸ்வாமியின் அளவுகடந்த ஆதராதிசயமே அதிசயோக்தியைப் பெருக்குவித்துள்ளதென்று உண்மையுணரவேண்டும். அவ்வளவு ப்ரசம்ஸைக்கு அடியேன் பாத்திரனல்லேன். (பக்கம் 12, காண்பது.)

அரங்கனுடைய அற்புதமானதோர் ஆணை;— அரங்கனுடைய அருளுக் கிலக்காகி தேவஸ்தான கார்ய நிர்வாஹங்களை ஒழுங்குபட நடத்திவரும் ஆபீஸர் அவர்கள் அரங்கனுடைய கட்டளையாக நமக்கு அங்கு நேரில் தெரிவித்ததாவது—திருவரங்கத் திருப்பதி விஷயமாக வெளிவந்துள்ள ஆழ்வார்களின் பாசுரங்களையெல்லாம் தொகுத்து எளிய கருத்துரையுடன் அச்சிடுவித்துத் தரவேணுமென்று. திருவரங்க நாதனே இங்ஙனம் நியமனம் தந்தருள்வதாகக் கொண்டு உடனே அதனை நிறைவேற்றினோம். திருவரங்கத்தமிழ்மாலை யென்னும் அந்த நூல் ஸ்ரீ ராமாநுஜனன்பர்களாலும் அநுபவிக்கத்தக்கதென்று தோன்றி அதனை இதனிலும் சேர்த்திருக்கின்றோம். *



## தூயபெருநீர் யமுனைத்துறைக் கதையொன்று

யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியினுல் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை வேதாந்த தேசிகன் யாதவாப்யுதயத்தில் கூறுமிடத்து நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 125.) *விவிதமுநிஜநோபஜீவ்ய தீர்த்தா விகமித ஸர்ப்பகணு பரேண பும்ஸா, அபஜத யமுநா விசுத்திமகர்யாம் சமித பஹிர்மத ஸம்ப்லவா த்ரயீவ* என்கிற ச்லோகத்தினுல் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியருளினர். எங்ஙனே யென்னில், ஐந்தலை வாய்நாகமாகிய காளியன் யமுனையாற்றைக்கலக்கிக் கெடுத்ததானது—விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம் போனபடியெல்லாம் கூறும் தவருன பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான் நீக்கி யமுனையை எல்லாரும் இனிமையாகப்பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமா

னுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது; காளியன் ஸ்தானத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப்பட்டார்கள்; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். *தூயபெருநீர் யமுனைத்துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத்ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளைக் காளியன்ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங் கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்து விதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனே யென்னில்;

1 ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை- என்பது ஒரு குத்ஸிதவாதம்.

2 ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனேயன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம்.

3 சாஸ்திரங்களைக் கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங்களும் விக்ரஹமும் இல்லையென்று வாதித்தல் வேறொரு குத்ஸிதவாதம்.

4 ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங்களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம்.

5 பிரபஞ்சமே கிடையாது, எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம்.

ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்க வாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கி யருளினர்.

இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். *வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார்* என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் *நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே* என்று திருமாலை முதற் பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச் செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததந்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பதமதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததிஸூக்தியும் காண்க. இந்த உபந்யாஸம் வேதாந்திகளாய் வாக்மிகளாயிருப்பார்க்கு நாலைந்து நாள் விரிக்கத்தகும். .... .... .... .... *

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

## ஸ்ரீரங்கம் சபையில் உபந்யாஸங்கள்

### (ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன பத்ரிகை வெளியிட்டது)

"சென்ற இதழ்களில் அறிவித்தபடி ஸ்ரீரங்கம் மேலச்சித்திரை வீதி (நிர் 75) பாரதீய பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ சபா கிருஹத்தின் ஆதரவில் ஸ்ரீகாஞ்சீ மஹா வித்வான் ஸ்ரீ உ. வே. ப்ர.ப. அண்ணங்கராசார்ய ஸ்வாமி அவர்களால் 9-12-69 முதல் 14—12—69 ஈருக ஆறு நாட்களில் இரவு 7-30 முதல் பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளின் அனுபவபரீவாஹரூபமான உபந்யாஸங்கள் நிகழ்த்தப் பெற்றன. முதல் நாள் "பக்தாம்ருதம்" என்னும் ச்லோகத்தில் நாதமுனிகள் ஆழ்வாரையும், திருவாய்மொழியையும் அனுபவித்திருக்கும் ப்ரகாரமும். இரண்டாவது நாள் ஸ்தோத்ரரத்னத்தில் ஆளவந்தார் ஆழ்வார்களை அடியொற்றியிருக்கும் ப்ரகாரமும். மூன்ருவது நாலாவது நாட்களில் எம்பெருமானுர் தமது திவ்யக்ரந்தங்கள் அனைத்திலும் நம்மாழ்வாரை அடியொற்றியிருக்கும்படியும், ஐந்தாவது நாளில் ஆழ்வானும். பட்டரும் திவ்யப்ரபந்தப் பெருங்கடலில் குடைந்தாடியிருக்கும் பெற்றியும் விரிவாக ஸ்வாமியால் அநுபவிக்கப் பெற்றன. ஆருவது நாள் மணவாள மாமுனிகளின் வைபவம் பரக்க உபந்யஸிக்கப் பெற்றது. ஆழ்வார்களுடையவும், ஆசார்யர்களுடையவும் திவ்யஸூக்திகள் ஸ்வாமிக்கு வாசோவிதேயமாயிருக்கிறபடியால் உபந்யாஸங்கள் கடல் மடை திறந்தாற்போலே ச்ரோதாக்களை ஸ்ரீஸூக்த்யம்ருத ஸாரக் கடலிலே திளைக்கவைத்தன. ஒவ்வொரு நாளும் இரவு பத்து மணிக்கு மேலும் பரந்து சென்ற உபந்யாஸங்களை ஸ்வாமியின் திருமேனி பாங்கைக் கருத்தில் கொண்டு அன்பர்கள் பலகால் நினைவுறுத்தி நிறுத்தவேண்டியிருந்தது. எம்பெருமானுர் ஆழ்வார்களோடு ஸம்பந்தமில்லாதவர் என்று சிலர் அவிசாரிதரமணீயமாகக் கூறுவது மூன்ருவது நாலாவது உபந்யாஸங்களில் அடியோடு தகர்க்கப்பட்டது. மாமுனிகளின் ஆருவது நூற்ருண்டையொட்டியமைக்கப் பெற்ற இவ்வுபந்யாஸத் தொடரின் கடைசி யுபந்யாஸம் ஸ்ரீசைலேசத் தனியனின் அபூர்வார்த்தங்களையும். மாமுனிகளின் வைபவத்தையும் விரிவாக விளக்குவதாய் உபந்யாஸங்களுக் கெல்லாம் சிகரமாய் அமைந்தது. அன்று, பூர்வாசார்ய க்ரந்த ப்ரகாசந கைங்கர்யத்திற்காக ஸ்வாமியிடம் ஸ்ரீரங்கம் திருச்சி மஹாஜனங்களின் கிஞ்சித்காரமாகப் பொற்கிழியொன்று அளிக்கப்பட்டது. எங்களாழ்வானுடைய ஸ்ரீ விஷ்ணுசித்தீயமெனும் ஸ்ரீ விஷ்ணுபுராண வ்யாக்யானத்தை உடனடியாக அச்சிடத் தொடங்குவதாக நிச்சயிக்கப்பட்டது. இதற்குச் சென்னையிலிருக்கும் Dr. ஸம்பத் அவர்கள் ஓர் கணிசமான தொகை அளிக்க முன்வந்துள்ளார். இவ்வண்ணமாகவே நிதி வசதி படைத்தஆஸ்திகர்கள் அனைவரும் எவ்வளவு இயலுமோ அவ்வளவு தொகையை ஸ்வாமிக்குஅனுப்பி, வருகின்ற ஐப்பசித் திருமூலத்திற்குள் துர்லபமான ஆசார்யக்ரந்தங்கள் அனைத்தையும் அச்சேற்றுவதற்கு ஸ்வாமியை மேன்மேலும்உத்ஸாஹப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறோம்."

அடியேன் செய்யும் விண்ணப்பம். மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸுதர்சனபத்ராதிப ஸ்வாமியின் பெருமுயற்சியினுல், தற்காலம் நாம் மேற்கொண்டிருக்கும் பூர்வா சார்ய க்ரந்த ப்ரகாசன கைங்கரியத்திற்கு எண்ணூறுரூபாயும், கீர்த்திமூர்த்தியான சிங்கமையங்கார் ஸ்வாமியின் தென்னுசாரிய உபய வேதபாடசாலையில் ஒரு நாள் உபந்யாஸத்தின் மூலமாக 125 ரூபாயும் ப்ராப்தமாயிற்று. சென்னையில் வாழும் ஸ்ரீ உ. வே. Dr. ஸம்பத்ஸ்வாமி ஆயிரம் ரூபாய் அளிக்கத் திருவுள்ளம் பற்றி 500 ரூபாய் அட்வான்ஸாக அளித்தருளி மஹோத்ஸாஹத்தை ஊட்டியுள்ளார். **P. B. A.** *



## திருவத்யயன கோஷ்டி.

14—11—69 தேதியன்று ஸ்ரீ உ. வே. V. ராஜகோபாலாசாரியர் (M. L.) ஸ்வாமி திருநாடலங்கரித்தவிஷயம் முன் னிதழில் தெரிவிக்கப்பட்டிருந்ததல்லவா? அந்த ஸ்வாமிக்கு 26—11—69 தேதியில் கீழ்ப்பாக்கத்தில் அவருடைய திருமாளிகையில் திருவத்யயனம் உபயவேத பாராயணங்களுடனும் இதிஹாஸபுராண ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷயாதி படனங்களுடனும் மிகச்சிறப்பாக நடைபெற்றது. அப்போதைய இயல்கோஷ்டியின் காட்சியி து காண்மின். திருப்பரிவட்ட புஷ்பமாலை பஹுமானங்களுடன் நிற்பவர் திருக்குமாரர் ஸ்ரீமான் V. ஸ்ரீநிவாஸாசாரிய ரென்பவர். இவர் திருத்தகப்பனர் ஸ்தானத்தைப் பூர்த்தி செய்ய வேணும்.



ஸ்ரீ உ, வே. அகரம் கஸ்தூரி. ராஜகோபாலையங்கார் ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவப்,



சித்தூரில் ஸுப்ரஸித்தராய் விளங்கும் ஸ்ரீஉவே ஆடிடர். K. V. நரஸிம்ஹன் ஸகோதரரான ஸ்ரீ ராஜகோபாலா சாரியர் ஸ்வாமி சின்னகாஞ்சீபுரம்தென்னண்டைமாட வீதியில்ஸகலவித ஸம்ருத்தியுடனும் எழுந்தருளியிருக்கிறுர். இவரும் ஆடிடரே, இவர்க்கு 3-12-69 தேதியில் ஸ்வக்ருஹத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம்லோகோத்தர மான வைதிக ஸ்ரீ விளங்க நடைபெற்றது. (அதாவது) வைதிகாத்தமர்களைக் கொண்டு முன்ஞடி ஐந்துநாள் வேதபாராயணம் [ஸம்ஹித" பாராயணம்] இதிஹாஸபுராணபடனத்துடன் நடைபெற்றது. அப்போது அந்த்



யன காலமாயிருந்தபடியால் அதற்கேற்ற திவ்யப்ரபந்த ஸேவையும் நடந்தேறியது. சாஸ்த்ரோக்த ப்ரக்ரியையில் ஆயுஷ்ய ஹோமமும் மாங்கல்யதாரணமும் ஆசீர்வாத கோஷ்டியும் சிறந்த பூரிதானங்களும் நடைபெற்றன. .... .... .... *

— நித்யஸ்ரீர் நித்ய மங்களம். —

## சென்னையில் திருப்பாவை மாநாடுகள்



சென்னை மாநகரில் ஏறத்தாழ எண்பது இடங்களில் முப்பதும் தப்பாமே திருப்பாவை காலக்ஷேபங்கள் நடைபெற்றதாக அறிகிறோம். அது தவிர, மார்கழித்திங்களில் வரும் ஞாயிற்றுக்கிழமைகளில் குறிப்பான சில இடங்களில் திருப்பாவை வித்வத் ஸதஸ்ஸென்னும் பெயரால் சிறியவும் பெரியவுமான கூட்டங்களும் நடைபெற்றன. மேலமாம்பலம் சாரதா வித்யாநிலயம், கிருஷ்ணப்பநாய்க்கன் அக்ரஹாரம் சங்கரமடம், நுங்கம்பாக்கம் பிரசன்னவேங்கடேசப் பெருமாள் ஸன்னிதி, முத்தியால்பேட்டை நவநீத கிருஷ்ணன் ஸன்னிதி ஆகிய இவ்விடங்களில் நடைபெற்ற ஸதஸ்ஸுகள் நாமறிந்தவை. ''செல்வத்திருமாலால் எங்குந்திருவருள் பெற்று இன்புறுவர்'' என்ற ஆண்டாளநுக்ரஹம் எங்குந் தழைத் தோங்கி வருவது பற்றி மிக மகிழ்கிறோம். .... .... .... .... *

# சென்னையில் வைணவ மகாநாடு.

உலகம் நிறைந்த புகழாளரான (மாஜி மினிஸ்டர்) K. வெங்கடசாமி நாயுடு BA. BL., அவர்களின் சிறந்த முயற்சியால் சென்னையில் ஸ்தாபனம் பெற்றிருக்கின்ற



ஸ்ரீவைஷ்ணவ மகா சங்கத்தின் 44 வது மகாநாடு சென்ற 69 டிஸம்பர் மீ 27 தேதி முதல் 30 தேதியளவான நான்கு நாட்களில் ஸ்ரீமான். சி. சஞ்சீவி நாயடு அவர்களின் தலைமையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. முதல் மூன்று நாட்களில் புருஷர்களின் சபையும், நான்காவது நாளில் பெண்மணிகளின் சபையும் நடைபெற்றது. முதல் நாள் சபையைத் திறந்து வைத்தவர் உயர் திரு. நரசிம்மனவர்கள் சென்னை அறநிலைய ஆணையர். இப்பெரியார் அன்று சொல்லின்பமாரி பொழிந்து சபையோர்களை ஆனந்தக்கடலில் ஆழ்த்தினர். மூன்று நாட்களிலும் பல சொற்பொழிவாளர்கள் வந்திருந்து வைணவ சமயச் சிறப்புகளை யெடுத்துரைத்தது பாராட்டத்தக்கது. மேன்மை தங்கிய உயர் திரு R. வேணுகோபால நாய்க்கர் B. A. B. L. அவர்களின் ஒத்துழைப்பினுல் சபையின் நிகழ்ச்சிகள் ஒழுங்குபட நடந்தது குறிப்பிடத்தக்கது. வைணவமதம் தழைத்தோங்க இச்சபை நீடூழிகாலம் நிலவுமாக. .... .... .... *



ஸ்ரீராமாநுஜன் 250 ல்கண்ட நமது வேண்டுகோளுக்கிணங்கி 30-11-69
வரை உபகரித்தவர்களின் ஜாபிதா முன்னிதழ்களில்
(அதாவது 251, 252 களில்) வெளியிடப்பட்டது.
அதன் பிறகு 31-12-69 வரை உபகரித்தவர்களின்
ஜாபிதா வருமாறு

சென்னை.2 N.T ரகுராமகிருஷ்ணன்
,, 4.மயிலை K.K.A.ராகவாசாரியர்
,, ,, P. S. கண்ணபிரான்
,. ,, T.A. திருவேங்கடாசாரியர் T. V. S.
திருவல்லிக்கேணி. V.T.ரங்கஸாமி ஐயங்கார்
,, திருமணி(ராஜப்பா) நரஸிம்ஹாசாரியர்
,, காவல்கழனி. விஞ்சிமூர். அனந்தாசாரியர்
,, T. Srinivasan சிங்கபெருமாள் கோவில்
,, C.S. Parthasarathi Iyengar B.A.B.L
சென்னை 7. நல்லப்பா, பார்த்தஸாரதி ஐயங்கார்
,, 9. R. Natarajan
,, 17. S.R. திருவேங்கடம். (ஸம்பத்து)
,, 31. திருமழிசை. புத்தாமீ வெங்கடா சாரியர்
,, 33. R. சடகோபாசாரியர் (சேனங்குளம்
,, ,, கபிஸ்தலம் A.ஸ்ரீநிவாஸய்யங்கார்,
,, 34. V.Krishnaswami Iyengar

— — —

அண்ணன்கோயில் P. B திருவேங்கடாசாரியர்
,, K. ஜகன்னாதய்யங்கார்.
அரிய குளம் A.R. சேஷாத்ரிஐயங்கார்
Bangalore 3. Sri Betarayaswami
.,N.C. இந்திரா
,, M.A.Krishnamachair
,, Rajajinagar,, E S.Bhuvarahan MA.

Coimdatore- G. மஞ்ஜுளா.
,, U B. வேங்கடராமாநுஜதாஸர்
,, K.R. Narasimhan
Dindigal. D.ராஜகோபாலனவர்கள்
Eranakulam T.C.A. Ramanujam காஞ்சி.
Hyderabad K Jagannadhachariar
,, Srimathi Kanakamani
கரியமாணிக்கம். V. நாராயணன் (மதுரை)
கூரம். K.V. ரங்கநாதன்.
காஞ்சி. நம்பிள்ளைஸன்னிதிபகவத் விஷய கால க்ஷேப கோஷ்டிஸமிதி. 425. Rs.
மேலவிடையல். R. விஜயராகவையங்கார்
நாங்குனேரி. D. திருமலா சாரியர் ஸ்வாமி
பணிகல்பெட். நாஸிம்ஹாசாரியர்
புத்தூர் P.K. கோவிந்தராஜய்யங்கார்
புத்தூர், V. Narayanan
ஸ்ரீரங்கம் Srinivasayyangar(Rtd D.S P.
,, M. S. Ambu Iyer
சேலம். Y. K. V. ஸந்தானம் செட்டியார்
ஸ்ரீ வில்லி புத்தூர் சாமுஜயங்கார்.
Tirupati. T.A.கிருஷ்ணமாசாரியர் வித்வான்
திருவள்ளுர்புரிசைகிருஷ்ணமாசாரியர்வித்வான்
வி. பூதூர். வெங்கடஸாமி ரெட்டியார் வித்வான்.

குறிப்பு: இதுவரை வெளியிட்ட மூன்று ஜாபிதாக்களிலும் சேராத நபர்களுக்குப் பத்திரிகை நிறுத்தப்பட்டது.

# திருவரங்கம் பெரிய கோயில்



பெரிய பெருமாளும், நம்பெருமாளும்.



அழகிய மணவாளன்



கோயில் மணவாள மாமுனிகள்

ஸ்ரீ:
ஸ்ரீரங்கநாயிகாஸமேத ஸ்ரீரங்கநாதபரப்ரஹ்மணே நம:

    

மணவாள மாமுனிகளின் அறுநூருண்டு நினைவு மாலையின்முதல் மலரான

# திருவரங்கத் தமிழ்மாலை

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதி குணர்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முநிம்.

## முன்னுரை

* தென்னுடும் வடநாடுந் தொழநின்ற திருவரங்கந் திருப்பதியின்மேல் அவதரித்துள்ள ஆழ்வார்கள் பாசுரங்களெல்லாம் ஒன்று விடாமல் தொகுக்கப்பட்டு ஸாரஸம்க்ஷேபமான எமது உரையுடன் வெளியிடப்படுகின்றன. தனிப் பிரபந்தமாக அவதரித்த திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனுதிபிரான் ஆகிய இம்மூன்று திவ்வியப் பிரபந்தங்களை முன்னம் வெளியிட்டு, அதன்பிறகு பதிகப் பாடல்களாக வுள்ளவற்றை வெளியிட்டு, அதன்பிறகு தனிப்பாசுரங்களையும் துணுக்கைப் பாடல் களையும் வெளியிட்டுத் தலைக்கட்டுவோம். திருவரங்கம் விஷயமாகப் பெரியாழ்வா ரருளிச்செய்த பதிகங்கள் மூன்றில் முதலதான * மாதவத்தோன் பதிகத்தில் " திருவ ரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தன '' என்றருளியதைப் பின்பற்றி இந்தத் தொகுப்புக்குத் திருவரங்கத் தமிழ்மாலையென்று திருநாமஞ் சாற்றினேம். ... *

### — பாடல் குறிப்பு —

திருவரங்கத் திருப்பதி நூல்கள்—3
1. திருமாலை, 2. திருப்பள்ளியெழுச்சி.
3. அமலனுதிபிரான்.

— பதிகங்கள் —

நம்மாழ்வார்— 1. கங்குலும் பகலும்,
குலசேகராழ்வார்— 1. இருளிரியச்சுடர்,
2. தேட்டருந்திறல்தேன்.
3. மெய்யில்வாழ்க்கை.
பெரியாழ்வார்- 1, மாதவத்தோன்புத்திரன்.
2. மரவடியைத் தம்பிக்கு.
3. துப்புடையாரையடைவது.

ஆண்டாள்—தாமுகக்குந்தங்கையில்
திருமங்கையாழ்வார்—
1. உந்திமேல் நான்முகனை
2. வெருவாதாள்வாய்வெருவி
3. கைம்மானமழகளிற்றை
4. பண்டைநான்மறையும்.
5. ஏழையேதலன்கீழ்மகன்.

துணுக்கைப் பாசுரங்கள்—
ஆழ்வார்கள் பதின்மரும்.
திருவரங்கத்தமுதனர்.
மணவாளமாமுனிகள் (நூற்றந்தாதி.)

# தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருமாலை

(தனியன்)

மற்றென்றும் வேண்டா மனமே! மதிளரங்கர்
கற்றினம் மேய்த்த கழலிணைக்கீழ்—உற்ற
திருமாலை பாடுஞ்சீர்த் தொண்டரடிப் பொடியெம்
பெருமானை யெப்பொழுதும் பேசு.

| | | | |
|---|---|---|---|
| மனமே | நெஞ்சே ! | கழல் இணை கீழ் | இரண்டு திருவடிகளின் கீழே |
| மற்று ஒன்றும் | வேறென்றும் | உற்ற | ஸம்பந்தம் பெற்றிருக்கிற |
| வேண்டா | (உனக்கு விரும்ப) வேண்டியதில்லை ; | திருமாலை | ' திருமாலை ' என்னும் திவ்ய ப்ரபந்தத்தை |
| மதிள் அரங்கர் | ஸப்த ப்ராகாரங்களோடு கூடிய ஸ்ரீரங்கத்துக்குத் தலைவரான நம்பெருமாளுடைய | பாடும் | பாடியருளின |
| | | சீர் | கல்யாண குணங்களையுடைய |
| | | தொண்டரடிப் பொடி எம் பெருமானை | தொண்டரடிப்பொடி யாழ்வாரை |
| கன்று இனம் மேய்த்த | (கிருஷ்ணவதாரத்தில்) கன்றுகளின் கூட்டங்களை மேய்த்தருளிய | எப்பொழுதும் | ஸர்வகாலமும் |
| | | பேசு | அநுஸந்திக்கக்கடவாய். |

மூன்றாமடியில் வெண்டளை தவறுகின்றது; "திருமாலைபாடுஞ்சீர்த் தொண்டர்பொடியெம்" என்று பாடமிருந்திருக்கும் ; காலகதியில் மாறுட்டிருக்குமென்பர் பெரியோர்.

---

**காவலிற் புலனைவைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து*
நாவலிட் டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள்மீதே *
மூவுல குண்டுமிழ்ந்த முதல்வநின் னாமங்கற்ற *
ஆவலிப் புடைமைகண்டாய் அரங்கமா நகருளானே. 2

| | | | |
|---|---|---|---|
| மூ உலகு | எல்லா வுலகங்களையும் | புலனை | பஞ்சேந்திரியங்களையும் |
| உண்டு | (ப்ரளய காலத்திலே திருவயிற்றிலே வைத்து | காவலில் வைத்து | (வெளியில் ஓடாதபடி) சிறையில் அடைத்து |
| உமிழ்ந்த | (பிரளயம் நீங்கின பிறகு அவற்றை) வெளிப்படுத்திய | கலிதன்னை | பாபராசியை |
| | | கடக்க பாய்ந்து | வெகுதூரம் உதறித்தள்ளி |
| முதல்வ | ஜகத்காரணபூதனே ! | நாவலிட்டு | ஜயகோஷம் செய்து |
| அரங்கமாநகருளானே !—; | | | |
| நின் நாமம் கற்ற | உனது திருநாமத்தைக் கற்றதனாலுண்டான | நமன் தமர் தலைகள் மீதே | யமபடர்களின் தலைமேல் |
| ஆவலிப் புடைமை | செருக்கினாலே | உழி தருகின்றோம் | அடியிட்டுத் திரிகின்றோம். |
| | | (கண்டாய்—முன்னிலை அசைச்சொல்) | |

***—அடியார்களைக் காத்தருளும்திறம் நன்கு விளங்கும்படி கோயிலில் கண் வளர்ந்தருளும் பெருமானே!, உன் திருநாமத்தை நான் கற்றதனால் பெற்றபேற்றின் கனத்தைக் கண்டாயே! அஹஹ! என்னைத் தீவழியில் செலுத்தி உனக்கு விலக்காக்கின பஞ்சேந்திரியங்களை அவற்றின் ஸ்வாதந்திரியம் ஒன்றும் ஓங்கவொண்ணாதபடி அமுக்கி, இத்தனை நாளாக இவற்றை அமுக்கியாளமுடியாதபடி தடையாய்க்கிடந்த பாபங்களையும் உதறிவிட்டு, இதனால் நரக பாதையில் நின்றும் பயம் தவிர்ந்து யமகிங்கரர்களின் தலைமேல்அடியிட்டுத் திரியாநின்றேன். எனது செருக்கு எப்படிப்பட்டது! பாராய் என்கிறார்.

நாவலீடுதல்—தோற்றவர் முன்னே ஜயித்தவர்கள் தமது வெற்றியைக் கூறிக் கோஷித்தல். ''உழிதருகின்றேன்'' என்று ஒருமையாகக் கூருமல் பன்மையாகக் கூற்பவித்தால் ஒரு புண்ணியசாலியின் ஸம்பந்தத்தாலே பல பாபிகளும் பேறு பெறுவர்களென்னும் சாஸ்த்ரார்த்தம் வெளியாம்: அதாவது-நாஞெருவன் நின் நாமம் கற்க, அந்த மாஹாத்மியத்தால் என்னைச் சேர்ந்தவர்களும் நமன்றமர் தலைகளில் அடியிடும்படியானமையுண்டாயிற்றென்கை. வாலியின் பெயர் செவிப் பட்ட வளவில்தானே அஞ்சிச் சுரமடைந்துகிடந்த ஸுக்ரீவ மஹாராஜர் இராம பிரானை அண்டைகொண்ட பலத்தாலே கிஷ்கிந்தாத்வாரத்திலே சென்று அறை கூவினுப்போல இவரும் கீழெல்லாம் நமன்தமர்க்கு அஞ்சிக்கிடந்து இன்று திரு நாமத்தை அண்டைகொண்டபலத்தாலே அவர்கள் தலைகளிலே ஸபரிகரராய் அடியிட்டுத் துவைக்கிருர். ... .... .... .... (1)

**பச்சைமா மலைபோல்மேனி பவளவாய் கமலச்செங்கண் *
அச்சுதாவமரரேறே ஆயர்தம் கொழுந்தேயென்னும் *
இச்சுவை தவிரயான்போய் இந்திர லோகமாளும் *
அச்சுவை பெறினும்வேண்டேன் அரங்கமா நகருளானே. 2

அரங்கமா நகருளானே !—;

| | | | |
|---|---|---|---|
| பச்சை மா மலை போல் மேனி | பசுமை நிறமுள்ள பெரியமலை போன்ற திருமேனியையும் | என்னும் | என்று (எனது) வாயினுற் சொல்லுவதனுல் (எனக்கு) உண்டாகின்ற |
| பவளம் வாய் | பவளம் போன்ற சிவந்த திரு வாயையும் | இச் சுவை தவிர | இந்த அநுபவருசியை விட்டு விடும்படி |
| செம் கமலம் கண் | செந்தாமரை மலர் போன்ற திருக்கண்களையுமுடைய | யான் போய் | யான் (இவ்வுலகத்தினின்றும் நீங்கிப் பரமபதத்திற்குச்) சென்று |
| அச்சுதா | அச்சுதனே ! | இந்திர லோகம் ஆளும் | (அந்தப்) பரமபதத்தை ஆளு கின்ற |
| அமரர் ஏறே | நித்யஸூரிகளுக்குத் தலைவனே ! | அச் சுவை பெறினும் | அந்த அநுபவருசியை அடைவதாயிருந்தாலும் |
| ஆயர் தம் கொழுந்தே | இடையர் குலத்தில் தோன்றிய இளங்குமரனே, | வேண்டேன் | (அதனை) விரும்பமாட்டேன். |

***—இப்படித் திருநாமங் கற்ற ஆழ்வாரை நோக்கிப் பெரியபெருமாள் "ஆழ்வீர்! நம் பேர் சொன்னவர்களுக்கு நாம்கொடுப்பதொரு நாடு உண்டு; அத்தைத் தருகிரேம், கொள்ளும்" என்ன; இவ்வுலகத்திலிருந்தபடியே திருநாமத்தைச் சொல்லி அதனுல் பெறக்கூடிய இனிமைக்கு, பரமபதத்திற்போய் அநுபவிக்கின்ற அந்த அநுபவத்தினுல் தோன்றும் இனிமையும் ஈடாகாது; அது எனக்கு வேண்டா என்கிருர். "ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டிதஃ, பக்திச்ச நியதா வீர! பாவோ நாந்யத்ர கச்சதி." என்ற திருவடியின் வார்த்தையை நினைப்பது. பசுமை, நீலம் கருமை என்ற நிறங்களை அபேதமாகக் கூறுவது கவிமரபாதலால் எம்பெருமானது காளமேகத் திருவுவருத்திற்குப் பச்சைமலையை உவமைகூறினர். (2)

வேதநூல் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும் *
பாதியு முறங்கிப்போகும் நின்றவிப் பதினையாண்டு *
பேதைபாலக னதாகும் பிணிபசி மூப்புத்துன்பம் *
ஆதலால் பிறவிவேண்டேன் அரங்கமா நகருளானே. 3

அரங்கமாநகருளானே !—;

| | |
|---|---|
| மனிசர் தாம் | மநுஷ்யர்கள் |
| வேதம் நூல் | வேத சாஸ்திரத்திற்படியே |
| நூறு பிராயம் புகுவரேலும் | நூறு பிராயம் வாழ்ந்திருப்பர்களேயாஞலும் |
| பாதியும் | அந்த சதாயுஸ்ஸில் பாதியான ஐம்பது வருஷமும் |
| உறங்கி போகும் | உறக்கத்தாலே கழியும் ; |
| நின்ற இப் பதினையாண்டு | மிகுந்த ஐம்பது வருஷம் |
| பேதை | சிசுவாயிருக்கும் அவஸ்தையாயும் |
| பாலகன் | 'சிறுபயல்' என்னும்படியான அவஸ்தையாயும் |
| அது ஆகும் | நெஞ்சால் நினைக்கவும் தகாத யௌவநாவஸ்தையாயும் |
| பிணி | வியாதிமயமாயும் |
| பசி | ஐந்து இந்திரியங்கட்கும் ஐந்து விஷயங்களிலுமுண்டான ஆசையைத் தொலைக்கும் காலமாயும் |
| மூப்பு | கிழத்தனமாயும் |
| துன்பம் | மற்றும் பல துன்பங்களாகவும் கழியும் ; |
| ஆதலால் | இப்படி ஆயுஸ் முழுவதும் அநர்த்த பரம்பரையாய்க் கழிகிறபடியால் |
| பிறவி | ஜன்மத்தை |
| வேண்டேன் | விரும்புகிறேனில்லை. |

* * *—உலகத்தில் மானிடப்பிறவியென்பது ஜன்மாந்தர ஸஹஸ்ரநற்றவங்களாலேபெறக்கூடியது; அதனை வருந்திப்பெற்ருலும்,கர்ப்பத்திலேயும்,பிறந்தவுடனும், நாலுநாள் கழித்தும் சில மாதங்கள் கழித்தும் சில வருடங்கள் கழித்தும் இறக்கக் கூடியவர்கள் பெரும்பான்மையரேயன்றி, வேதசாஸ்திரத்தில் 'சதாயுர்வை புருஷஃ' [மனிதன் நூறு பிராயம் வாழ்பவன்] என்று கூறியுள்ளபடி தீர்க்காயுஸ்ஸாக வாழக்கூடியவர் மிகச் சிறுபான்மையரே ; விதிவசத்தால் சிலர் நூறு பிராயம் புக்கு வாழப்பெற்ருலும் அவரது வாழ்நாள் கழியும் வகையை ஆராய்ந்தால் ஒரு நொடிப் பொழுதாவது நற்போதாகக் கழிய வழியில்லை. ஸூர்யன் அஸ்தமித்து மீண்டும் உதிக்குமளவும் உறங்குவது ஒருநியமமாக வந்துவிட்டபடியால் அஹோராத்ரமாகிய ஒரு தினத்துக்கு உள்ள அறுபது நாழிகையில் முப்பது நாழிகை உறக்கத்தில் கழிகிற கணக்கில் பாதி ஆயுஸ்ஸாகிய ஐம்பது வருஷம் உறக்கத்தால் கழிந்ததாகிறது; மற்ற பாதியான வாழ்நாளில்—தன்னுடைய ஹிதாஹிதம் தாயின் அதீனமாயிருக்கும் சிசுத்வாவஸ்தையாய்ச் சிலகாலமும், எத்தனை தீம்புகள் செய்தாலும் சீறவொண்ணுதபடி செல்வப்பிள்ளை பருவமாய்ச் சிலகாலமும், பிறகு யௌவநம் வந்து புகுந்து விஷயாந்தரங்களிலே மண்டித்திரியும் பருவமாய்ச் சிலகாலமும், இங்ஙனே இந்திரியச் சிறையிலே அகப்பட்டுத் தடுமாருநிற்க இடிவிழுந்தாற்போலே வந்து புகுகிற கிழத்தனமாய்ச் சிலகாலமும், "அத்யுத்கடைஃ புண்யபாபைரிஹைவ பலமச்நுதே' [வரம்பு கடந்த புண்ய பாபங்களின் பலனை இப்பிறவியிலேயே அநுபவிக்கிருன்] என்றபடி யௌவநத்திற் செய்த எல்லை கடந்த குறும்புகட்குப் பலனுக எய்தும் பிணிகளால் வருந்துவதாய்ச் சிலகாலமும், பசியினுல்ஒன்றும் தோன்ருதபடி இடர்ப்படுவதாய்ச் சிலகாலமும், ஒருபக்கத்தில் மகன் செத்தான் என்று கேட்டு அழுவதும், மற்ருெரு பக்கத்தில் மனைவி செத்தாள் என்று கேட்டு அழுவதுமாய் இப்படி ஸம்ஸாரத் துன்பங்களில் ஆழ்ந்து செல்லும் நாளாய்ச் சிலகாலமும் கழிவதால் இத்துன்பங்களை அநுபவிப்பதற்கு இன்னும் சிறிது ஆயுள் கடன் வாங்கிக்கொள்ள வேண்டியதாமேயன்றி உள்ள வாழ்நாளில் ஆத்மாவைப்பற்றிச் சிறிதாகிலுஞ் சிந்திக்கப் பொழுதுகிடைப்பரிது; ஆதலாலிப்பிறவி எனக்கு வேண்டா என்கிருர்.(3)

மொய்த்தவல் வினையுள்நின்று மூன்றெழுத் துடையபேரால் *
கத்திர பந்துமன்றே பராங்கதி கண்டுகொண்டான் *
இத்தனை யடியராஞர்க்கு இரங்கும் நம்மரங்கனுய *
பித்தனைப் பெற்றுமந்தோ பிறவியுள் பிணங்குமாறே. 4

| | | | |
|---|---|---|---|
| மொய்த்த | அடர்ந்து கிடக்கிற | இத்தனை அடியார் ஆனார்க்கு | இவ்வளவு ஆநுகூல்யமுடையவர் கட்கும் |
| வல் வினையுள் நின்ற | கொடிய பாபராசியினுள்ளே கட்டுண்டிருந்தும் | இரங்கும் | அருள் புரிகின்ற |
| மூன்று எழுத்து உடைய பேரால் | கோவிந்த நாமத்தாலே | நம் அரங்கன் ஆய பித்தனை | நம் அழகிய மணவாளனுகிற ஆச்ரித வியாமுக்தனை |
| கத்திரபந்தும் அன்றே | க்ஷத்ரபந்துவுமன்றோ | பெற்றும் | சேஷியாகப் பெற்று வைத்தும் |
| பராங்கதி | சிறந்த பதவியை | பிறவியுள் | ஸம்ஸாரத்திலகப்பட்டு |
| கண்டு கொண்டான் | கண்டு அநுபவிக்கப்பெற்றான்; | பிணங்கும் ஆறே | வருந்துகிற விதம் என்னே ! |
| | | அந்தோ | ஐயோ ! |

* * *—இப்பாட்டு முதல் பதினுன்காம் பாட்டளவும் பகவத் விஷயத்திலே தம்மைப்போல் ஆழங்காற்படாமல் உடலுக்கே கரைந்து நைந்து திரியும் ஸம்ஸாரிகளின் இழவைக்கண்டு பொறுக்கமாட்டாமல் தளர்ந்து ஒரு பக்கத்தில் ஆச்சரியப்பட்டும், மற்றொரு பக்கத்தில் வருத்தப்பட்டும் இன்னொரு பக்கத்தில் வெறுப்புற்றும் இன்னுமொரு பக்கத்தில் நிந்தித்துக்கொண்டும் பேசுகிருர்.

மூன்றெழுத்துடைய பேரால்—இன்ன திருநாமமென்னுதே ரஹஸ்யமாய்ச் சொல்லிற்று—ருசி பிறந்த பின்பு 'அந்தத் திருநாமம் எது?' என்று விரும்பிக் கேட்டால் அப்போதைக்கு உபதேசிப்போமென்றும்.

கத்திரபந்து—பிராமணர்களுள் அதமனை 'ப்ரஹ்மபந்து' என்கிருப்போலே, க்ஷத்ரியர்களுள் அதமனை க்ஷத்ரபந்து என்கிறது. நம்முதலிகள் கோஷ்டியில் 'நாலூரான்' என்ருற்போலே ரிஷிகள் கோஷ்டியில் 'க்ஷத்ரபந்து' என்றால் செவி புதைக்கும்படியாய்த்திருப்பது'' என்பர் பெரியவாச்சான் பிள்ளை. நாலூரானுடைய கொடுமை கூரத்தாழ்வான் சரிதத்தில் காணத்தகும்.

பராங்கதி—பரகதி என்றவாறு; அதாவது பரமபதப்ராப்தி. கோவிந்தநாம ஸங்கீர்த்தனத்தால் பாபராசியில் நின்றும் விடுபட்டவளவேயன்றி, ஐச்வரியம் கைவல்யம் முதலிய க்ஷுத்ர பலங்களைப் பெற்றொழியாதவளவேயுமன்றி நித்ய ஸூரிகளுடைய நித்யாநுபவத்தையன்றோ அவன்றான் பெற்றது. .. (4)

பெண்டிரால் சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு *
உண்டிராக் கிடக்கும்போதும் உடலுக்கே கரைந்துநைந்து *
தண்டுழாய் மாலைமார்பன் தமர்களாய்ப் பாடியாடி *
தொண்டுபூண்டமுதமுண்ணுத் தொழும்பர்சோறுகக்குமாறே. 5

| | | | |
|---|---|---|---|
| பெண்டிரால் | மனைவியரால் | தண் துழாய் மாலை மார்பன் தமர்கள் ஆய் | குளிர்ந்த திருத்துழாய் மாலையைத் திருமார்பிலணிந்த பெருமானது அடியாராய் |
| சுகங்கள் | ஸகல ஸுகங்களையும் | | |
| உய்ப்பான் | அநுபவிப்பதாகக் கருதி | | |
| பெரியது ஓர் இடும்பை | மிகப் பெரிதான துயரங்களை | பாடி | (அவன் குணங்களை வாயாரப்) பாடி |
| பூண்டு | மேற்கொண்டு | ஆடி | (பரவசராய்க்) கூத்தாடி |
| இரா | இராப்பொழுதிலே | தொண்டு பூண்டு | (இவ்வகைகளாலே) சேஷவ்ருத்தியை மேற்கொண்டு |
| உண்டு | புஜித்து | | |
| கிடக்கும் போதும் | படுக்கையிலே சாயும் போதும் | அமுதம் உண்ணு தொழும்பர் | (பகவத் குணநுபவமாகிற) அமுதத்தைப் புஜிக்கப் பெருத நீசர் |
| உடலுக்கே கரைந்து | சரீரத்திற்காகவே கவலைப் பட்டு | | |
| நைந்து | நெஞ்சு உளையப்பெற்று | சோறு உகக்கும் ஆறே | சோற்றை விரும்பும் வகை என்னே ! |

* * *—பெண்களோடு அணைந்து சுகத்தை அநுபவிக்க விரும்புதல் தீயோடு அணைந்து விடாய்தீர நினைப்பதையும், ஆடுகிற பாம்பின் நிழலிலே ஒதுங்கி ஸுகம் பெற நினைப்பதையுமொக்கு மென்பார்—பெண்டிரால் சுகங்களையப்பான் பெரியதோரிடும்பை பூண்டு என்கிருர். ஐயோ! துக்கத்திற்கு ஸாதநமானவற்றையே சுகத்திற்கு ஸாதநமாக நினைப்பதே! இப்படியுமொரு மயக்கமுண்டோ! பிழைக்கவேணுமென்று நினைப்பாரும் விஷத்தையுண்பரோ! என்றவாறு. .... .... (5)

மறஞ்சுவர் மதிளெடுத்து மறுமைக்கே வெறுமைபூண்டு *
புறஞ்சுவ ரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர் *
அறஞ்சுவ ராகிநின்ற அரங்கனுர்க் காட்செய்யாதே *
புறஞ்சுவர் கோலஞ்செய்து புள்கவ்வக் கிடக்கின்றீரே. 6

| | | | |
|---|---|---|---|
| மறம் சுவர் | கொடுமையாகிற சுவரை | அறம் சுவர் ஆகிநின்ற | தர்மமே ப்ரக்ருதியாக நிற்கிற |
| மதிள் எடுத்து | மதிளாக எழுப்பியும், | அரங்கனுர்க்கு | அழகிய மணவாளனுக்கு |
| மறுமைக்கு | ஆமுஷ்மிக பலத்திற்கு | ஆள் செய்யாதே | அடிமை செய்யாமல் |
| வெறுமை பூண்டு | ஏழ்மையை மேற்கொண்டும் இருக்கிற நீங்கள் | புறம் சுவர் | வெளிச்சுவரான உடம்பை |
| புறம்சுவர் | வெளிச்சுவராய் | கோலம் செய்து | அலங்கரித்து |
| ஓட்டை | அநித்யமான | புள் கவ்வ | (சுடுகாட்டுப்) பறவைகள் கவ்விக்கொள்ளும்படி |
| மாடம் | சரீரமானது | கிடக்கின்றீரே | கிடக்கின்றீர்களே. |
| புரளும் போது | தரையில் விழும் காலத்தை | | |
| அறியமாட்டீர் | அறியமாட்டீர் ; | | |

* * *—விஷயங்கள் அற்பமென்றும் அஸ்திரமென்றும் கீழ்க்கூறிய ஆழ்வாரை நோக்கிச் சிலர் "விஷயங்களுக்குஅல்பாஸ்திரத்வம் முதலிய பலதோஷங்களுள்ளனவாயினும் அவற்றை நாங்கள் விடவேணுமென்ற நியதி இல்லை ; ஒரு விஷயத்தில் பூர்ணமான அனுபவத்தைப் பெருதொழிவோமாயினும் விஷயங்கள் பலஉளவாகையால் ஒன்றில் இல்லாத நன்மையை வேருென்றிலே கூட்டிக்கொண்டு அனுபவிக்கிருேம் போம்" என்று சொல்ல, "அப்படியே யானுலும் அந்த விஷயங்களை அநுபவிக்கக்கூடிய நபர் ஸ்திரமாயிருக்கவேணுமே ; அவ்விஷயங்களைப்போலவே போக்தாக்களான நீங்களும் அஸ்திரர்கிடீர்" என்கிருர் இப்பாட்டால். ... (6)

புலையற மாகிநின்ற புத்தொடு சமணமெல்லாம் *
கலையறக் கற்றமாந்தர் காண்பரோ கேட்பரோதாம் *
தலையறப் புண்டும்சாகேன் சத்தியங் காண்மினைய *
சிலையினு லிலங்கை செற்ற தேவனே தேவனுவான். 7

| | | | |
|---|---|---|---|
| கலை | சாஸ்திரங்களை | தலை அறுப் புண்டும் | என் தலையானது அறுக்கப் பட்டாலும் |
| அற கற்ற மாந்தர்தாம் | நன்ருக ஓதின மனிதர் | சாகேன் | நான் சாகமாட்டேன் ; |
| புலை அறம் ஆகி நின்ற | நீச தருமமாயிராநின்ற | சத்தியம் | இது சத்தியம் ; |
| | | ஐயா | ஸ்வாமிகளே ! |
| புத்தொடு சமணம் எல்லாம் | பௌத்தமதம் க்ஷபணமதம் முதலிய எல்லா மதங்களையும் | காண்மின் | (ப்ரத்யக்ஷமாகக் காட்டுகிறேன்) பாருங்கள் ; |
| காண்பரோ | நெஞ்சாலேதான் ஆராய்வார்களோ ? | சிலையினுல் | வில்லாலே |
| | | இலங்கை செற்ற | இலங்கையை நாசஞ்செய்த |
| | | தேவனே | எம்பெருமானே |
| கேட்பரோ | காதுகொடுத்துத்தான் கேட்பார்களோ ? (அது நிற்க) | தேவன் ஆவான் | ஸர்வேச்வரனெனப் படுவன். |

* * *—'தொண்டுபூண்டமுதமுண்ணுத்தொழும்பர்' என்றும், "புள் கவ்வக் கிடக்கின்றீரே" என்றும் எங்களை இகழ்ந்துரைப்பதிற் பயனென்? ஸம்ஸாரத்தின் இயல்பு இப்படியிராநின்றது; அன்றியும் ''தொண்டுபூண்டு அமுதமுண்போமென்று பார்த்தாலும் எந்தத் தேவனை வணங்கி வழிபடுவதென்று தெரியவில்லை; நாங்கள் பரதேவதா நிச்சயம்பண்ண மாட்டாமையாலே ஸம்ஸாரத்திலே ஆழ்கிருேம்; எங்கள் மீது குற்றமென்?'' என்று சில ஸம்ஸாரிகள் கூற, அவர்களைத் தெளிவிக்க விரும்பிய ஆழ்வார், தேவதா நிஷ்கர்ஷம் பண்ணித்தருகிருரிப்பாட்டில். ... (7)

**வெறுப்பொடு சமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள் * நின்பால்**
**பொறுப்பரியனகள்பேசில் போவதே நோயதாகி ***
**குறிப்பெனக் கடையுமாகில் கூடுமேல் தலையையாங்கே ***
**அறுப்பதே கருமங்கண்டாய் அரங்கமா நகருளானே.** 8

அரங்கமா நகருளானே !

| | | | |
|---|---|---|---|
| வெறுப்பொடு | (பகவத் விஷயத்தைக் கேட்க பொருத) வெறுப்போடு கூடிய | போவது | முடிந்து போவது (உத்தமம், அங்ஙனன்றியே) |
| சமணர் | க்ஷமணர்களும் | எனக்கு | (பகவத் விரோதிகளின் ஸத்தையையும் பொருத) எனக்கு |
| முண்டர் | சைவர்களும் | குறிப்பு அடையும் ஆகில் | இலக்கு வாய்க்குமாகில் (அதற்குமேல்) |
| விதி இல் | பாக்கியஹீனரான | கூடுமேல் | (எனக்கு சக்தியும்) கூடுமாகில் |
| சாக்கியர்கள் | பௌத்தர்களும் | ஆங்கே | உன்னை நிந்தித்த அவ்விடத்திலேயே |
| நின்பால் | உன் விஷயத்திலே | தலையை அறுப்பதே | அவன் தலையை அறுத்துத் தள்ளுகையே |
| பொறுப்பு அரியனகள் | பொறுக்கமுடியாத சில வார்த்தைகளை | கருமம் கண்டாய் | செய்யத் தக்கதுகாண். |
| பேசில் | சொல்லுவார்களாகில் | | |
| அதுவே நோய் ஆகி | அந்த நிந்தைகளைக் கேட்டதே வியாதியாய் | | |

* * *—வெறுப்பொடு—ஒரு காரணத்தை முன்னிட்டன்றியே நிஷ்காரணமாக எம்பெருமானுடைய பெருமை என்ருல் சிவீலென்று திரஸ்கரிக்கையாகிற வெறுப்போடுகூடிய புறச்சமயிகள், ஸாத்விகர் காது கொடுத்துக் கேட்கப்பொருத உன் விஷயமான தூஷணங்களைப் பேசும்போது அப்பேச்சுக்கள் ஒரு ஸாத்விகன் காதில் விழுந்தால், அவன்ருன் மெய்யே ஸாத்விகனுகில் அந்த க்ஷணத்திலேயே தன்னுடையே உயிர் துறக்கவேணும் என்கிருர்—முன்னிரண்டடிகளால். உயிர் துறப்பதற்கு நோய் முதலிய சில வியாஜங்கள் நேரவேண்டுமே என்று சிலர் நினைக்கக்கூடுமென்றெண்ணி "போவதே நோயதாகி" என்கிருர். பகவந்நிந்தையைக் கேட்பதற்கு மேற்பட்ட நோய்கூட உலகத்திலுண்டோ? என்பது கருத்து. விஷ்ணுத்வேஷிகள் சொல்லுகிற தூஷணங்களை அநுவதிக்கவேண்டுமாகுல் அவற்றைத் தாம் முன்னம் நெஞ்சால் நினைத்தாகவேண்டு மாதலால் அங்ஙன் நினைப்பதையும் கொடிய பாவமாகக்கருதி ''பொறுப்பரியனகள்'' என்று ஸமுதாயமாகச் சொல்லுகிருர். பின்னடிகளால் இவ்வாழ்வாருடைய வீரவைணவம் விளங்கும்.

**மற்றுமோர் தெய்வமுண்டே மதியிலா மானிடங்காள் ***
**உற்றபோ தன்றிநீங்கள் ஒருவனென் றுணரமாட்டீர் ***
**அற்றமே லொன்றறியீர் அவனல்லால் தெய்வமில்லை ***
**கற்றினம் மேய்த்தவெந்தை கழலிணை பணிமினீரே.** 9

| | |
|---|---|
| மதி இலா மானிடங்காள் | தத்துவஞானமில்லாத மனிதர்களே! |
| மற்றும் | (நான் சொல்லுகிறவனைத்) தவிரவும் |
| ஓர் தெய்வம் | (சரணமாக அடையக் கூடிய வேறு) ஒரு தெய்வம் |
| உண்டே | உண்டோ? [இல்லை] |
| நீங்கள் | நீங்கள் |
| உற்ற போது அன்றி | (சரணமடைந்த அந்த க்ஷுத்ர தேவர்கட்கு) ஒரு ஆபத்து நேர்ந்த காலத்தி லல்லாமல் (மற்றைக்காலத் தில், |
| ஒருவன் என்று | (நான் சொல்லுகிற இவன்) ஒருவனே கடவுள் என்பதை |
| உணரமாட்டீர் | அறியமாட்டீர்கள்; |

(நீங்கள் இப்படி அறியாமைக்குக் காரண மென்னவெனில்; வேதத்திலே)

| | |
|---|---|
| மேல் | (பதப்பொருளுக்கு) மேற்பட்ட |
| அற்றம் | மறைபொருளை (தாற்பரி யத்தை) |
| ஒன்று அறியீர் | சிறிதும் அறியமாட்டீர்கள்; |

(இனி முடிவுப்பொருளை நீங்கள் உணருமாறு கூறுவேன்;)

| | |
|---|---|
| அவன் அல்லால் | அந்த எம்பெருமான் தவிர |
| தெய்வம் இல்லை | (சரணமடையக்கூடிய) தெய் வம் (வேறொன்று) இல்லை; (ஆகையால்) |
| கன்று இனம் மேய்த்த எந்தை | கன்றுகளின் கூட்டங்களை (மிக்க உகப்போடு) மேய்த்து வந்த எமது ஸ்வாமியான ஸ்ரீகிருஷ்ணனுடைய |
| கழல் இணை | இரண்டு திருவடிகளையும் |
| நீர் பணிமின் | நீங்கள் சரணமாகப் பற்றுங் கள். |

* * *—பலதேவரையும்பற்றிக் கூறுகிற வேதத்தின் உட்பொருளை நுட்பமாக ஆராய்ந்து அறியுந்திறமை யில்லாமையால் நீங்கள் தேவதாந்தரங்களைப் பற்று கின்றீர்கள்: 'ஒரு குறையும் வாராமல் உன்னைப் பாதுகாக்கிறேன' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி பாணாஸுரனது வாசலிலே பரிவாரத்தோடு பாதுகாவலாயிருந்த சிவன் அந்த வாணாசுரனை எதிர்த்துவந்த ஸ்ரீ கிருஷ்ணனோடு போர் செய்யமாட்டாமல் தோற்று ஓடினபோது அந்தச் சிவனுடைய வலியின்மையை அந்த வாணன் கண் டறிந்ததுபோல, நீங்களும் சரணமாகப் பற்றியிருக்கிற தேவதாந்தரங்களுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால்தான் அத்தெய்வங்களின் பலஹீநத்வத்தைக் கண் டறிவீர்கள்; நீங்கள் இப்படி பரமாத்மாவைத் தவிர்த்து இதர தேவதைகளைப் பற்று தற்குக் காரணம் நுமக்குப் பகுத்தறிவு இல்லாமையே. உண்மையில் ஸ்ரீ கிருஷ்ண னைத்தவிர வேறு தெய்வமில்லை. ஆகையால் நீங்கள் அந்த ஸ்ரீகிருஷ்ணபரமாத்மா வையே சரணமாகப் பற்றுங்களென்று உபதேசிக்கின்றனரென்க. ... (9)

நாட்டினன் தெய்வமெங்கும் நல்லதோ ரருள்தன்னாலே *
காட்டினன் திருவரங்கம் உய்பவர்க் குய்யும்வண்ணம் *
கேட்டிரே நம்பிமீர்காள் கெருடவாகனனும் நிற்க *
சேட்டைதன் மடியகத்துச் செல்வம்பார்த் திருக்கின்றீரே. 10

| | |
|---|---|
| எங்கும் | எல்லா விடங்களிலும் |
| தெய்வம் | (அம்மன் பிடாரி முதலான தாமஸ) தேவதைகளை |
| நாட்டினன் | (ராஜஸர்க்கும் தாமஸர்க்கும் ஆச்ரயிக்கலாம்படி எம்பெரு மான்) நிலைநிறுத்தி யிருக்கி றான்: |
| உய்பவர்க்கு | உஜ்ஜீவிக்க விரும்புமவர் கட்கு |
| உய்யும் வண்ணம் | உஜ்ஜீவிக்கலாம்படி |
| நல்லது ஓர் அருள் தன்னாலே | தனது ஒப்பற்றதொரு க்ருபை யினால் |
| திரு அரங்கம் | அரங்கமாநகரை |
| காட்டினன் | காண்பித்தருளினான்; |
| நம்பிமீர்காள் | 'நமக்கு ஒன்றாலும் குறை யில்லை' என்று நினைத்திருப் பவர்களே! |
| கேட்டிரே | (நான் சொல்வதைக்) கேட் டீர்களா? |
| கெருட வாகனன் நிற்கவும் | கருடனை வாஹனமாகவுடைய பெருமான் விளங்கா நிற்கச் செய்தேயும் |

(தேவதாந்தரங்களைப் பற்றுகிற நீங்கள்)

| | |
|---|---|
| சேட்டை தன் மடியகத்து | மூதேவி யிடத்தினின்றும் |
| செல்வம் பார்த்து இருக்கின்றீர் | ஐச்வரியம்பெற நினைத்திருக் கிறீர்கள் போலும். |

* * *—நீர் சொல்லுகிற எம்பெருமானொழிய வேறொரு தேவதையும் புகலன்றாகில், உலகில் பல பல தேவதைகள் அவ்வவர்களால் கொண்டாடப்படுவதற்கும், அக்கொண்டாட்டத்திற்கு ஏற்ப அத்தேவதைகள் பயன் அளித்து வருவதற்கும் என்ன காரணம்? பயன் கொடுக்கிற சக்திவாய்ந்த தேவதைகளைப் பற்றுவதால் என்ன பாதகம் விளையும்? என்று சில மாந்தர் கேட்க; அவர்களுக்கு விடையளிக்கிற பாட்டு இது. சேட்டை—மூத்தவள் என்னும் பொருளதான 'ஜ்யேஷ்டா' என்ற வ'ட சொல் விகாரம். மூதேவியென்பவள் பிராட்டிக்கு முற்பிறந்தவள். தாரித்திரியம், துரத்ருஷ்டம், உறக்கம், சோம்பல், மூடத்தனம் முதலியவை உள்ளவளை 'மூதேவி' என்று நிந்திப்பது ப்ரஸித்தம். ஆகையாலே மூதேவியென்பவள் ஸகல அச்லீலங்களுக்கும் மூலஸ்தாநம். ... ... ... ... (10)

ஒருவில்லாலோங்குமுந்நீர் அடைத்துலகங்களுய்ய *
செருவிலேயரக்கர்கோனைச் செற்றநம்சேவகனார் *
மருவியபெரியகோயில் மதிள்திருவரங்கமென்னா *
கருவிலே திருவிலாதீர் காலத்தைக்கழிக்கின்றீரே. 11

| | | | |
|---|---|---|---|
| ஒரு வில்லால் | சார்ங்கம் என்கிற ஒரு வில்லாலே, | பெரியகோயில் | பெருமை தங்கிய கோயிலாவது |
| ஓங்கு முந்நீர் அடைத்து | கொந்தளிக்கிற கடலை அணை கட்டி | மதிள் திரு அரங்கம் | ஸப்தப்ராகாரங்கள் சூழ்ந்த ஸ்ரீ ரங்கக்ஷேத்ரம் |
| உலகங்கள் உய்ய | லோகமெல்லாம் வாழும்படி | என்னா | என்று சொல்லமாட்டாத |
| செருவிலே | போர்க்களத்திலே | கருவிலே திரு இலாதீர் | கர்ப்ப நிர்ப்பாக்யர்களே! |
| அரக்கர் கோனை | இராவணனை | | |
| செற்ற | முடித்தருளின | | |
| நம் சேவகனார் | நமக்குத் தலைவரும் மஹாவீரருமான பெருமாள் | காலத்தை | (பகவதநுபவத்துக்காகக் கண்ட) காலத்தை |
| மருவிய | பொருந்தி வாழ்வதற்'கு இடமான | கழிக்கின்றீர் | பாழே போக்குகிறீர்களே! |

* * *—இராமபிரானும் கண்ணபிரானுமாய் அவதரித்த பெருமான்றானே திருவரங்கம் பெரியகோயிலில் கண்வளர்ந்தருளுகிறான்; ஜாயமாநகால கடாக்ஷமில்லாமையாலன்றோ நீங்கள் இழக்கிறது! என்று க்ஷேபித்துக்கூறுவது இப்பாட்டு. .... (11)

நமனும்முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க *
நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பி *
அவனதூரரங்கமென்னாது அயர்த்துவீழ்ந்தளியமாந்தர் *
கவலையுள்படுகின்றாரென்று அதனுக்கேகவல்கின்றேனே. 12

| | | | |
|---|---|---|---|
| நமனும் | யமதர்மராஜாவும் | நரகமே | அந்த நரகந்தானே |
| முற்கலனும் | முத்கலபகவானும் ஒருவர்க்கொருவர் | சுவர்க்கம் ஆகும் | ஸ்வர்க்க லோகமாய்விட்டது என்று சொல்லுதற்கீடான மேன்மைவாய்ந்த |
| பேச | வார்த்தையாடிக்கொண்டிருக்க | | |
| நரகில் நின்றார்கள் கேட்க | அந்த வார்த்தை நரகத்திலே பாப பலன்களை அனுபவிக்கிற பாவிகளின் காதில் பட்டவளவிலே | நாமங்கள் உடைய | திருநாமங்களையுடைய |
| | | நம்பி | பரிபூரண எம்பெருமானுடைய |
| | | அவனது ஊர் | திவ்யதேசம் |

| | |
|---|---|
| அரங்கம் என்னாது | திருவரங்கமாகும் என்று சொல்லாமல் |
| அளிய மாந்தர் | அருமந்த மனுஷ்யர்கள் |
| அயர்த்து | (ஸ்வரூபத்தை) மறந்து |
| வீழ்ந்து | (விஷயாந்தரப் படுகுழியிலே) விழுந்து |
| கவலையுள் படுகின்ருர் என்று | துக்கத்திலே அகப்படுகிருர்களே யென்று |
| அதனுக்கே | அதற்காகவே |
| கவல்கின்றேன் | நான் கவலைப்படா நின்றேன். |

* * *—திருநாமத்தின் பெருமையை நான் அறியாதிருந்தேனுகில் ஸம்ஸாரிகளைப்பற்றிக் கவலைப்படமாட்டேன் ; மநுஷ்யஜந்மம் எளிதிற் பெறக்கூடுமாயின் நான் கவலைப்படமாட்டேன் ; இவர்கள் உஜ்ஜீவநத்திற்காகச் செய்யவேண்டிய காரியம் மிகப்பெரியதாயின் கவலைப்படமாட்டேன். திருநாமங்களின் மேன்மையோ சொல்லுந்தரமல்ல ; பெறுதற்கு அரிதான மானிடஜந்மத்தையோ இவர்கள் பெற்றிருக்கிருர்கள்; இவர்கள் செய்யவேண்டிய காரியமோ மிக அற்பமானது—'எம்பெருமான் ஊர் திருவரங்கம்' என்றிவ்வளவே சொல்லவேண்டுமத்தனை. இங்ஙனிருக்கவும் இவர்கள் விஷயாந்தரப் படுகுழியிலே தலைகீழாக விழுந்து வருந்துவர்களாகில் நான் எங்ஙனே கவலைப்படாதிருக்கமுடியும்? இவர்கள் சிறிது திருந்தினராகில் என் அநுபவத்திற்கு எவ்வளவோ துணையாகுமே! என்கிருர். முத்கலோபாக்கியாநம் ஸ்ரீவிஷ்ணுதர்மத்திலே தொண்ணூருவது அத்தியாயத்திற் கூறப்பட்டுள்ளது (12)

எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம் *
வெறிகொள்பூந்துளபமாலை விண்ணவர்கோனையேத்த *
அறிவிலாமனிசரெல்லாம் அரங்கமென்றழைப்பராகில் *
பொறியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே. 13

| | |
|---|---|
| எறியும் நீர் வெறி கொள் வேலை | அலைகள் வீசுகின்ற தண்ணீரையும் (புலாவின்) நாற்றத்தையும் கொண்டிருக்கிற கடலினுற் சூழப்பட்ட |
| மா நிலத்து | பெரிய இந்தப் பூலோகத்திலுள்ள |
| உயிர்கள் எல்லாம் | ஆத்மாக்கள் யாவும் |
| வெறிகொள் பூ துளபம் மாலை | நல்ல பரிமளமுடைய அழகிய திருத்துழாய் மாலையை அணிந்துள்ள |
| விண்ணவர் கோனை | தேவாதி தேவனுன திருமாலை |
| ஏத்த | தோத்திரம் பண்ணுவதற்காகவே (ஏற்பட்டிருக்கின்றன;) |
| | (அவ்வாறு துதிப்பது அற்பஞான முடையார்க்கு முடியாவிடினும்) |
| அறிவு இலா மனிசர் எல்லாம் | தத்வஜ்ஞானம் நிரம்பாத அந்த மனிதர் யாவரும் |
| அரங்கம் என்று அழைப்பர் ஆகில் | (அபுத்தி பூர்வகமாகவாவது) ஸ்ரீரங்கமென்று சொல்லுவர்களானுல் |
| | (அம்மாத்திரத்தாலேயே) |
| பொறியின்வாழ் | பஞ்சேந்திரியங்களின் வசப்பட்டு வாழ்கின்ற |
| நரகம் எல்லாம் | (ஞானிகளுக்கு நரகமாகிய) இப்பிரபஞ்சம் முழுதும் |
| புல் எழுந்து | புல் முளைத்து |
| ஒழியும் அன்றே | பாழாய்ப்போய்விடுமன்ருே. |

வண்டினமுரலும்சோலை மயிலினமாலும்சோலை *
கொண்டல்மீதணவும்சோலை குயிலினம்கூவும்சோலை *
அண்டர்கோனமரும்சோலை அணிதிருவரங்கமென்னு *
மிண்டர்பாய்ந்துண்ணும்சோற்றை விலக்கிநாய்க்கிடுமினீரே. 14

| | | | |
|---|---|---|---|
| வண்டு இனம் முரலும் சோலை | வண்டுகளின் கூட்டங்களானவை கானம் செய்யா நிற்கப்பெற்ற சோலைகளையுடையதும், | அண்டர்கோன் அமரும் சோலை | தேவர்கட்குத் தலைவனை ஸ்ரீரங்கநாதன் நித்யவாஸம் பண்ணப்பெற்ற சோலைகளை |
| மயில் இனம் ஆலும் சோலை | மயில்களின் கூட்டங்களானவை கூத்தாடாநிற்கப் பெற்ற சோலைகளையுடையதும் | அணி | ஆபரணமாக வுடையதுமான |
| | | திரு அரங்கம் என்னு | ஸ்ரீரங்கம் என்று; சொல்லமாட்டாத |
| கொண்டல் மீது அணவும் சோலை | மேகங்களானவை மேலே வந்து படியா நிற்கப்பெற்ற சோலைகளையுடையதும் | மிண்டர் | நன்றியறிவில்லாதமூர்க்கர்கள் |
| | | பாய்ந்து உண்ணும் சோற்றை | மேல்விழுந்து உண்ணுகிற சோற்றை |
| குயில் இனம் கூவும் சோலை | குயில்களின் கூட்டங்கள் ஒன்றையொன்று அழையாநிற்கப்பெற்ற சோலைகளையுடையதும், | விலக்கி | (அவர்கள் உண்ணக்கூடாதபடி) தடுத்து |
| | | நீர் நாய்க்கு இடுமின் | நீங்கள் (அந்தச்சோற்றை) நாய்க்கு இடுங்கள். |

***—இதுவரை பகவத்விஷய விரோதிகளான பாவிகளை நினைத்ததற்கும் அவர்களோடு ஸம்பாஷணை செய்ததற்கும் ப்ராயச்சித்தமாக "வண்டினமுரலுஞ்சோலை" இத்யாதியைப் பரமபோக்யமாகத் தாம் அநுஸந்திக்கச் செய்தேயும், மீண்டும் "திருவரங்கமென்னுமிண்டர்" என்று அப்பாவிகளையே நினைக்கிருர். அவர்களையொழிய இவர்க்கு ஒரு க்ஷணமும் செல்லாதுபோலே. ஸம்ஸாரத்திலேயே நெடுநாள் ஊன்றினவன் *கொண்ட பெண்டிர் மக்களுற்றுர் சுற்றத்தவரோடுண்டான பற்றை அறுத்துக்கொண்டு பகவத்விஷய சிந்தையினுலேயே போதுபோக்க வேணுமென்று பெருமுயற்சி செய்தாலும் பழையதான வாஸனையின் கனத்தினுல் அந்த ஸம்ஸாரப் பற்றை விரைவில் அறுத்துக்கொள்ள முடியாமல் "அங்குற்றேனல்லே னிங்குற்றேனல்லேன்" என்ருற்போலே இருகரையனுய்த் தடுமாறுமாபோலே, பராங்முகரையும் சீர்திருத்தி மங்களாசாஸநத்துக்கு ஆளாக்கிக் கொள்வதற்காகப் பாடுபடுகையாகிற ஒரு விலக்ஷண ஸம்ஸாரத்திலே நெடுநாளாக ஊன்றின இவ்வாழ்வார், மநோரதம் நிறைவேறப்பெருத வருத்தத்தினுல் அப்பாவிகளின் பற்றை அறுத்துக்கொள்ள வேணுமென்று பெருக்க முயன்ருலும் அஃது இவர்க்கு விரைவில் கைகூடுகிறதில்லை. மங்களாசஸனத்திற்கு ஆள்சேர்க்கப் படுகிற பாட்டின் உறைப்பு என்னே! ... (14)

மெய்யர்க்கேமெய்யனுகும் விதியிலாவென்னைப்போல *
பொய்யர்க்கேபொய்யனுகும் புட்கொடியுடையகோமான் *
உய்யப்போமுணர்வினுர்கட்கு ஒருவனென்றுணர்ந்தபின்னை *
ஐயப்பாடறுத்துத்தோன்றும் அழகனுரரங்கமன்றே. 15

| | | | |
|---|---|---|---|
| புள் கொடி உடைய கோமான் | கருடனைக் கொடியாகவுடைய ஸ்வாமியான திருமால் | மெய்யன் ஆகும் | (தன் ஸ்வரூபத்தை) உள்ளபடி காட்டித்தருவன்; |
| விதி இலா என்னைப்போல | (நெடுங்காலம் எம்பெருமானது அருளைப் பெறுதற்கு ஏற்ற) நல்வினை இல்லாதிருந்த என்னைப்போல | பொய்யர்க்கு | (எம்பெருமான் விஷயத்தில்) அத்வேஷத்தைப் பெற்றிராதவர்க்கு [எம்பெருமான் விஷயத்திலே பகைமை கொண்டிருப்பவர்க்கு] |
| மெய்யர்க்கு | அத்வேஷமாத்திரமுடையவர்க்கு | | |

| | | | |
|---|---|---|---|
| பொய்யன் ஆகும் | (தனது ஸ்வரூபத்தைக் காட்டித் தாராமல் தானும்) பொய்யனுயிருப்பன் ; | ஐயப்பாடு அறுத்து | பின்னும் வரக்கூடிய சந்தே கங்களைப் போக்கி |
| உய்ய போம் உணர்வினர் கட்கு | உஜ்ஜீவிப்பதற்கு உரிய நல்லறிவு உடையவர்க்கு [கீழ்க் கூறிய மெய்யர்க்கு] | தோன்றும் | ஸேவை ஸாதிக்கிற |
| | | அழகன் | அழகையுடைய அந்த எம் பெருமானது |
| | | ஊர் | இருப்பிடம் |
| ஒருவன் என்று உணர்ந்த பின்னை | 'கடவுள் ஒருவன் உண்டு' என்று நல்லறிவு பிறந்த பின்பு | அரங்கம் | திருவரங்கமாகும்; |

(அன்றே—ஈற்றசை; தேற்றமுமாம்)

* * *—தம் உபதேசத்தை மதியாத ஸம்ஸாரிகளைக் குறித்து ஹிதம் கூறுவதில் நின்றும் கால்வாங்கின ஆழ்வார்—'இந்த ஸம்ஸாரிகளுக்குள்ளே ஒருவனை என்னைப் பரோபதேசம் பண்ணவல்லேனும்படி எம்பெருமான் தன்விஷயத்தில் படிப்படியாகப் பரமபக்தியளவான ஊற்றத்தைப் பிறப்பித்து இப்படி நிர்ஹேதுக மாகக் கடாக்ஷித்தவாறு என்னே!' என்று தமது நன்றியறிவு தோன்றக் கொண்டாடு கிருர்; இதுவன்றே அறிவுடையாருடைய செயல். ... ... (15)

சூதனுய்க்கள்வனுகித் தூர்த்தரோடிசைந்தகாலம் *
மாதரார்கயற்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை *
போதரேயென்றுசொல்லிப புந்தியிற்புகுந்து * தன்பால்
ஆதரம்பெருகவைத்த அழகனூரரங்கமன்றே. 16

| | | | |
|---|---|---|---|
| சூதன் ஆய் | (முதலில்) சூதிலே ஊன்றினவனுய் | அழுந்துவேனை | அழுந்திக்கிடக்கிற என்னை |
| கள்வன் ஆகி | (பிறகு) களவிலே ஆழ்ந்தவனுய் | போதர் என்று சொல்லி | 'அடா! இப்படி வா' என்று அருளிச் செய்து |
| தூர்த்தரோடு இசைந்த காலம் | விஷயாந்தர ப்ரவணரோடே பொருந்தியிருந்த காலத்திலே | புந்தியில் புகுந்து | என் மனதிலேவந்து புகுந்து |
| மாதரார் | ஸ்திரீகளுடைய | தன் பால் ஆதரம் பெருக வைத்த அழகன | தன்னிடத்திலே அன்பை வளரச் செய்த அழகையுடைய எம்பெருமானது |
| கயல் கண் என்னும் | கயல்போன்ற கண்களாகிற | ஊர் | இருப்பிடம் |
| வலையுள் பட்டு | வலையினுள்ளே அகப்பட்டு | அரங்கம் | திருவரங்கமாகும், |

(அன்றே—ஈற்றசை ; தேற்றமுமாம்)

* * *—எம்பெருமானுல் தாம் பெற்றபேற்றை மற்றொருவகையாகப் பேசுகிருர். முன்னிரண்டடிகளால்—தாம் முன்பு நின்ற நிலையைக் கூறி, பின்னடிகளால்—இப்போது பெற்ற நன்மையைக் கூறுகின்றுர்.

இங்கு முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் :—"தன்பால் ஆதரம் பெருக வைத்த" என்ற அடைமொழியை அழகனிடத்திலே அந்வயிக்காமல் அழகிலே அந்வயிக்கவேண்டும் :—எம்பெருமான் ஓர் அழகு உடையவன்; அவ்வழகு எப்படிப்பட்டதென்றுல், சூதனுய்க் கள்வனுகி...... வலையுள்பட்டழுந்துவேனைப் போதரேயென்று சொல்லிப் புந்தியிற் புகுந்து தன்பால் ஆதரம் பெருகவைத்தது—என்றிங்ஙனே உய்த்துணர்க. தன்பால்—எம்பெருமானிடத்தில் என்றபடி. (16)

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை *
இரும்புபோல்வலியநெஞ்சம் இறையிறையுருகும்வண்ணம் *
சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே! 17

| | | | |
|---|---|---|---|
| விரும்பி நின்று | ஆதரத்தோடே ஒருபடிப்பட நின்று | சுரும்பு அர் | வண்டுகள் பொருந்திய |
| ஏத்த மாட்டேன் | ஸ்தோத்ரம் பண்ணமாட்டாதவனுயிராநின்றேன் ; | சோலை சூழ்ந்த | சோலைகளாலே சூழப்பட்ட |
| விதி இலேன் | (கைகூப்புதல் முதலிய) காயிக வ்யாபாரங்களும் செய்யப் பெருதவனுயிரா நின்றேன் ; | மா அரங்கம் | மாட்சிமை தங்கிய ஸ்ரீ ரங்கத்தை |
| மதி ஒன்று இல்லை | (ஈச்வரன் ஒருவன் உண்டு என்கிற) ஒரு அறிவும் (எனக்கு) இல்லை ; | கோயில் கொண்ட | இருப்பிடமாகத் திருவுள்ளம் பற்றின |
| (இப்படிப்பட்ட என்னுடைய) | | கரும்பினை | பரமபோக்யனை எம்பெருமானை |
| இரும்பு போல் வலிய நெஞ்சம் | இரும்பைப்போல் கடினமான கல் நெஞ்சானது | என் கண் இணை | எனது இரண்டு கண்களும் |
| இறை இறை உருகும் வண்ணம் | கொஞ்சம் கொஞ்சமாக உருகும்படி ; | கண்டு கொண்டு | பார்த்தவண்ணமாய் |
| | | களிக்கும் ஆறு ஏ | மகிழ்ச்சியடைகிற விதம் என்னே ! |
| | | | (என்று ஆச்சர்யப்படுகிறபடி.) |

***—தரித்ரனுக்கு நித்யபாயஸம் கிடைத்தாற்போலே, ஒருவகை யோக்யதையுமில்லாத கல்நெஞ்சனை எனக்கு அழகிய மணவாளன் ஸேவைஸாதிக்கப்பெற்ற பாக்கியத்தை நான் என்னவென்று சொல்லுவேன் என்று தடுமாறுகின்றனர். (17)

**இனித்திரைத்திவலைமோத எறியுந்தண்பரவைமீதே ***
**தனிகிடந்தரசுசெய்யும் தாமரைக்கண்ணனெம்மான் ***
**கனியிருந்தனையசெவ்வாய்க் கண்ணனைக்கண்டகண்கள் ***
**பனியரும்புதிருமாலோ என்செய்கேன்பாவியேனே.** 18

| | | | |
|---|---|---|---|
| திரை திவலை | அலைகளிலுண்டான திவலைகளானவை | கனி இருந்தனைய செம் வாய் கண்ணனை | கொவ்வைக்கனி போன்று சிவந்த வாயையுடையனை கண்ணபிரானை |
| இனிதுமோத | இனிதாக அடிக்க, [வீச] | | |
| எறியும் | கொந்தளிக்கிற | | |
| தண் | குளிர்ந்த | கண்ட கண்கள் | ஸேவிக்கப்பெற்ற (எமது) கண்களில் நின்றும் |
| பரவை மீது | கடல்போன்ற திருக்காவேரியிலே | பனி அரும்பு | குளிர்ந்த கண்ணநீர்த்துளிகள் |
| தனி கிடந்து | தனியே வந்து கண்வளர்ந்தருளி | உதிரும் | பெருகா நின்றன, |
| அரசு செய்யும் | செங்கோல் செலுத்துகிற | பாவியேன் | (கண்ணாரக்கண்டு களிக்கைக்குப்) பாக்கியமில்லாத நான் |
| தாமரை கண்ணன் | புண்டரீகாக்ஷனுய் | | |
| எம்மான் | எமக்குத் தலைவனுய் | என் செய்கேன் | ஏது செய்வேன் ? |

***—எம்பெருமானை ஸேவிக்கப்பெற்றமைக்கு உகந்து உரைத்த ஆழ்வார், கண்களினுடைய களிப்புக்குப் போக்குவீடான ஆநந்தக்கண்ணீர் பெருகப்பெற்று, ஐயோ! இக்கண்ணீர் அரும்பாகத் துளித்துக் கண்களை மறைத்து எம்பெருமானை இடைவிடாது ஸேவிக்கவொட்டாமல் இடைச்சுவராய்த் தடை செய்கின்றனவே! கைக்கு எட்டினது வாய்க்கு எட்டாதொழியும்படி மஹாபாபத்தைப் பண்ணின நான் இந்த துக்கத்திற்கு எங்குப்போய் முறையிட்டுக் கொள்வேன்' என்று வருந்துகிருர். ... ... .... ... .... (18)

**குடதிசைமுடியைவைத்துக் குணதிசைபாதம்நீட்டி *
வடதிசைபின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கி *
கடல்நிறக்கடவுளெந்தை அரவணைத்துயிலுமாகண்டு *
உடலெனக்குருகுமாலோ என்செய்கேனுலகத்தீரே. 19

| | | | |
|---|---|---|---|
| உலகத்தீரே | உலகத்திலுள்ளவர்களே! | இலங்கை | (விபீஷணன் வாழுமிடமான) லங்கையை |
| கடல் நிறம் கடவுள் | கடல்போன்ற கருநிறத்தையுடைய கடவுளான | நோக்கி | (அன்போடு) பார்த்துக்கொண்டும் |
| எந்தை | எம்பெருமான் | அரவு அணை | திருவனந்தாழ்வானாகிற படுக்கையில் |
| குடதிசை | மேற்குத்திக்கில் | துயிலும் ஆ | யோகநித்திரைசெய்யுந் தன்மையை |
| முடியைவைத்து | திருமுடியை வைத்தருளியும் | கண்டு | காண்பதனால் |
| குணதிசை | கிழக்குத் திக்கில் | | எனக்கு உடல் உருகும்— |
| பாதம் நீட்டி | திருவடிகளை நீட்டியும், | ஆலோ | ஐயோ |
| வடதிசை | வடக்குத் திக்கிலே | என் செய்கேன் | (நான்) என்ன செய்ய மாட்டுவேன் |
| பின்பு காட்டி | (தனது) பின்புறத்தைக் காட்டியும் | | |
| தென்திசை | தெற்குத் திக்கில் | | |

***—கண் முதலிய அவயவங்களுக்கு உண்டாகிற விகாரமேயல்லாமல் அவற்றுக்கு ஆச்ரயமாய் அவயவியான சரீரமும் கட்டழியாநின்றதே! இதற்கு என் செய்வேன்! என்கிறார். அழகிய மணவாளன் நான்கு திக்குகளுக்கும் தன் ஸம்பந்தமுண்டாகும்படி சேஷசயநனாய் யோக நித்திரை செய்தருள்வதை ஸேவித்துத் தமது சரீரம் நீராய்க்கரைந்து உருகிச் செயலற்றிருத்தலை உலகத்தார்க்கு வியப்போடு அறிவிக்கின்றனரென்க. ... .... ... ... (19)

பாயுநீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிகொண்ட *
மாயனார் திருநன்மார்வும் மரதகவுருவும்தோளும் *
தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும் *
ஆயசீர்முடியும்தேசும் அடியரோர்க்ககலலாமே. 20

| | | | |
|---|---|---|---|
| பாயும் நீர் | பாயாநின்றுள்ள காவிரிசூழ்ந்த | தூய தாமரை கண்களும் | பரிசுத்தமான தாமரை மலர் போன்ற திருக்கண்களும் |
| அரங்கம் தன்னுள் | கோயிலிலே | துவர் இதழ் | சிவந்த அதரமும் |
| பாம்பு அணை | சேஷசயநத்திலே | பவளம் வாயும் | பவளம் போன்ற வாயும் |
| பள்ளிகொண்ட | கண்வளர்ந்தருளாநின்ற | ஆய சீர் முடியும் | வேலைப்பாடுள்ள அழகிய திருமுடியும் |
| மாயனார் | ஆச்சரிய சக்திவாய்ந்த எம்பெருமானது | தேசும் | (இவற்றாலுண்டான) தேஜஸ்ஸும் |
| திருநல் மார்வும் | பிராட்டி வாழ்கின்ற விலக்ஷணமான மார்பும், | அடியரோர்க்கு | ஸ்வரூபஜ்ஞானமுடைய தாஸர்களுக்கு |
| மரதகம் உருவும் | மரகதமணிபோன்ற திருமேனி நிறமும் | அகலலாமே | இழக்கத்தகுமோ ? |
| தோளும் | திருத்தோள்களும் | | |

* * *—எம்பெருமானுடைய அதிசயங்களை வெறும் ஏட்டுப்புறத்தில் கேட்டுப்போகையன்றிக்கே, பரமபாவநமான திருவரங்கந் திருப்பதியிலே திருவனந்தாழ்வான்மீது “தன் தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி” என்றபடி

ஸகலாவயவஸௌந்தரியமும் நன்கு விளங்கும்படி சாய்ந்தருள்கின்ற எம்பெருமானது திவ்ய தேஜஸ்ஸைக் காணப்பெற்றவர்களும் மீண்டும் கால்பேர்ந்து விலக முடியுமோ? என்கிறார். .... .... .... .... .... (20)

பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்கு *
துணிவினால்வாழமாட்டாத் தொல்லைநெஞ்சேநீசொல்லாய் *
அணியினார்செம்பொனாய அருவரையனையகோயில் *
மணியனார் கிடந்தவாற்றை மனத்தினால் நினைக்கலாமே? 21

| | | | |
|---|---|---|---|
| பவளம் வாய் | பவளம்போன்ற அதரத்தையுடைய | அணியின் ஆர் | அழகினாலே பூர்ணமாய் |
| அரங்கனார்க்கு | அழகிய மணவாளன் விஷயத்திலே | செம்பொன் ஆய அரு வரை அனைய | செவ்வியபொன்னாலே செய்யப்பட்ட சிறந்த மேரு பர்வதத்தை யொத்த |
| பணிவினால் | கைங்கர்ய ருசியினால் | கோயில் | கோயிலிலே |
| மனம் அது ஒன்றி | கருத்தைப் பொருந்த வைத்து | மணி அனார் | நீலமணிபோன்ற எம்பெருமான் |
| துணிவினால் | துணிவுடன் | கிடந்த ஆற்றை | கண் வளர்ந்தருளுகிறபடியை |
| வாழமாட்டா | வாழமாட்டாத | மனத்தினால் | நெஞ்சினால் |
| தொல்லை நெஞ்சே | கிழத்தனமுள்ள மநஸ்ஸே! | நினைக்கல் ஆமே | அளவிட்டு அறியக்கூடுமோ? |
| | | நீ சொல்லாய் | நீயே சொல்லிக்காண். |

***—"கரும்பினைக்கண்டுகொண்டு" என்றும், "அரவணைத் துயிலுமா கண்டு" என்றும் அழகிய மணவாளனை நீர் கண்ணால் கண்டமையாலன்றோ "என்செய்கேன்!!" என்று தவிக்கிறீர்; அப்பெருமான் பள்ளிகொண்டருளும்படியைக் கண்ணால் காணவேண்டா; ஒரு மூலையிலே உட்கார்ந்து நெஞ்சினால் த்யாநஞ் செய்துகொண்டிரும் என்று சிலர் சொல்ல, அதற்கு உத்தரமாகத் தமது திருவுள்ளத்தை நோக்கிக் கூறுகின்றார்-அப்பெருமான் பள்ளிகொண்டருளுமாற்றை நெஞ்சினால்தான் நினைத்துத் தரித்திருக்க முடியுமோ? என்கிறார். ... .... (21)

பேசிற்றேபேசலல்லால் பெருமையொன்றுணரலாகாது *
ஆசற்றார்தங்கட்கல்லால் அறியலாவானுமல்லன் *
மாசற்றார்மனத்துளானை வணங்கிநாமிருப்பதல்லால் *
பேசத்தானாவதுண்டோ பேதைநெஞ்சேநீசொல்லாய். 22

| | | | |
|---|---|---|---|
| பேதை நெஞ்சே | விவேகமற்ற மனமே! | அறியல் ஆவானும் அல்லன் | அறிய முடியாதவனாயுமிராநின்றான் (அவன்;) |
| பேசிற்றே | (வேதங்களும் வைதிக புருஷர்களும்) பேசின பேச்சுக்களையே | மாசு அற்றார் மனத்து உளானை | குற்றமற்ற பெரியோர்களின் நெஞ்சில் நித்யவாஸம் செய்யுமவனை |
| பேசல் அல்லால் | நாமும் பேசுவதேயல்லாமல் | | |
| பெருமை | (எம்பெருமானது) மேன்மையிலே | நாம் வணங்கி இருப்பது அல்லால் | நாம் வணங்கிக்கொண்டு காலங்கழிக்கலாமத்தனையொழிய |
| ஒன்று | ஏகதேசமும் | | |
| உணரல் ஆகாது | அறியமுடியாது; | பேச தான் ஆவது உண்டோ | (அவன் பெருமைக்கீடாகப்) பாசுரமிட்டுப் பேசும்படியாயிராநின்றதோ? |
| ஆசு அற்றார் தங்கட்கு அல்லால் | உபாயாந்தரப்பற்றறுகிற குற்றமற்றவர்களுக்குத் தவிர (மற்றையோர்க்கு) | நீ சொல்லாய்— | |

* * *—நினைக்கமுடியாதாகில் வாய்விட்டுப் பேசினுலோவென்ன ; "மநஃ பூர்வோ வாகுத்தரஃ" என்றன்றே சொல்லியிருப்பது; மநஸ்ஸாலே பரிச்சேதிக்க வொண்ணுத விஷயத்தைப் பாசுரமிட்டு முடிக்கப்போமோ என்கிருர். பேசமுடியாதென்ருல் பேசுவதை விட்டு விலகி வாய்மூட வேண்டாவோ ? பின்னையும் பேசிக்கொண்டே இருக்கிறதென்? என்ன; ஊமையாகப் பிறவாமல் நாலாறு வார்த்தைகள் சொல்லும்படியாகப் பிறந்தோமாதலால், வேதங்களும் வைதிகோத்தமர்களும் சொல்லிப்போன பேச்சுக்களில் ஏதோசிலவற்றைச் சொல்லிக்கொண்டிருக்கிருேமேயொழிய, எம்பெருமானுடைய பெருமைகளையெல்லாம் அறிந்து பேசுகிறபடியன்று என்கிருர். .... .... ... ... .... ... (22)

கங்கையிற்புனிதமாய காவிரிநடுவுபாட்டு *
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள் *
எங்கள்மாலிறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைக்கண்டும் *
எங்ஙனம்மறந்துவாழ்கேன் ஏழையேனேழையேனே ! 23

| | | | |
|---|---|---|---|
| ஏழையேன் | (எம்பெருமானைக் கிட்டினுல் அனுபவிக்க மாட்டாமலும், பிரிந்தால் தரிக்கமாட்டாமலும்) பேதைமைக்குணத்தையுடைய நான் | எங்கள் மால் | (அடியவரான) எங்களிடத்தில் பேரன்பு உடையவனும் |
| | | இறைவன் | ஸர்வஸ்வாமியும் |
| | | ஈசன் | ஸர்வநியாமகனுமாகிய ஸ்ரீரங்கநாதன் |
| கங்கையின் | கங்காநதியிற்காட்டிலும் | கிடந்தது | சயனித்திருப்பதாகிய |
| புனிதம் ஆய | பரிசுத்தியுடையதாகிய | ஓர் கிடக்கை | ஒப்பற்ற பள்ளிகொண்ட திருக்கோலத்தை |
| காவிரி | காவேரி நதியினது | | |
| நடுவு பாட்டு | நடுவிடத்திலே | கண்டும் | ஸேவிக்கப்பெற்ற பின்பும் |
| பொங்கு நீர் | பெரிய கிளர்த்தியோடு வருகின்ற (அந்நதியின்) நீர்ப்பெருக்கு | மறந்து | (அந்தக்கிடையழகை) மறந்துபோய் |
| பரந்து பாயும் | எங்கும் பரவிப்பாய்தற்கிடமானதும் | எங்ஙனம் வாழ்கேன் | எவ்வாறு தரித்திருப்பேன் யான்? |
| பூ பொழில் | அழகிய சோலைகளையுடையது மாகிய | ஏழையேனே | ஒன்றுஞ் செய்யமாட்டாது திகைத்தவனாகவேயன்றே நிற்பேன். |
| அரங்கம் தன்னுள் | -கோயிலிலே | | |

* * *—உபயகாவேரி மத்தியிலே ஸ்ரீரங்கத்தில் அழகியமணவாளனது சயநதிருக்கோலத்தை ஸேவிக்கப்பெற்றபின்பு, யான் அந்தக்கிடையழகிலே மனம் ஈடுபட்டுப் புறம்பே செல்ல மாட்டாது தவித்து வருந்துதலையொழிய அதனைமறந்து தரித்திருக்க உபாயமுண்டோ என்று-தாம் எம்பெருமானது கிடையழகில் ஈடுபட்டமையை இதனுல் கூறுகின்றனரென்க. .... ... .... (23)

வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுள் *
கள்வனுர்கிடந்தவாறும் கமலநன்முகமும்கண்டும் *
உள்ளமேவலியைபோலும் ஒருவனென்றுணரமாட்டாய் *
கள்ளமேகாதல்செய்து உன்கள்ளத்தேகழிக்கின்ருயே. 24

| | |
|---|---|
| வெள்ளம் நீர் | பெருக்கையுடைய காவேரியானது |
| பரந்து பாயும் | எங்கும் பரவிப் பாய்தற்கு இடமானதும் |
| விரி பொழில் | விசாலமான சோலைகளையுடையதுமான |
| அரங்கம் தன்னுள் | -கோயிலிலே |
| கள்வனர் | அடியவர்களைக் கொள்ளை கொள்ளுமவனுன அழகிய மணவாளன் |
| கிடந்த ஆறும் | பள்ளிகொள்ளும்படியையும் |
| கமலம் நல் முகமும் | தாமரை மலர்போல் அழகிய திருமுகத்தையும் |

| | |
|---|---|
| கண்டும் உள்ளமே | ஸேவிக்கப்பெற்ற பின்பும், ஓ நெஞ்சே! |
| வலியை போலும் | நீ கல்லாயிரா நின்ருய் போலும்! |
| ஒருவன் என்று உணர மாட்டாய் | அவன் ஒப்பற்றவனென்று அறியமாட்டாய்; (இவ்விஷயத்தில்) |
| கள்ளம் காதலே செய்து | கபடமான பக்தியையே செய்துகொண்டு |
| உன் கள்ளத்தே | உனது கபடச்செய்கையிலேயே |
| கழிக்கின்ருயே | காலத்தைக் கழிக்கிருயே. |

* * *—எம்பெருமான் பரமபதத்தில் நித்யஸூரிகளோடு பரிமாறுவதை விட்டிட்டு இங்கே வந்து கண்வளர்ந்தருளுவது உண்டியே உடையே உகந்தோடும் இம்மண்டலத்தவராகிய ஸம்ஸாரிகளை வசப்படுத்திக் கொள்வதற்காக வலைவீசுகிறபடியாதலால் கள்வனர் எனப்பட்டது. வேசியைக்கண்டு பேசவிரும்பியும், சோறு வாங்கி உண்ணக்கருதியும், திருவிழாக்களிலே திரண்டவர்கள் ஏமாந்திருக்கையில் கொள்ளை கொள்ளக்கருதியும் இவ்வாறு பலவகை எண்ணங்களோடே கோவிலுக்குள்ளே புகுந்தவர்களை, வடிவழகு முதலியவற்றைக்காட்டி நாளடைவில், தனக்கு அற்றுத்தீர்ந்த அடியவராம்படி ஆக்கிக்கொள்ளுகிற எம்பெருமானைக் கள்ளனென்னத் தடையுண்டோ? ‘செஞ்சொற் கவிகாள்! உயிர் காத்து ஆட்செய்மின் திருமாலிருஞ்சோலை, வஞ்சக்கள்வன் மாமாயன்” என்ருரே நம்மாழ்வாரும். (24)

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தணமைதன்னை *
ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன் *
களிப்பதென்கொண்டுநம்பீ கடல்வண்ணகதறுகின்றேன் *
அளித்தெனக்கருள்செய்கண்டாய் அரங்கமாநகருளானே. 25

அரங்கமாநகருளானே !—;

| | |
|---|---|
| குளித்து | ஸ்நாநம் பண்ணி |
| மூன்று அனலை | மூன்று அக்நிகளை |
| ஓம்பும் | வளர்ப்பதற்குரிய யோக்யதையைத் தருவதும் |
| குறி கொள் | கஷ்டப்பட்டுக் காப்பாற்றத் தக்கதுமான |
| அந்தணமை தன்னை | ப்ராஹ்மண்யத்தை |
| ஒளித்திட்டேன் | பாழாக்கிவிட்டேன்; |
| என் கண் இல்லை | (ஆத்மவிஷய ஜ்ஞானம்) என் பக்கல் இல்லை; |

| | |
|---|---|
| நின் கண் பத்தனும் அல்லேன் | உன் விஷயமான பக்தியும் உடையவனல்லேன் நான்; இப்படியிருக்க) |
| கடல் வண்ணா—; நம்பீ—; | |
| என் கொண்டு களிப்பது | (நான்) எத்தைக்கொண்டு ஆநந்தமடைவேன்? |
| கதறுகின்றேன் | (துக்கத்துக்குப் போக்குவீடாக) வாய்விட்டுக் கூப்பிடா நின்றேன்; ஆதலால்) |
| எனக்கு | என் விஷயத்தில் |
| அளித்து அருள் செய் | மிகவும் கிருபை செய்தருளவேணும் |

(கண்டாய்—முன்னிலையசை.)

* * *—கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம் என்று சாஸ்த்ரங்களில் உபாயமாகக் கூறப்பட்டவற்றை அநுஷ்டிப்பதற்கு ஏற்ற ப்ராஹ்மண்யமிருந்தும் ஐயோ! எனக்கு ஒன்றிலும் யோக்யதை இல்லையே என்று தமது வறுமையைக் கூறுகின்ருர்.

உம்மை நான் ரக்ஷிப்பதற்கு உறுப்பாக உம்மிடத்தில் ஒரு கைம்முதலுமில்லை என்பது திண்ணமான பின்பு கதறிப் பயனென்? என்னை என் செய்யச்சொல்லுகிறீர்? என்று எம்பெருமான் திருவுள்ளமாக; ஒரு கைம்முதலுள்ளவர்களைத்தான் ரக்ஷிப்பதென்று உனக்கு நியதியுண்டாகில் கோயிலிலே வந்து சாய்ந்தருள்வானேன்? உன்னுடைய ஒப்புயர்வற்ற கருணைக்கு என்னைத் தவிர வேறு விஷயமுண்டோவென்னும் கருத்தை நான்காமடியில் வெளியிடுகிறார். ... (25)

போதெல்லாம்போதுகொண்டு உன்பொன்னடிபுனையமாட்டேன் *
தீதிலாமொழிகள்கொண்டு உன்திருக்குணம்செப்பமாட்டேன் *
காதலால்நெஞ்சமன்பு கலந்திலேனதுதன்னாலே *
ஏதிலேனரங்கர்க்கெல்லே என்செய்வான்தோன்றினேனே. 26

| | | | |
|---|---|---|---|
| போது எல்லாம் | எல்லாக் காலங்களிலும் | நெஞ்சம் | நெஞ்சிலே |
| போது கொண்டு | பூக்களைக்கொண்டு | கலந்திலேன் | வைத்துக்கொண்டிருக்கின்றேனில்லை ; |
| உன் பொன் அடி புனைய மாட்டேன் | உன்னுடைய அழகிய திருவடிகளிலே ஸமர்ப்பிக்க மாட்டுவேனல்லேன் ; | அது தன்னாலே | ஆதலால் |
| தீது இலா மொழிகள் கொண்டு | குற்றமற்ற சொற்களினால் | அரங்கர்க்கு | அழகிய மணவாளனாகிய தேவரீர்க்கு |
| உன் திருக் குணம் செப்ப மாட்டேன் | உன்னுடைய நற்குணங்களைக் கீர்த்தநம் செய்ய மாட்டுவேனல்லேன் ; | ஏதிலேன் | ஒரு காரணத்தாலும் ஸ்பர்சிக்கப் பெற்றவனல்லேன் ; |
| | | | (இப்படிப்பட்ட நான்) |
| காதலால் அன்பு | உண்மையான பக்தியால் உண்டாகிற அபிநிவேசத்தை | என் செய்வான் தோன்றினேனே | எதற்காகப் பிறந்தேனோ (அறியேன் ;) |
| | | எல்லே | ஐயோ ! |

* * *—"கடல்வண்ணா! கடல்வண்ணா!!" என்று கதறின ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், 'த்ரைவர்ணிகாதிகாரமான உபாயங்களில் உமக்கு அந்வயமில்லையென்றீர்; இருக்கட்டும்; ஸர்வாதிகாரமான அர்ச்சநம், ஸ்தோத்ரம் முதலியவற்றில் ஏதாவது அந்வயமுண்டோ?' என்று கேட்க, ஐயோ! ஒன்றிலும் அந்வயமில்லையே என்று கையை விரிக்கிறார். ... ... ... (26)

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடி *
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலும்போலேன் *
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேன்நெஞ்சுதன்னால் *
அரங்கனார்க்காட்செய்யாதே அளியத்தேனயர்க்கின்றேனே. 27

| | | | |
|---|---|---|---|
| குரங்குகள் | வாநர வீரர்கள் (கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறம் பெறுவதற்கு) | அணிலும் போலேன் | அணில்களையும் ஒத்திருக்கின்றேனில்லை ; |
| மலையை நூக்க | மலைகளைத் தள்ளிக்கொண்டுவர | மரங்கள் போல் வலிய நெஞ்சம் | மரங்களைப்போலே கடினமான நெஞ்சையுடையனாய் |
| குளித்து புரண்டிட்டு ஓடி | நீரிலே முழுகி (கரையிலுள்ள உலர்ந்த மணலிலே) புரண்டு ஓடி | வஞ்சனேன் | வஞ்சனையையே தொழிலாகவுடையனாய் |
| | | அளியத்தேன் | அருமந்த மநுஷ்யனான நான் |
| தரங்கம் நீர் அடைக்கல் உற்ற | அலைக்கிளர்ச்சியையுடைய கடலைத் தூர்க்கையிலே ஒருப்பட்ட | அரங்கனார்க்கு | அழகிய மணவாளனுக்கு |
| | | நெஞ்சு தன்னால் | பாவநா வ்ருத்தியாலுங்கூட |
| | | ஆள் செய்யாதே | அடிமை செய்யாமல் |
| சலம் இலா | கபடமற்ற | அயர்க்கின்றேன் | அநர்த்தப்படாநின்றேன். |

* * *—மநுஷ்யனுய்ப் பிறந்தவன் செய்யக்கூடிய கிஞ்சித்காரங்களில் மாத்திரமேயன்று எனக்கு அந்வயமில்லையென்பது ; ஸாமாந்யமான திர்யக்குக்கள் செய்யக்கூடிய கிஞ்சித்காரமும் பாவியேன் செய்யப்பெற்றிலேன் என்று வருந்துகின்ருர். ஸ்ரீராமாவதாரத்தில் பெருமாள் இலங்கைநகர் எழுந்தருள்வதற்காகக் கடலில் அணைகட்ட நேர்ந்தபோது வாநரவீரர்கள் மலைகளைக் கொணர்ந்து எறிந்து கடலைத் தூர்ப்பதைக் கண்ட அணிற்பிள்ளைகள் ‘ இவ்வாநரங்கள் தமது சக்திக்கு இயன்ற காரியத்தைச் செய்து பெருமாள் விஷயத்திலே கிஞ்சித்கரித்தால் நாமும் நமது சக்திக்கு ஏற்றவாறு இப்பெரிய காரியத்திலே சிறிது கிஞ்சித்கரிப்போம் ’ என்றெண்ணி, எல்லா அணிற்பிள்ளைகளும் கடலிலே முழுகுவது, உடனே அந்த ஈரவுடம்போடே கரைமேல் மணலில்புரண்டு உடலில்ஒட்டிக்கொண்ட மணல்களைக் கடலிலேகொண்டு உதறுவதாய் இப்படிப்பட்ட ஒரு காரியத்திலே ஸேதுபந்தன கைங்கரியத்திற்கு உதவிபுரிந்ததாக ஒரு இதிஹாஸம் உண்டு ; அதனை அருளிச்செய்கிருர் முன் இரண்டடிகளில். ... ... ... ... (27)

உம்பராலறியலாகா ஒளியுளாரானைக்காகி *
செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார் *
நம்பரமாயதுண்டே நாய்களோம்சிறுமையோரா *
எம்பிராற்காட்செய்யாதே யென்செய்வான்தோன்றினேனே. 28

| | | | |
|---|---|---|---|
| உம்பரால் அறியல் ஆகா ஒளி உளார் | தேவர்களாலும் (இவ்வகையென்று பரிச்சேதித்து) அறிய முடியாத தேஜோமயமான பரமபதத்தை விபூதியாகவுடைய எம்பெருமான் | | (இப்படி ஆச்ரித பக்ஷபாதியாய் ரக்ஷிக்குமவனிருக்க ;) |
| ஆனைக்காகி | கஜேந்த்ராழ்வானுக்காக, | நம் பரம் ஆயது உண்டே | (நம்முடைய ரக்ஷணத்தில்) நமக்கொரு பளுவுண்டோ? |
| செம் புலால் உண்டு வாழும் முதலை மேல் சீறி | சிவந்த மாம்ஸத்தை புஜித்து வாழ்கிற முதலையின் மேலே சீற்றங்கொண்டு | நாய்களோம் சிறுமை ஓரா | நாய்போல் நிக்ருஷ்டரான நம்முடைய தண்மையை ஆராயாதவரான |
| வந்தார் | (மடுவின் கரையிலே) எழுந்தருளினுர் ; | எம் பிராற்கு | எம்பெருமானுக்கு |
| | | ஆள் செய்யாதே | அடிமை செய்யப் பெருமல் (இருக்கிற நான்) |
| | | என் செய்வான் | ஏதுக்காக |
| | | தோன்றினேன் | பிறந்தேன் ! |

* * *—மடுவின் கரையிலே முதலையின் வாயில் அகப்பட்டு வருந்தின கஜேந்த்ராழ்வான் “நாராயணு ! ஓ மணிவண்ணு நாகணையாய்!” என்று அழைத்தவாறே அரைகுலையத் தலைகுலைய மடுவின்கரையிலே ஓடிவந்தவனன்ருே எம்பெருமான் ; இப்படி ஆச்ரித ஸுலபனுய் ஆச்ரித பக்ஷபாதியான எம்பெருமானிருக்க அவனைக் கடகாகப்பற்றுமல் நம்மை நாமே ரக்ஷித்துக்கொள்ளப் பார்ப்பதும் ஒரு காரியமாகுமோ ? ஆனுல் பரமோத்க்ருஷ்டனுன அவன் பரம நிக்ருஷ்டரான நம்மை ஒரு பொருளாக நினைப்பனே என்று சிறிது சங்கிக்கலாம் ; இதுவும் அவனுடைய ஸ்வரூபத்தை அறியாதாருடைய சங்கையாகும் ; ‘ இவன் நீசன், இவன் உத்க்ருஷ்டன் ’ என்று ஏற்றத்தாழ்வுகளைப் பார்ப்பவனல்லன் எம்பெருமான். இப்படிப்பட்ட எம்பெருமான் விஷயத்திலே சிறிதும் அடிமை செய்யப்பெருத பாவியேன் ஏதுக்காக ஒரு மனிதனுகப் பிறந்தேனென்று தலையிலடித்துக் கொள்ளுகிருர் போலும். (28)

ஊரிலேன்காணியில்லை உறவுமற்ருருவரில்லை *
பாரில்நின்பாதமூலம் பற்றிலேள்பரமமூர்த்தி *
காரொளிவண்ணனே கண்ணனேகதறுகின்றேன் * 29
ஆருளர்களைகணம்மா அரங்கமாநகருளானே.

| | |
|---|---|
| பாரில் | இந்தப் பூமியிலே |
| ஊர் இலேன் | தேவரீர் உகந்திருக்கும் திருப்பதிகளிலே பிறக்கப் பெற்றிலேன் ; |
| காணி இல்லை | (திருப்பல்லாண்டு பாடுகை முதலானவற்றுக்காக விடப்பட்ட) காணியாட்சியும் எனக்கில்லை ; |
| உறவு இல்லை | பந்துக்களுமில்லை ; |
| மற்று ஒருவர் இல்லை | தோழன்மார் முதலானவர்களும் ஒருவருமில்லை. |
| நின் பாதம் மூலம் | தேவரீருடைய திருவடிகளையும் |

| | |
|---|---|
| பற்றிலேன் | (தஞ்சமாகப்)பற்ருதவனுயிரா நின்றேன் ; |
| பரம மூர்த்தி | மிகச் சிறந்தவனே! |
| கார் ஒளி வண்ணனே | மேகத்தின் காந்திபோன்ற மேனி நிறமுடையவனே! |
| கண்ணனே | ஸ்ரீ க்ருஷ்ணனே! |
| கதறுகின்றேன் | (வேறு புகலற்று உன்னையே) கூப்பிடா நின்றேன்; |
| அம்மா | ஸ்வாமிந்; |
| அரங்கமா நகருளானே.—; | |
| களைகண் ஆர் உளர் | (உன்னையொழிய) வேறு ரக்ஷகர் யார் இருக்கிருர்! |

* * *—தமக்கு ஒருவிதத்தாலும் 'பேறு தப்பா' தென்று நிச்சயித்து 'விசார மற்றிருப்பதற்கு இடமில்லாமையை விரிய உரைக்கும் பாசுரம் இது. ஊரிலேன்—வேறு எவ்வித யோக்யதையுமில்லாமற்போனுலும் ஸாளக்ராமம், கோயில், திருமலை, பெருமாள் கோயில் முதலிய திவ்யதேசங்களில் ஜந்மமாவது கிடைத்தால் அதைக் கொண்டு உய்வு பெறலாம். அப்படிப்பட்ட ஒரு தேசத்திலும் எனக்குப் பிறவி நேரவில்லையே! என்கிருர். காணியில்லை,—திவ்யதேசத்தில் ஜந்மமில்லாவிடினும் உதரபோஷணுர்த்தமாக ஏதாவது கொஞ்சம் க்ராம பூமிகள் ஏற்பட்டிருந்தால் அங்குப்போகவேண்டிய காலங்களில் யாத்ருச்சிகமாக இடையிலே ஒரு திவ்யதேச ஸேவை கிடைக்கக்கூடும் ; அப்படிப்பட்ட ப்ரஸக்தி நேருவதற்கு ஒரு குழியளவு காணியுமில்லை யென்கிருர். இவையொன்றுமில்லையாகிலும் திவ்யதேசவாஸிகளோடு உறவு இருக்குமாகில் பந்துக்ருத்ய பரிபாலனத்துக்காகச் சிலகாலம் அங்குப்போகவும் அதடியாக பகவத்ஸேவை கிடைக்கவும் ப்ரஸக்தியுண்டு, அப்படிப்பட்ட உறவினர்களும் எனக்கில்லை ; ஆனபின்பு ஒரு வழியிலும் உன்னைப்பெற உபாயமில்லாமையாலே "நின்பாத மூலம் பற்றிலேன் " என்கிருர். இப்படி ஒரு கைம்முதலுமில்லாதவனென்ற காரணத்தினுல் என்னை நீ விடலாகாது; கெட்டுப்போன உடமையைப் பெறுவதற்கு உடையவன் முயற்சி செய்யுமாபோலே கெட்டுப்போன அடியேனைப் பெறுவதற்கு நீ முயலவேண்டும்படியான இங்கொழிக்க வொழியாத உறவு இருப்பதை நோக்கவேணுமென்கிருர், பரமமூர்த்தி என்று தொடங்கி. ... (29)

மனத்திலோர்தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை *
சினத்தினுல்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா *
புனத்துழாய்மாலையானே பொன்னிசூழ்திருவரங்கா *
எனக்கினிக்கதியென்சொல்லாய் என்னையாளுடையகோவே, 30

| | |
|---|---|
| புனம் துழாய் மாலையானே | தன்னிலத்திலே வளர்ந்து செவ்விதான திருத்து ழாயை மாலையாக அணிந் துள்ளவனே! |
| பொன்னி சூழ் திருஅரங்கா | காவேரியாலே சூழப்பட்ட ஸ்ரீரங்கத்தில் சாய்ந்தருள் பவனே! |
| என்னை ஆள் உடைய கோவே | அடியேனை அடிமையாகக் கொண்ட ஸ்வாமியான வனே |
| மனத்தில் | (என்) மநஸ்ஸிலே |
| ஓர் தூய்மை இல்லை | தெளிவு கொஞ்சமும் இல்லை, |

| | |
|---|---|
| வாயில் ஓர் இன் சொல் இல்லை | வாயிலே ஒரு நற்சொல்லும் கிடையாது; |
| வாளா | நிஷ்காரணமாக |
| சினத்தினால் | கோபத்தாலே |
| செற்றம் நோக்கி | பகைமை தோற்றப்பார்த்து |
| தீ விளி விளிவன் | மிகக்கொடுமையாக வார்த் தைசொல்லா நிற்பேன்; |
| எனக்கு | இப்படிப்பட்ட துர்க்குணங் கள் நிறைந்த எனக்கு |
| இனி | இனிமேல் |
| கதி என் | என்ன கதி? |
| சொல்லாய் | அருளிச்செய்யவேணும். |

* * *—"குளித்து மூன்றனலையோம்பும்" என்ற பாட்டுத்தொடங்கி ஐந்து பாட்டுக்களாலே தம்மிடத்தில் ஒருவித நன்மையும் கிடையாதென்பதை வெளியிட்ட ஆழ்வாரை நோக்கி எம்பெருமான், "ஆழ்வீர்! உம்மிடத்தில் ஒரு நன்மையும் இல்லையென்றீர்; இருக்கட்டும்; ஒருவித நன்மையுமில்லாதாப்போலே ஒருவித தீமையுமில்லாதிருந்தாலும் போதும்; அப்படி உண்டோ?" என்று கேட்க; "ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே ஸஹஸ்ரசோ யந்ந மயா வ்யதாயி" என்ற ஆள வந்தாரைப்போலே என்னிடத்திலில்லாத தீமை உலகத்திலேயே இல்லை! எல்லாவித தீமைகளும் என் பக்கல் குடிகொண்டிருக்கின்றன வென்கிறார். இப்படி தமது தீமைகளைப் பரக்க உரைத்த ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் "ஆழ்வீர்! பேற்றுக்கு ப்ரதிபந்தகம் எவ்வளவு வேணுமோ அவ்வளவும் உம்மிடத்தில் இருப்ப தாகக் கூறுகின்றீர்; இப்படிப்பட்ட உம்மை நான் என்செய்யவல்லேன்; உம்முடைய கருமபலனை நீர் அனுபவிக்கக்கடவீர்" என்று உபேக்ஷைதோற்ற அருளிச்செய்ய, அதற்கு உத்தரமாகப் "புனத்துழாய் மாலையானே" என்கிறார்; நம்முடைய குறை களைப்பார்த்து அகலவொண்ணாதபடி, ஒழிக்கவொழியாத உறவே ஹேதுவாகக் கைபற்றக் கடவோமென்று காக்குமியல்வினனாயிருக்கு மிருப்புத்தோற்றத் தனிமாலை யிட்டிருப்பவரன்றோ தேவரீர்; நாங்கள் கருமபலனை அனுபவிப்பதற்கு நீர் தனிமாலை யிட்டுக்கொண்டிருப்பானேன்? என்கை, ... ... ... (30)

தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன் *
உவர்த்தநீர்போல என்றனுற்றவர்க்கொன்றுமல்லேன் *
துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத்துரிசனானேன் *
அவத்தமேபிறவிதந்தாய் அரங்கமாநகருளானே. 31

அரங்கமா நகருளானே!—;

| | |
|---|---|
| தவத்துளார் தம்மில் அல்லேன் | தபஸ்ஸை அநுஷ்டித்தவர் களில் சேர்ந்தவனல்லேன்; |
| தனம் படைத்தாரில் அல்லேன் | (ததீயாராதனம் முதலியவற் றுக்காகப்) பொருள் ஸம்பா தித்தவர்களிலும் சேர்ந்தவ னல்லேன்; |

| | |
|---|---|
| என்றன் உற்றவர்க்கு | என்னைச் சேர்ந்தவர்களுக்கு |
| உவர்த்தநீர்போல-உப்புத் தண்ணீர்போல | |
| ஒன்றும் அல்லேன் | ஒன்றுக்கும் உதவாதவனாயிரா நின்றேன்; |
| துவர்த்த செவ் வாயினார்க்கே | பழுப்பேறின அதரத்தையு டைய மாதர்கட்கும் |

| | | | |
|---|---|---|---|
| துவக்கு அற | ஸம்பந்தம் அற்றுப்போம்படி | | (இப்படிப்பட்ட எனக்கு) |
| துரிசன் ஆனேன் | கள்ளஞயினேன்; | பிறவி அவத்தமே தந்தாய் | ஜந்மத்தை வ்யர்த்தமாகவே கொடுத்தாய். |

* * *—இப்பாசுரத்திற்கு உள்ளுறை பொருள் :—[தவத்துளார் இத்யாதி.] உன்னுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு விரோதியாக நான் ஒரு ஸ்வப்ர வ்ருத்தியும் செய்யவில்லை ; கையில் காசுள்ளவஞயிருந்தேனுகில் ஆகிஞ்சந்யத்தில் குறையுடையேனுவேன்; அங்ஙனுமில்லை; அகிஞ்சநர்களில் தலைவஞயிரா நின்றேன். * கொண்டபெண்டிர் மக்களுற்ருர் சுற்றத்நவர் என்ற ஆபாஸ பந்துக்களோடே போதுபோக்கா நின்றேனுகில் "சேலேல்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய் தந்தையுமவரே யினியாவாரே" என்னும் நிலைவாய்ந்த பிறகு நாம் கைப்பற்றுவோமென்று நீ ஆறியிருக்கலாம் ; அங்ஙனுமில்லை ; பந்துக்களுக்கு என்னல் ஆகக்கூடிய நன்மை ஒன்றுமில்லாமையாலே அவர்கள் என்னை விட்டொழிந்தனர் ; சேலேய்கண்ணியரிடத்தும் நான் கள்ளஞய்ப் போந்தபடியாலே அவர்களும் என்னைத் துரத்திவிட்டனர். இனி உன்னுடைய விஷயீகாரம் இடையூறின்றி உள்புகுரலாமென்றவாறு. இந்த உள்ளுறை பொருளுக்கு நான்காமடியோடே ஸங்கதி எங்ஙனேயென்னில்; இப்படி உன் விஷயீகாரத்திற்கு நான் உசிதனுயிருக்கச்செய்தேயும் என்னை நீ உபேக்ஷிப்பதால் என்னை நீ வீணே படைத்தாயிறே என்கிருர். அவத்தம்—அவத்யம் என்ற வடசொல் விகாரம். ... (31)

**ஆர்த்துவண்டலம்பும்சோலை அணிதிருவரங்கந்தன்னுள் ***
**கார்த்திரளனையமேனிக் கண்ணனேயுன்னைக்காணும் ***
**மார்க்கமொன்றறியமாட்டா மனிசரில் துரிசனுய ***
**மூர்க்கனேன்வந்து நின்றேன் மூர்க்கனேன்மூர்க்கனேனே.** 32

| | | | |
|---|---|---|---|
| வண்டு ஆர்த்து அலம்பும் சோலை அணி | வண்டுகள் ஆரவாரம் செய்துகொண்டு அலைந்துகொண்டிராநின்ற சோலைகளாலே அழகுபெற்றிருக்கிற | மனிசரில் | மனிதர்களுக்குள் |
| | | துரிசன் ஆய | கள்ளனுய், |
| திரு அரங்கம் தன்னுள் | ஸ்ரீரங்கத்திலே (பள்ளிகொண்டருளாநின்ற) | மூர்க்கனேன் | பிடித்தது விடமாட்டாத மூடனுகிய அடியேன் |
| கார் திரள் அனையமேனி கண்ணனே | மேகஸமூகத்தை ஒத்த திருமேனியையுடைய பெருமானே! | வந்து நின்றேன் | (வேறுபுகலற்று, தேவர் திருமுன்பே) வந்து நின்றேன்; |
| உன்னை காணும் மார்க்கம்ஒன்று அறியமாட்டா | உன்னை ஸாக்ஷாத்கரிக்கக்கூடிய உபாயமொன்றையும் அறியமாட்டாதவனுய் | மூர்க்கனேன் மூர்க்கனேன் | என்னுடைய தண்மையை நன்ருகக் கடாக்ஷித்தருளவேணுமென்றபடி. |

* * *—எம்பெருமான் ஆழ்வாரைநோக்கி "ஸம்ஸாரிகளுக்குங்கூட ஆகாதபடி அஸாரமான நீர் என்னிடத்தில் வந்து நிற்பதேன்?" என்று கேட்க; என்னுடைய மூர்க்கத்தனத்தாலே வந்து நின்றேன்காண் என்கிருர். அவனைக் காணும் மார்க்கங்களாவன :—கர்மயோகம், ஜ்ஞாநயோகம், பக்தியோகம், அவதாரரஹஸ்யஜ்ஞானம், புருஷோத்தமவித்யை, புண்யக்ஷேத்ரவாஸம், திருநாமஸங்கீர்த்தனம் முதலிய உபாயங்கள். இவையொன்றுமறியேனென்கிருர். .... ... (32)

மெய்யெல்லாம்போகவிட்டு விரிகுழலாரில்பட்டு *
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட போழ்க்கனேன்வந்துநின்றேன் *
ஐயனேயரங்கனே உன்னருளென்று மாசைதன்னால் *
பொய்யனேன்வந்து நின்றேன் பொய்யனேன் பொய்யனேனே. 33

| | | | |
|---|---|---|---|
| மெய் எல்லாம் | மெய்யான (நினைவு, சொலவு, செயல் ஆகிய) எல்லாவற்றையும் | ஐயனே | ஸ்வாமின்! |
| | | அரங்கனே!—; | |
| போகவிட்டு | நீக்கிவிட்டு | உன் அருள் என்னும் ஆசை தன்னால் | தேவரீருடைய க்ருபையிலே யுண்டான ஆசையினாலே |
| விரி குழலாரில் பட்டு | விரிந்த கூந்தலையுடைய மாதர் திறத்தில் ஆழங்காற்பட்டு (அகப்பட்டு) | வந்து நின்றேன்—; | |
| | | | (நான் எப்படிப்பட்டவனென்றால்;) |
| பொய் எல்லாம் | எல்லாவிதமான பொய்களையும் | பொய்யனேன் பொய்யனேன் பொய்யனேன் | மனம் மொழி மெய்களாகிற மூன்று கரணங்களிலும் பொய்யன்; |
| பொதிந்து கொண்ட | நிறைத்துக்கொண்டிருக்கிற | வந்து நின்றேன் | (தேவர் திருமுன்பே வெட்கமற்று) வந்துநின்றேன். |
| போழ்க்கனேன் | க்ருத்ரிமனான அடியேன் | | |

* * *—தம்முடைய தாழ்வுகளை வாயாரச்சொல்லிக் கதறி தேவரீருடைய கருணையொன்றையே எதிர்பார்த்திருப்பவனடியேன் என்கிறார். போழ்க்கன்—முறைகேடன், வழிதப்பினவன். 'போட்கன்' என்றலுமுண்டு. ... ... (33)

உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவானுணர்வொன்றில்லா *
கள்ளத்தேன் நானும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம்பூண்டு *
உள்ளுவாருள்ளிற்றெல்லாம் உடனிருந்தறிதியென்றே *
வெள்கிப்போயென்னுள்ளேநான் விலவறச்சிரித்திட்டேனே. 34

| | | | |
|---|---|---|---|
| உள்ளத்தே உறையும் மாலை | நெஞ்சினுள்ளே வாஸஞ்செய்கிற எம்பெருமானாகிய உன்னை | | (இருந்தபோதிலும்) |
| | | உள்ளுவார் உள்ளிற்று எல்லாம் | சிந்திப்பவர்கள் சிந்திப்பதெல்லாவற்றையும் |
| உள்ளுவான் உணர்வு ஒன்று இல்லா | சிந்திப்பதற்குறுப்பான அறிவு சிறிதும் இல்லாத | உடன் இருந்து அறிதி என்று | நீ கூடவேயிருந்து அறிகின்றாயென்று |
| | | | (நான் உணர்ந்து) |
| கள்ளத்தேன் நானும் | கள்ளனாகிய அடியேனும் | நான் | நான் |
| தொண்டு ஆய் | (உன்) அடிமையிலே அந்வயித்தவனாய் | என் உள்ளே | எனக்குள்ளே |
| | | வெள்கிப்போய் | மிகவும் வெட்கப்பட்டு |
| தொண்டுக்கே கோலம்பூண்டு | அவ்வடிமைக்கு உரிய வேஷங்களை அணிந்து | விலவு அற சிரித்திட்டேன் | விலாப்பக்கத்து எலும்பு முறியும்படி சிரித்தேன். |

* * *—நாம் ஓரிடம்தேடி ஓடவேண்டாதபடி நம்ஹ்ருதயத்திலுள்ளே எப்போதும் வந்து நெருங்கியிருக்கிற உன்னைச் சிந்தைசெய்வதற்கு ஏற்ற அறிவு இல்லாத ஆத்மாபஹாரக் கள்ளனாகிய அடியேன் உனக்கு அடிமைசெய்பவன் போலத் தோன்றி "இவன் பரமபாகவதன், பரமபக்தன்" என்று கண்டாரடங்கலும் புகழும்படியாக "தொடையொத்த துளவமும் கூடையும் பொலிந்து தோன்றிய தோள் தொண்டரடிப்பொடி" என்றபடி கைங்கர்யவேஷங்களைப் போட்டுக்கொண்டு திரிந்தபோதிலும் "இன்னாரின்னார் இன்னது நினைக்கிறார்கள்" என்று எல்லாருடைய

நினைவையும் நீ நெஞ்சினுள்ளேயே இருந்துகொண்டு அறிகின்ருயென்று உனது ஸர்வஜ்ஞத்வத்தை நான் அநுஸந்தித்தவாறே 'ஐயோ! நமது கள்ளவேஷம் வெளிப்படையாயிற்றே!' என்று வெட்கமடைந்து எனக்குள்ளேயே நான் சிரித்துக் கொண்டேனென்கிருர்.—"ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹநே" என்ற கருத்து ஈற்றடியில் உறையும். விலவறச் சிரித்திட்டேன் என்றது—எல்லை கடந்து சிரித்தமையைக் கூறியவாறு. .... ... .... .... .... (34)

தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டவெந்தாய் *
சேவியேனுன்னையல்லால் சிக்கெனச்செங்கண்மாலே! *
ஆவியே! அமுதே யென்றனுருயிரனையவெந்தாய்! *
பாவியேனுன்னையல்லால் பாவியேன்பாவியேனே. 35

| | | | |
|---|---|---|---|
| அன்று | அக்காலத்தில் (த்ரிவிக்ரமாவதாரத்தில் | என்தன் ஆர் உயிர் அனைய எந்தாய் | (என்னை நல்வழியிற் செலவித்த எனது) அருமையான ஆத்மாவைப் போன்ற எனது தலைவனே! |
| உலகம் எல்லாம் | எல்லா உலகங்களையும் | பாவியேன் | பாவியாகிய யான் |
| தாவி | கடந்து | சிக்கென | உறுதியாக (எப்போதும் விடாமல்) |
| தலைவிளாக் கொண்ட | (திருவடியினுல்) வியாபரித்த | உன்னை அல்லால் | உன்னைத்தவிர (மற்றையோரை) |
| எந்தாய் | எமது ஸ்வாமியே! | சேவியேன் | வணங்கமாட்டேன்; |
| செங்கண் மாலே | சிவந்த திருக்கண்களையுடைய திருமாலே! | | (உன்னையல்லாது வேறொருவரை) |
| ஆவியே | (எனது உயிர் தரித்திருப்பதற்குக் காரணமான) பஞ்சப்ராணவாயுவானவனே! | பாவியேன் | நினைக்கவும்மாட்டேன்; |
| அமுதே | அம்ருதம் போன்றவனே! | பாவியேனே | நான் பாவியனேயாவேன். |

* * *—கீழ்ப்பாட்டில் தமது கள்ளத்தன்மையைப் பேசி, "இப்படிப்பட்ட நாம் எம்பெருமானைக் கிட்டுதல் தகாது" என்று ஆழ்வார் அகல நினைக்க, ஆழ்வீர்! நாம் உலகத்தாருடைய தாழ்வுகளைக் கண்ணெடுத்துப்பாராது அவர்களுடைய ஸ்வல்ப குணத்தையே பாராட்டி அவர்களை அடிமை கொள்பவரல்லோமோ? என்று தன்னுடைய வாத்ஸல்யம் விளங்குமாறு எல்லாரையும் தான் அடிமைகொண்ட த்ரிவிக்ரமாவதார சரித்திரத்தை இவர்க்கு நினைப்பூட்டிச் சமாதானமுண்டாகுமாறு செய்ய; அதனுல் ஆழ்வார் தாம் முன்பு அவனைவிட்டு விலகிச் செல்லும்படி நினைந்த தமது குற்றத்தைப் பாராட்டி, "பாவியேன் பாவியேனே" என்று தம்மை வெறுத்துக்கூறி, எம்பெருமானைத்தவிர வேறொரு கடவுளை நினைத்தலும் தொழுதலும் செய்யாத தமது தன்மையை வெளியிடுகின்றனர். ... .. (35)

மழைக்கன்றுவரைமுனேந்தும் மைந்தனே! மதுரவாறே! *
உழைக்கன்றேபோலநோக்கம் உடையவர்வலையுள்பட்டு *
உழைக்கின்றேற்கென்னை நோக்காதொழிவதே உன்னையன்றே
அழைக்கின்றேன் * ஆதிமூர்த்தி! அரங்கமா நகருளானே. 36

| | | | |
|---|---|---|---|
| அன்று | (இந்திரன் பசிக்கோபத்தாலே ஏழுநாள் விடாமழை பெய்வித்த) அக்காலத்திலே | முன் | (பசு முதலியவை மழையினுல் கஷ்டமடைவதற்கு) முன்பாகவே |

| | |
|---|---|
| மழைக்கு | மழையைத் தடுப்பதற்காக |
| வரை ஏந்தும் மைந்தனே | கோவர்த்தன பர்வதத்தை (கையில் குடையாக) ஏந்தியமிடுக்கையுடையவனே! |
| மதுர ஆறே | இனிய ஆறுபோல் எல்லார்க்கும் விடாயைத் தீர்ப்பவனே! |
| உழை கன்று போல நோக்கர் உடையவர் | மான் குட்டியின் விழிபோன்ற விழியையுடைய மாதர்களின் |
| வலையுள் | (அந்த நோக்காகிற) வலையினுள்ளே |
| பட்டு | அகப்பட்டு |
| உழைக்கின்றேற்கு என்னை | துடிக்கின்ற என்னை |
| நோக்கா தொழிவதே | கடாக்ஷியாமலிருப்பதும் தகுதியோ? |
| ஆதிமூர்த்தி | முழுமுதற் கடவுளே! |

அரங்கமா நகருளானே!—;
உன்னை அன்றே தேவரீரை நோக்கியன்றோ அழைக்கின்றேன்-நான் கூப்பிடாநின்றேன்.

* * *—பேறு பெறுவதில் விரைவின் மிகுதியாலே ஆற்றாமை கரைபுரண்டு பெருமிடறுசெய்து கூப்பிடுகிறார். ... ... ... ... (36)

தெளிவிலாக்கலங்கல் நீர்சூழ் திருவரங்கத்துள்ளோங்கும் *
ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார் *
எளியதோரருளுமன்றே என்திறத்தெம்பிரானார் *
அளியன் நம்பையலென்னார் அம்மவோ! கொடியவாறே. 37

| | |
|---|---|
| தெளிவு இலா கலங்கல் நீர் சூழ் | (ஒருகாலும்) தெளிவில்லாமல் கலக்கம் மாறுதிருக்கிற காவேரியாலே சூழப்பெற்ற |
| திரு அரங்கத்துள் | கோயிலிலே |
| ஓங்கும் | விஞ்சியிருக்கிற |
| ஒளி உளார் தாமே அன்றே | தேஜஸ்ஸை உடையவரான அழகிய மணவாளனொருவனே யன்றோ |
| தந்தையும் தாயும் ஆவர் | (நமக்குத்) தகப்பனும் தாயுமாயிருப்பர்; |
| என் திறத்து | (அவர்) என் விஷயத்தில் (செய்தருள வேண்டுவது) |
| எளியது ஓர் அருளும் அன்றே | ஸாமான்யமான ஒரு க்ருபா மாத்திரமேயன்றோ? |
| எம்பிரானார் | எனக்கு உபகாரகரான அவர் |
| நம்பையல் அளியன் என்னார் | "நம்முடைய பையலான இவன் நமது கருணைக்கு உரியன்" என்று திருவுள்ளம் பற்றுகிறாரில்லை; |
| அம்ம ஓ கொடிய ஆறே | ஐயோ! (இவருடைய இயல்வு மிகவும் கொடுமையாயிரா நின்றதீ! |

* * *—தாம் இப்படி கதறுநிற்கச்செய்தேயும் பெரியபெருமாள் இரங்கி "அஞ்சேல்" என்னக் காணாமையாலே, தம்மையொழிய வேறே ஒரு சுற்றத்தவர் எனக்கு இருப்பதாக நினைத்திருக்கிறீரோ? ப்ரயோஜநாந்தரங்களை விரும்பி அகன்று போகிறேனென்று நினைத்திருக்கிறாரோ? 'நம்முடையவன்' என்று என்னைச் சிறிது அபிமானித்தால் போதுமாயிருக்க இவ்வளவுகூட அபிமானியாமல் கூக்குரல் கேட்டுக் கொண்டே கண்ணுறங்குவதே! அம்மே! இவர் திருவுள்ளம் இப்போது இங்ஙனே கொடிதாயிற்றே!' என்று வருந்துகின்றார். ... ... ... (37)

**மேம்பொருள் போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து *
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி *
காம்பறத்தலைசிரைத்து உன்கடைத்தலையிருந்துவாழும் *
சோம்பரையுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே. 38

| | |
|---|---|
| புனல் சூழ் அரங்கத்தானே | காவிரி சூழ்ந்த கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! |
| மேம்பொருள் | (ப்ராக்ருத ஜநங்கள்) விரும்புகிற லௌகிக பதார்த்தங்களை |
| போக விட்டு | வாஸநையோடு விட்டிட்டு |
| மெய்ம்மையை | ஆத்ம ஸ்வரூபத்தை |
| மிக உணர்ந்து | உள்ளபடி அறிந்து |
| ஆம் பரிசு | ஸ்வரூபாநுரூபமான ஸமாசாரங்களையும் |
| அறிந்துகொண்டு | தெரிந்துகொண்டு |
| ஐம்புலன் | ஐந்து இந்திரியங்களையும் |
| அகத்து அடக்கி | (விஷயாந்தரங்களில் போகவொட்டாமல்) தம்முள்ளே பதிய அடக்கி, |
| காம்பு அற | அடியோடே |
| தலை சிரைத்து | தன் தலையிலுள்ள சுமையைத் தொலைத்து |
| உன் தலைக்கடை இருந்து | உனது திருவாசலிலே (காவலாளராக) வாஸஞ்செய்து |
| வாழும் | உஜ்ஜீவிக்கின்ற |
| சோம்பரை | (தம்முடைய ஹிதத்தில்) சோம்பியிருக்குமவர்களை |
| உகத்திபோலும் | உகக்குமவனல்லையோ நீ. |

* * *—"அளியனம் பையலென்னுர் அம்மவோ கொடியவாறே!" என்று கீழ்ப்பாட்டில் ஆழ்வார் வருந்தினவாறே "இவ்விருள்தருமாஞாலத்திலே ஸ்வரூபாநு ரூபமான புருஷார்த்தத்தை அபேக்ஷிப்பதும் அதற்காக நம் கைபார்த்திருப்பதும் அதுக்குமேலே விளம்பம் பொருமல் கூப்பிடுவதும்! இதென்ன ஆச்சரியமாயிருக்கிறதே! இப்படிப்பட்ட ஒரு உத்தமாதிகாரியைக் கிடைக்கப் பெற்ருேமே!" என்று பெரியபெருமாள் திருவுள்ளம் மிகவும் ப்ரஸந்நமாய், அந்த ப்ரஸாதமெல்லாம் திருமுகத்திலே தோற்றும்படி யிருக்கக்கண்ட ஆழ்வார், "பெருமானே! தேவரீரைக்கிட்டி தேவரீர் பக்கலிலே ஸர்வபாரங்களையும் ஸமர்ப்பித்து நிச்சிந்தையாயிருப்பவர்களைக் கண்டால் தேவரீருடைய திருவுள்ளம் இங்ஙனேயோ மலர்ந்திருப்பது!" என்று பெரியபெருமாள் திருமுகத்தை நோக்கி விண்ணப்பம் செய்கிருர்.

காம்பு அறத் தலைசிரைத்து—உபாயாந்தரங்களில் தனக்குள்ள பற்று அறும்படி தன் தலையிலுண்டான துரிதங்களைப்போக்கி. அதாவது—பேற்றுக்கு எம்பெருமான் ஸாதநமேயொழிய நாம் செய்யும் க்ரியாகலாபங்களொன்றும் ஸாதநமல்ல என்று உறுதியான அத்யவஸாயம் வஹித்து என்றபடி. அஹங்கார கர்ப்பமான உபாயாந்தரங்களின் விடுகையைச் சொன்னபடி. ... ... (38)

அடிமையில்குடிமையில்லா அயல்சதுப்பேதிமாரில் *
குடிமையில்கடைமைபட்ட குக்கரில்பிறப்பரேனும் *
முடியினில் துளபம்வைத்தாய் மொய்கழற்கன்பு செய்யும் *
அடியரையுகத்திபோலும் அரங்கமா நகருளானே. 39

| | |
|---|---|
| முடியினில்துளபம் வைத்தாய் | திருமுடியிலே திருத்துழாய் மாலையை அணிந்தவனே! |
| அரங்கம் மாநகர் உளானே!—; | |
| அடிமையில் | (உனக்குக்) கைங்கரியம் செய்வதில் |
| குடிமைஇல்லா | உயர்குடிப் பிறப்பிற்கு ஏற்ற ஒழுக்கமில்லாத |
| அயல் | (அடிமைக்கு) அயலான |
| சதுப்பேதிமாரில் | நான்கு வேதங்களையுமோதின அந்தணர்களைக் காட்டிலும் |
| குடிமையில் கடைமை பட்ட | குடிப்பிறப்பினுல் இழிவடைந்த |
| குக்கரில் | பரமசண்டாள ஜாதியில் |
| பிறப்பர் ஏலும் | பிறப்பர்களானுலும் |
| மொய்கழற்கு | (உனது) நெருங்கிய திருவடிகளிடத்து |
| அன்பு செய்யும் | பக்தி செய்கின்ற |
| அடியரை | அடியார்களையே |
| உகத்தி போலும் | நீ விரும்புவாய் போலும். |

* * * —இனிமேல், கீழ்ப்பாட்டில் சொன்ன ஞானமுடைய பாகவதர்களின் வைபவம் கூறுகிறது, எம்பெருமான் தன் திருவடித்தாமரைகளில் பக்திசெய்யாதவர்கள் உயர்குலத்திற் பிறந்தவர்களாயிருந்தபோதிலும் அவர்களை ஒரு பதார்த்தமாகவும் நினையாமல் உபேக்ஷித்துவிட்டு, தனது திருவடிகளில் பக்தி செய்பவர் மிகவும் இழிகுலத்தவராயினும் அவரையே விரும்புவன் என்கிறது இப்பாட்டில். (39)

**திருமறுமார்ப ! நின்னைச் சிந்தையுள் திகழவைத்து ***
**மருவியமனத்தராகில் மாநிலத்துயிர்களெல்லாம் ***
**வெருவுறக்கொன்று சுட்டிட்டு ஈட்டியவினையரேலும் ***
**அருவினைப்பயனதுய்யார் அரங்கமா நகருளானே.** 40

திரு மறு மார்ப — பெரிய பிராட்டியாரையும் ஸ்ரீவத்ஸமென்கிற மறுவையும் திருமார்பிலே அணிந்துள்ளவனே!

அரங்கமா நகருளானே!—;

மா நிலத்து உயிர்கள் எல்லாம் — (இந்தப்) பெரிய பூமண்டலத்திலே உள்ள ஜீவராசிகளெல்லாம்

வெருவு உற — (ஜகத்தெல்லாம்) நடுங்கும்படி

கொன்று சுட்டிட்டு — பரமஹிம்ஸை பண்ணி

ஈட்டிய வினையர் ஏலும் — விசேஷமாக ஸம்பாதிக்கப்பட்ட பாவங்களையுடையவர்களானாலும்

நின்னை சிந்தையில் திகழ வைத்து — உன்னை (தங்கள்) நெஞ்சில் விளங்கும்படி வைத்து

மருவிய மனத்தர் ஆகில் — த்ருடமான அத்யவஸாயத்தை உடையரா யிருப்பரேயானால் (அவர்கள்)

அரு வினை பயன் அது உய்யார் — (தாங்கள் செய்த) மஹா பாதகங்களினுடைய பலனை அனுபவிக்கமாட்டார்கள்

* * * —தாழ்ந்த வகுப்பில் பிறப்பேயன்றி நீசமான அநுஷ்டாநமுமுடையரேயாயினும் "மேம்பொருள் போகவிட்டு" என்ற பாட்டிற்கூறிய அதிகாரத்திலே நிஷ்டையுடையராகில் அவர்களுக்கு அந்தக் கருமங்களின் பலன் அநுபவிக்கக் கடவதல்ல என்கிறது இப்பாட்டு. ... ... ... ... (40)

**வானுளாரறியலாகா வானவாவென்பராகில் ***
**தேனுலாந்துளபமாலைச் சென்னியாவென்பராகில் ***
**ஊனமாயினகள்செய்யும் ஊனகாரகர்களேனும் ***
**போனகம்செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே.** 41

ஊனம் ஆயின கள் செய்யும் — தாங்கள் நிஹீநமான செயல்களைச் செய்யுமவர்களாயும்

ஊன காரகர் கள் ஏனும் — பிறரைக்கொண்டு நிஹீநமான க்ருத்யங்களைச் செய்விப்பவர்களாயுமிருந்தபோதிலும்

வான் உளார் அறியல் ஆகா வானவா என்பர் ஆகில் — 'மேலுலகத்திலுள்ள பிரமன் முதலியோராலும் அறியமுடியாத தேவனே!' என்று அநுஸந்திப்பராகில்

தேன் உலாம் துளபம் மாலை சென்னியா என்பர் ஆகில் — தேன் பெருகாநின்ற திருத்துழாய் மாலையைத் திருமுடியிலே அணியுமவனே! என்று அநுஸந்திப்பாராகில் (அப்படிப்பட்ட மஹாத்துமாக்கள்)

போனகம் செய்த சேடம் தருவர் ஏல் — தாங்கள் அமுது செய்து மிகுந்த பிரசாதத்தை அநுக்ரஹிப்பாரானால்

அன்றே — அப்போதே

புனிதம் — (அந்த ப்ரஸாதத்தைப் பெற்றவர்கள்) பரிசுத்தராவர்கள்.

* * *—பகவத் ஸம்பந்தம் பெற்றவர்களுக்கு நிஹீந ஜந்மத்தாலும் நிஹீன அநுஷ்டானத்தாலும் ஒரு குறையுமில்லை யென்பது மாத்திரமேயல்ல; அவர்கள் தங்களுடைய உச்சிஷ்டான்னத்தாலே ஸம்ஸாரிகளையெல்லாம் பரிசுத்தராக்கும்படி யான பெருமை பொருந்தியவர்களுமாவர் என்கிறது இப்பாட்டு. ... (41)

பழுதிலா வொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள் *
இழிகுலத்தவர்களேலும் எம்மடியார்களாகில் *
தொழுமினீர்கொடுமின் கொண்மின் என்றுநின்னேடுமொக்க *
வழிபடவருளினுய்போன் மதிள்திருவரங்கத்தானே. 42

மதிள் திருவரங்கத்தானே!—;

| | | | |
|---|---|---|---|
| ஒழுகல் ஆறு | பிரமன் முதல் தங்களளவும் நீண்டு வருகிற பரம்பரையில் | நீர் | நீங்கள் |
| பழுது இலா | ஒரு குற்றமுமற்றிருக்குமவர்களாய் | தொழுமின் | (அவர்களைத்) தொழுங்கள்; |
| பல சதுப்பேதி மார்கள் | நான்கு வேதங்களையும் ஓதினவர்களாயு முள்ளவர்களே! | கொடுமின் | (உங்களிடத்திலுள்ள விசேஷார்த்தங்களை அவர்களுக்கு) உபதேசியுங்கள்; |
| எம் அடியார்கள் ஆகில் | "நமக்கு அடிமைப்பட்டவர்களாயிருந்தால் (அவர்கள்) | கொள்மின் | (அவர்களிடத்தில் விசேஷார்த்தங்களுண்டாகில்) கேட்டுக்கொள்ளுங்கள்; |
| இழி குலத்தவர்களேலும் | தாழ்ந்த வகுப்பில் பிறந்தார்களே யாகிலும் | என்று | என்று உபதேசித்தருளி |
| | | நின்னேடும் ஒக்க | உனக்கு ஸமமாக |
| | | வழிபட | அவர்களை ஆராதிக்கும்படி |
| | | அருளினுய் | உரைத்தருளினுய்; |
| | | | (போல்—அசை) |

* * *—உத்பத்தியிலாவது ஆசாரம் முதலியவற்றிலாவது ஒருவகையாலும் குறையின்றியே ஸத்ஸந்தாந ப்ரஸூதர்களாய் ஸதாசாரநிஷ்டர்களாயிருக்கும் சதுர்வேதிகளை நோக்கி எம்பெருமான் கூறினவார்த்தை;—'ஓ சதுர்வேதிகளே உங்களைப்போலே, ப்ரஹ்மாதொடங்கி நெடுகிவருகிற வம்சப்ரவாஹத்திலே பிறந்து சதுர்வேதிகளா யிருப்பவர்கள் தாம் பூஜ்யர், மற்றையோர் அநாதரணீயர் என்று நீங்கள் பாவிக்கலாகாது; எந்த ஜாதியிலே பிறந்தவரேனும் எனது அடியவர்களானல் அவர்களை நீங்கள் தொழவேணும்; பரஸ்பரம் ஜ்ஞாநத்தைக் கொடுத்துக் கொள்ளலாம்; விசேஷமாகச் சொல்வதேன்? என்னை நீங்கள் எவ்விதமாக ஆராதிக்க உடன்பட்டிருக்கிறீர்களோ, அவ்விதமாகவே அவர்களையும் ஆராதிக்க வேண்டியதுதான்" என்று. ஸ்ரீபாஞ்சராத்ரத்திலே "பக்தி ரஷ்டவிதா ஹ்யேஷா என்று தொடங்கி "தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸச பூஜ்யோ யதாஹ்யஹம் என்பதீருகவுள்ள ச்லோகங்களை நோக்குக. ... ... ... (42)

அமரவோரங்கமாறும் வேதமோர் நான்குமோதி *
தமர்களில் தலைவராய சாதியந்தணர்களேலும் *
நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவிலங்கே *
அவர்கள் தாம்புலையர்போலும் அரங்கமாநகருளானே. 4

அரங்கமா நகருளானே!—;

| | | | |
|---|---|---|---|
| ஓர் அங்கம் ஆறும் | (விலக்ஷணமான வேதத்தின்) ஆறு அங்கங்களையும் | ஓர் வேதம் நான்கும் | நான்கு வேதங்களையும் |
| | | அமர ஓதி | நெஞ்சில் பதியும்படி அ[...] கரித்து |

| | | | |
|---|---|---|---|
| தமர்களில் தலைவர் ஆய | பாகவதர்களுக்குள்ளே முதன்மையான | நொடிப்பது ஓர் அளவில் | ஒரு நிமிஷ காலத்துக்குள்ளே |
| சாதி அந்தணர்கள் ஏனும் | ப்ராஹ்மண ஜாதீயர்களாயினும் (அவர்கள்) | அவர்கள் தாம் | அந்த ஜாதி ப்ராஹ்மணர்கள் தாம் |
| நமர்களை | தேவரீருடைய அடியார்களை | ஆங்கே | அப்போதே |
| பழிப்பர் ஆகில் | (அவர்களுடையஜந்மத்தைப் பார்த்து) தூஷிப்பாராகில் | புலையர் | சண்டாளராவர்கள் |
| | | | (போலும்—வாக்யாலங்காரம்.) |

* * *—ருக்கு, யஜுஸ். ஸாமம், அதர்வணம் என்று வேதங்கள் நான்கு; சிக்ஷை வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்று வேதாங்கங்கள் ஆறு; இவற்றையெல்லாம் கண்டபாடம் பண்ணி அவற்றின் பொருள்களையும் அறிந்து, அவ்வறிவுக்குப் பலனாக பகவத் கைங்கர்யத்தில் முதன்மையாக ஊன்றியிருக்கும் சிறந்த அந்தணர்களாயிருந்த போதிலும் அவர்கள், கீழ்க்கூறிய யோக்யதைகளெல்லாமில்லாமல் கேவலம் பகவத்கைங்கர்ய மொன்று மாத்திரமுடைய ஒரு ஸ்ரீவைஷ்ணவரை [-அதாவது சண்டாள ஜாதியிலே பிறந்தவரை] அந்தப் பிறவியைப்பற்றி இகழ்வாக நினைத்து தூஷிப்பர்களானால் தூஷிக்குமவர்கள் தாங்களே ப்ராஹ்மண்யம் கெட்டுக் கர்மசண்டாளராய்ப் போவர்கள். இப்படி போவது ஜந்மாந்தரத்திலோ வென்னில்; அன்று; தூஷித்த அந்த க்ஷணத்திலேயே சண்டாளராயொழிவர். ... .... .... .... (43)

பெண்ணுலாம்சடையினானும் பிரமனுமுன்னைக்காண்பான் *
எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப *
விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த
கண்ணறாய் * உன்னையென்னே களைகணாக்கருதுமாறே. 44

| | | | |
|---|---|---|---|
| பெண் உலாம் சடையினானும் | கங்காநதி உலாவுகின்ற சடையை யுடையனான சிவனும் | ஆனைக்கு | (முதலை வாயிலகப்பட்ட) ஸ்ரீகஜேந்திராழ்வானுக்காக |
| பிரமனும் | நான்முகக் கடவுளும் | வந்து | (மடுவின் கரையில்) எழுந்தருளி |
| உன்னை காண்பான் | உன்னைக் காண்பதற்காக | விண் உளார் வியப்ப அருளை ஈந்த | நித்யஸூரிகளும் ஆச்சரியப் படும்படி பரமக்ருபையைச் செய்தருளிய |
| எண் இலா ஊழி ஊழி | எண்ணமுடியாத நெடுங்காலமாக | கண்ணறாய் | (என்னிடத்து அருள் செய்யாமையாலே) தயவில்லா தவனே! |
| தவம் செய்தார் | தவம் புரிந்தவர்களாய் (அவ்வளவிலும் காணப் பெருமையாலே) | உன்னை களைகண் | உன்னை தஞ்சமாக |
| வெள்கி நிற்ப | வெட்கமடைந்து கவிழ்தலையிட்டிருக்க | கருதும் ஆறு என்னே | நினைக்கலாகுமோ? |
| அன்று | அக்காலத்திலே | | |

வளவெழுந்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள் *
கவளமால்யானைகொன்ற கண்ணனையரங்கமாலை *
துளவத்தொண்டாயதொல்சீர்த் தொண்டரடிப்பொடிசொல் *
இளையபுன்கவிதையேலும் எம்பிராற்கினியவாறே. 45

| | |
|---|---|
| வளம் எழும் தவளம் மாடம் | அழகு விஞ்சியிருப்பதும் வெண்ணிறமுடையதுமான மாடங்களையுடைய |
| மா மதுரை நகரம் தன்னுள் | பெருமை தங்கிய வட மதுரையில் |
| கவளம் மால் யானை கொன்ற | கவளங் கொண்டிருப்பதும் பெருத்ததுமான (குவலயாபீடமென்னும் கம்ஸனுடைய) யானையைக் கொலை செய்தருளின |
| கண்ணனை | ஸ்ரீக்ருஷ்ணனாகிய |
| அரங்கம் மாலை | கோயிலிலே (கண்வளரும்) எம்பெருமானைக் குறித்து) |
| துளபம் தொண்டு ஆய | திருத்துழாய்க் கைங்கர்ய நிஷ்டரும் |
| தொல் சீர் | இயற்கையான சேஷத்வத்திலே நிலைநின்றவருமான |
| தொண்டரடிப் பொடி | தொண்டரடிப்பொடியாழ்வார் (அருளிச்செய்த) |
| சொல் | திருமாலையாகிய இத்திருமொழி |
| இளைய புன் கவிதை ஏலும் | மிகவும் குற்றங்குறைகளையுடைய கவிதையாயிருந்தபோதிலும் |
| எம்பிராற்கு | பெரியபெருமாளுக்கு |
| இனிய ஆறே | பரமபோக்யமாயிருந்தபடியென்! (என்று தமக்குத் தாமே ஈடுபடுகிறார்.) |

* * *—விசேஷ உணவுகளையுண்டு மதம் பிடித்துக் கொழுத்திருந்த குவலயாபீடமென்னும் கம்ஸனது யானையை ஒழித்தருளினாற்போலே தம்முடைய ப்ராப்தி ப்ரதிபந்தகங்களையும் போக்கினபடியை அருளிச்செய்து பெரியபெருமாளுடைய ப்ரீதியே தமக்கு ப்ரயோஜனமென்று காட்டி முடித்தாராயிற்று. ... (45)

அடி வரவு :

காவல் பச்சை வேதம் மொய்த்த பெண்டிர் மறம் புலை வெறுப்பு மற்றும் நாட்டினான் ஒரு நமனும் எறி வண்டு மெய் சூது விரும்பி இனிது குட பாய் பணி பேசு கங்கை வெள்ளம் குளித்து போது குரங்கு உம்பரால் ஊர் மனம் தவமார்த்த மெய் யுள்ளம் தாவி மழை தெளி மேம்பொரு ளடிமை திரு வான் பழுதில் அமரப் பெண் வளவெழும் கதிர். ... .... .... ....

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர் தொகுத்த
திருவரங்கத் தமிழ்மாலையில்
முதற்பிரபந்தமான
**திருமாலையின் உரை**
முற்றிற்று.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்

## தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த திருப்பள்ளியெழுச்சியின் தனியன்கள்

---

தமேவ மத்வா பரவாஸுதேவம் ரங்கேசயம் ராஜவதர்ஹணீயம்,
ப்ராபோதிகீம் யோக்ருத ஸூக்திமாலாம் பக்தாங்க்ரிரேணும் பகவந்தமீடே.

| | | | |
|---|---|---|---|
| யஃ | யாவரொரு ஆழ்வார் | ப்ராபோதிகீம் ஸூக்திமாலாம் | திருப்பள்ளி யுணர்த்துமதான திவ்யப்ரபந்தத்தை |
| ராஜவத் | அரசனைப்போல | அக்ருத (தம்) | அருளிச்செய்தாரோ (அப்படிப்பட்ட) |
| அர்ஹணீயம் | பூஜிக்கத்தக்கவராய் | பகவந்தம் | ஞானம் முதலிய குணங்கள் அமைந்த |
| ரங்கேசயம் | திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்பவரான பெரிய பெருமாளை | பக்தாங்க்ரி ரேணும் | தொண்டரடிப் பொடியாழ் வாரை |
| தம் பரவாஸுதேவம் | அப்படிப்பட்ட ஸாக்ஷாத் பரவாஸுதேவனாகவே | ஈடே | துதிக்கின்றேன். |
| மத்வா | ப்ரதிபத்திபண்ணி, | | |

* * *—பரமஸத்வ ஸமாச்ரயனான எம்பெருமானுக்கு ரஜஸ்தமோகுணகார்யமான உறக்கம் இருக்க ப்ரஸக்தியில்லாமையினாலே திருப்பள்ளியெழுச்சி பாடுகை யாகிறவிது எங்ஙனே பொருந்துமென்கிற சங்கைக்குப் பரிஹாரமாக இந்த ச்லோகம் அவதரித்தது. ராஜோபசாரம் போலச்செய்கிறபடியென்று ஸமாதானம் காண்க. அரசர்களுக்கு ஸுப்ரபாதம் பாடுகிற முறையிலே இஃது அமைந்த தென்க.

மண்டங்குடியென்பர் மாமறையோர் மன்னியசீர்த்
தொண்டரடிப்பொடி தொன்னகரம்—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானைப் பள்ளி
யுணர்த்தும் பிரானுதித்த வூர்.

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | தொண்டரடிப் பொடி | "தொண்டரடிப்பொடி" என்னும் திருநாம முடைய ரான ஆழ்வார் |
| திணர்த்த | நெருங்கிப்படிந்திருக்கப் பெற்ற | உதித்த வூர் | திருவவதரித்த திவ்ய தேச மாவது |
| வயல் | கழனிகள் சூழ்ந்த | மா மறையோர் | சிறந்த வைதிகர்கள் |
| தென் | அழகிய | மன்னிய | பொருந்தி வாழ்தற்கிடமான |
| அரங்கத்து | திருவரங்கத்தில் (கண்வளர்ந் தருள்கிற) | சீர் | சீர்மையையுடைய |
| அம்மானை | பெரிய பெருமாளை | மண்டங்குடி | திருமண்டங்குடி என்கிற |
| பள்ளி உணர்த் தும் | திருப்பள்ளி யுணர்த்துமவ ராய் | தொல் நகரம் | அநாதியான நகரமாகும் |
| பிரான் | பரமோபகாரகராய் | என்பர் | என்று பெரியோர் கூறுவர். |

தனியனுரை முற்றிற்று.

---

# திருப்பள்ளியெழுச்சி

**கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான் கனவிருளகன்றதுகாலையம்பொழுதாய் *
மதுவிரிந்தொழுகினமாமலரெல்லாம் வானவரரசர்கள்வந்துவந்தீண்டி *
எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்த இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும் *
அதிர்தலிலலைகடல்போன்றுளதெங்கும் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 1

| | |
|---|---|
| அரங்கத்து அம்மா | திருவரங்கத்தில் பள்ளி கொண்டருளும் ஸ்வாமியே! |
| கதிரவன் | சூர்யனானவன் |
| குணதிசை | கிழக்குத் திக்கிலே |
| சிகரம் | (உதயகிரியின்) கொடுமுடியிலே |
| வந்து அணைந்தான் | வந்து கூடினான்; |
| கனம் இருள் | (இரவில்) அடர்ந்திருந்த இருளானது |
| அகன்றது | நீங்கி யொழிந்தது; |
| அம் | அழகிய |
| காலைபொழுது ஆய் | காலைப்பொழுதுவர, |
| மா மலர் எல்லாம் | சிறந்த புஷ்பங்களெல்லாம் |
| விரிந்து | விகாஸமடைய |
| மது ஒழுகின | தேன் வெள்ளமிடா நின்றன; |
| வானவர் | தேவர்களும் |
| அரசர்கள் | ராஜாக்களும் |
| வந்து வந்து | ஒருவர்க்கொருவர் முற்கோலி வந்து |
| ஈண்டி | திரண்டு |
| எதிர் திசை | திருக்கண்ணுக்கான தெற்குத் திக்கிலே |
| நிறைந்தனர் | நிறைந்து நின்றார்கள்; |
| இவரொடும் புகுந்த | இவர்களோடு கூட வந்த (இவர்களது வாஹநமாகிய) |
| இரு களிறு ஈட்டமும் | பெரிய ஆண்யானைத் திரள்களும் |
| பிடியொடு | பெண்யானைத் திரள்களும் |
| முரசும் | பெரிய வாத்யங்களும் |
| அதிர்தலில் | சப்திக்கும்போது |
| எங்கும் | எத்திசையும் |
| அலை | அலையெறியாநின்ற |
| கடல் போன்று உளது | ஸமுத்ர கோஷத்தை ஒத்திருந்தது: |
| | (ஆதலால்) |
| பள்ளி எழுந்தருளாய் | திருப்பள்ளியை விட்டு எழுந்திருக்கவேணும். |

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக் கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ *
எழுந்தனமலரணைப்பள்ளிகொள்ளன்னம் ஈன்பனிநனைந்ததமிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய் வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி *
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 2

| | |
|---|---|
| குணதிசை மாருதம் | கீழ்காற்றானது |
| கொழு கொடி | செழுமை தங்கிய கொடியையுடைத்தான |
| முல்லையின் | முல்லைச் செடியிலுண்டான |
| கொழு மலர் | அழகிய மலர்களை |
| அணவி | அணைந்துகொண்டு |
| இதுவோ | இதோ |
| கூர்ந்தது | வீசா நின்றது; |
| மலர் அணை | புஷ்ப சயனத்திலே |
| பள்ளிகொள் | உறங்குகின்ற |
| அன்னம் | ஹம்ஸங்களானவை |
| ஈன் பனி நனைந்த | (மழைபோல) சொரிகிற பனியாலே நனைந்த |
| தம் | தங்களுடைய |
| இரு சிறகு | அழகிய சிறகுகளை |
| உதறி | உதறிக்கொண்டு |
| எழுந்தன | உறக்கம் விட்டெழுந்தன; |
| விழுங்கிய | (தன் காலை) விழுங்கவந்த |
| முதலையின் | முதலையினுடைய |
| பிலம் புரை | பாழி போன்ற |
| பேழ் வாய் | பெரிய வாயிலுள்ள |
| வெள் எயிறு உற | வெளுத்த கோரப்பற்கள் ஊன்ற |
| அதன் | அம்முதலையினுடைய |
| விடத்தினுக்கு | பல் விஷத்திற்கு |
| அனுங்கி அழுங்கிய | மிகவும் நோவுபட்ட |
| ஆனையின் | கஜேந்திராழ்வானுடைய |
| அரு துயர் | பெரிய துக்கத்தை |
| கெடுத்த | போக்கியருளின |

அரங்கத்தம்மா பள்ளி எழுந்தருளாய்,

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம் துன்னியதாரகைமின்னொளி சுருங்கி *
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ பாயிருளகன்றதுபைம்பொழிற்கமுகின் *
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. 3

| | | | |
|---|---|---|---|
| சூழ் திசை எல்லாம் | கண்ட விடமெங்கும் | பை | பசுமை தங்கிய |
| சுடர் ஒளி | சூர்ய கிரணங்களானவை | பொழில் | சோலைகளிலுள்ள |
| பரந்தன | பரவி விட்டன; | கமுகின் | பாக்குமரங்களினுடைய |
| துன்னிய | (ஆகாசத்தில்) நெருங்கிய | மடலிடை கீறி | மடலைக்கீற (அத்தாலே) |
| தாரகை | நக்ஷத்திரங்களினுடைய | வண் பாளைகள் நாற | அழகிய பாளைகளானவை பரிமளிக்க |
| மின் ஒளி | மிக்க தேஜஸ்ஸானது | | (அப்பரிமளத்தை முகந்துகொண்டு) |
| சுருங்கி | குறைவுபட்டது மன்றி | கூர்ந்தது; | வீசாநின்றது; |
| படர் ஒளி | மிக்க ஒளியையுடைய | அடல் | பெருத்தமிடுக்கையுடைத்தாய் |
| பனி மதி இவன் | இக்குளிர்ந்த சந்திரனும் | ஒளி திகழ்தரு | தேஜஸ்ஸு விளங்காநின்றுள்ள |
| பசுத்தனன் | ஒளிமழுங்கினான்; | திகிரி | திருவாழியாழ்வானை |
| பாய் இருள் | பரந்த இருட்டானது | அம் தட கை | அழகிய பெரிய திருக்கையிலேயுடைய |
| அகன்றது; | நீங்கிற்று; | | அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாய்—. |
| வைகறை மாருதம் இது | இந்த விடியற்காற்றானது | | |

மேட்டிளமேதிகள்தளைவிடுமாயர்கள் வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசைபரந்தனவயலுள் இரிந்தனசுரும்பினமிலங்கையர் குலத்தை *
வாட்டியவரிசிலை வானவரேறே! மாமுனிவேள்வியைக்காத்து * அவபிரதம்
ஆட்டியவடுதிறலயோத்தியெம்மரசே! அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே, 4

| | | | |
|---|---|---|---|
| மேடு இள மேதிகள் | உயர்த்தியும் இளமையும் தங்கிய எருமைகளை | இலங்கையர் குலத்தை | ராக்ஷஸவர்க்கத்தை |
| தளை விடும் | (மேய்கைக்குக்) கட்டவிழ்த்துவிடுகிற | வாட்டிய | உருவழித்த |
| ஆயர்கள் | இடையர் (ஊதுகிற) | வரிசிலை | அழகிய சார்ங்கத்தையுடைய |
| வேய்ங்குழல் ஓசையும் | புல்லாங்குழலின் நாதமும் | வானவர் ஏறே | தேவாதிதேவனே! |
| விடை | எருதுகளின் (கழுத்திற் கட்டியுள்ள) | மா முனி | விச்வாமித்ர மஹர்ஷியினுடைய |
| மணி | மணிகளினுடைய | வேள்வியை | யாகத்தை |
| குரலும் | ஓசையும் (ஆகிய) | காத்து | நிறைவேற்றுவித்து |
| ஈட்டிய இசை | இவ்விரண்டும் கூடின த்வநியானது | அவபிரதம் ஆட்டிய | அவப்ருத ஸ்நாநம் செய்வித்தருளின |
| திசை பரந்தன | திக்குக்களெங்கும் பரவிவிட்டது; | அடுதிறல் | (விரோதிகளை) ஒழிக்கவல்ல மிடுக்கை யுடையனாய் |
| வயலுள் | கழனிகளிலுள்ள | அயோத்திஎம் அரசே | அயோத்தியா புரியை ஆளுகையாலே எங்களுக்கு ஸ்வாமியானவனே! |
| சுரும்பு இனம் | வண்டுகளின் திரள் | | அரங்கத்தம்மா! |
| இரிந்தன | ஆரவாரித்துக்கொண்டு கிளம்பின; | | பள்ளி எழுந்தருளாயே—. |

புலம்பினபுட்களும்பூம்பொழில்களின்வாய் போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசைக்கனைகடலரவம் களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த *
அலங்கலந்தொடையல்கொண்டடியிணை பணிவான் அமரர்கள்புகுந்தனராதலிலம்மா! *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில் எம்பெருமான்! பள்ளியெழுந்தருளாயே. 5

பூ — பூத்திரா நின்றுள்ள
பொழில்களின்வாய்-சோலேகளிலுள்ள
புட்களும் — பறவைகளும்
புலம்பின — (உணர்ந்து) ஆரவாரஞ் செய்யாநின்றன;
கங்குல் — இரவானது
போயிற்று — கழிந்தது;
புலரி — ப்ராதஃகாலமானது
புகுந்தது — வந்தது;
குண திசை — கீழ்த்திசையிலே
கணே — கோஷஞ்செய்கிற
கடல் — கடலினுடைய
அரவம் — ஓசையானது
கலந்தது — வியாபித்தது;
களி — தேனேப்பருகிக் களிக்கின்ற
வண்டு — வண்டுகளானவை
மிழற்றிய — சப்தியாநிற்கிற
கலம்பகம் புனேந்த — பலவகைப் பூக்களாலே தொடுக்கப்பட்ட
அம் — அழகிய
அலங்கல் தொடையல் கொண்டு — அலங்கல் மாலேகளே ஏந்தி கொண்டு
அமரர்கள் — தேவர்கள்
அடி இணே பணிவான் — (தேவரீருடைய) திருவடியிணேகளில் பணிமாறுகைக்காக
புகுந்தனர் — வந்து நின்றனர்;
ஆதலில் — ஆகையாலே
அம்மா — ஸர்வஸ்வாமிந்!
இலங்கையர் கோன் வழி பாடு செய் கோயில் — லங்கேச்வரனை ஸ்ரீ விபீஷணுழ்வான் தாஸவ்ருத்தி பண்ணப்பெற்ற கோயிலிலே (கண்வளர்ந்தருளுகிற)

எம்பெருமான்! அஸ்மத்ஸ்வாமியே!

பள்ளி எழுந்தருளாயே—.

**இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ இறையவர்பதினெருவிடையருமிவரோ ***
**மருவியமயிலினனறுமுகனிவனே மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி ***
**புரவியோடாடலும்பாடலும்தேரும் குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் ***
**அருவரையனேயநின்கோயில்முன்னிவரோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.**

மணி — விலக்ஷணமாய்
நெடு — பெரிதான
தேரொடும் — தேரோடுகூட
இரவியர் — பன்னிரண்டு ஆதித்தர்களும்
இறையவர் — ஜகத்துக்குநிர்வாஹகர்களான
பதினெரு விடையரும் — ஏகாதச ருத்ரர்களும்
மருவிய — பொருந்திய
மயிலினன் — மயில்வாகனத்தையுடைய
அறுமுகன் — ஸுப்ரஹ்மண்யனும்
மருதரும் — மருதகணங்களான ஒன்பதின்மரும்
வசுக்களும் — அஷ்டவஸுக்களும்
வந்து வந்து — ஒருவருக்கொருவர் முந்திக்கொண்டு வந்து
ஈண்டி — நெருங்கி நிற்க
(இவர்களுடைய வாஹநமான)
புரவியோடு தேரும் — குதிரைகள் பூண்ட ரதங்களும்
பாடலும் ஆடலும்-பாட்டும் கூத்துமாய்
குமரதண்டம் புகுந்து — தேவஸேநா ஸமூகங்கள் வந்து புகுந்து
ஈண்டியவெள்ளம்-நெருங்கியிருக்கிறதிரளானது
அருவரை அனேய. பெரிய மலேபோன்ற
கோயில் — கோயிலில்
நின் முன் — தேவரீர் திருக்கண்ணுேக்கத்திலே (நிற்கின்றது;)

அரங்கத்தம்மா;

பள்ளி யெழுந்தருளாயே—.

**அந்தரத்தமரர்கள் கூட்டங்களிவையோ அருந்தவமுனிவரும்மருதருமிவரோ ***
**இந்திரனுனேயும்தானும்வந்திவனே எம்பெருமானுனகோயிலின்வாசல் ***
**சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க இயக்கரும்மயங்கினர்திருவடிதொழுவான் ***
**அந்தரம்பாரிடமில்லேமற்றிதுவோ அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே.**

எம்பெருமான் — எனக்கு ஸ்வாமியான
உன கோயிலின் வாசல் — தேவரீருடைய திருக்கோயிலின் வாசலிலே
இந்திரன் தானும்-தேவேந்திரனும்
ஆனேயும் — (அவனது வாஹனமான) ஐராவதயானேயும்
வந்து — வந்திருப்பதுமன்றி,
அந்தரத்து அமரர்கள் — அண்டத்துக்குள் இருக்கிற நின்ற தேவர்களும்
கூட்டங்கள் — இவர்களுடைய பரிவாரங்களும்
அரு தவம் முனிவரும் — மஹா தபஸ்விகளான ஸநகாதி மஹர்ஷிகளும்

| | |
|---|---|
| [illegible] | மருத்கணங்களும் |
| [illegible] | யக்ஷர்களும், |
| [illegible] நெருக்க | கந்தர்வர் நெருக்கவும் |
| [illegible] நூக்க | வித்யாதரர்கள் தள்ளவும் |
| திருவடி தொழுவான் மயங்கினர் | (தேவரீருடைய) திருவடிகளைத் தொழுவதற்காக வந்து மயங்கிநின்றனர்; |
| அந்தரம் | ஆகாசமும் |
| பார் | பூமியும் |
| இடம் இல்லை | அவகாசமற்றிரா நின்றது; |

அரங்கத்தம்மா!

பள்ளியெழுந்தருளாய்—.

வம்பவிழ்வானவர்வாயுறைவழங்க மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமைக்கலங்காண்டற்கு ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ தோன்றினனிரவியும் துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின்றகல்கின்றதிருள்போய் அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 8

| | |
|---|---|
| [illegible] | (தேவரீருக்கு) ஸமர்ப்பிப்பதற்காக |
| [illegible] | பரிமளம் மிகுந்த |
| [illegible] | அறுகம்புல்லும் |
| [illegible] | சிறந்த |
| [illegible] | சங்கநிதி பத்மநிதிகளும் (கையிலே யுடையராய்க்கொண்டு |
| [illegible] | தேவர்களும் |
| [illegible] | காமதேநுவும் |
| [illegible] | ஒளி பொருந்திய |
| கண்ணாடி முதலா | கண்ணாடி முதலாக |
| எம்பெருமான் | ஸ்வாமியான தேவரீர் |
| காண்டற்கு | கண்டருளுகைக்கு |
| ஏற்பன ஆயின | தகுதியுள்ளவையான |
| படிமைக் கலம் கொண்டு | உபகரணங்களெல்லாவற்றையுங்கொண்டு |
| நல் முனிவர் | மஹர்ஷிகளும் |
| தும்புரு நாரதர் புகுந்தனர் | தும்புரு நாரதர்களும் வந்து நின்ருர்கள் |
| | (இதுவுமன்றி) |
| இரவியும் | சூரியனும் |
| துலங்கு ஒளி | (தனது) மிக்க தேஜஸ்ஸை |
| பரப்பி | எங்கும் பரவச் செய்துகொண்டு |
| தோன்றினன் | உதயமானுன்; |
| இருள் | இருளானது |
| அம்பரதலத்தில் நின்று | ஆகாசத்தில்நின்றும் |
| போய் அகல்கின்றது | நீங்கிப்போயிற்று; |

அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாய்—.

ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள் கெந்தருவருமிவர்கங்குலுமெல்லாம் *
மாதவர்வானவர்சாரணரியக்கர் சித்தரும்மயங்கினர்திருவடிதொழுவான் *
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே. 9

| | |
|---|---|
| [illegible] | குற்றமற்ற |
| [illegible] | சிறுபறையும் |
| [illegible] | ஒற்றைத் தந்தியையுடைய வாத்யமும் |
| [illegible] | மத்தளமும் |
| [illegible] | வீணையும் |
| [illegible] | புல்லாங்குழல்களுமாய் |
| [illegible] | திக்குக்களெங்கும் |
| [illegible] | இவற்றின் முழக்கத்தோடு |
| [illegible] | இசை மாட்டிப் பாட்டு பாடக்கடவரான |
| [illegible] | கின்னரர்களும் |
| [illegible] | கருடர்களும் |
| [illegible] | கந்தர்வர்களும் |
| [illegible] | இதோ மற்றுள்ளவர்களும் |
| மாதவர் | மஹர்ஷிகளும் |
| வானவர் | தேவர்களும் |
| சாரணர் | சாரணர்களும் |
| இயக்கர் | யக்ஷர்களும் |
| சித்தரும் | ஸித்தர்களும் |
| திருவடி தொழுவான் | (தேவரீருடைய) திருவடிக்ளில் வணங்குகைக்காக |
| கங்குலும் எல்லாம் | இரவெல்லாம் |
| மயங்கினர் | (நெருக்கத்தில் வருந்தி) மோஹமுற்றனர்; |
| ஆதலில் | ஆகையாலே |
| அவர்க்கு | அவர்களுக்கு |
| நாள் ஓலக்கம் அருள | பகலோலக்க மருளுகைக்காக |

அரங்கத்தம்மா! பள்ளி எழுந்தருளாய்—.

கடிமலர்க்கமலங்கள்மலர்ந்தனவிவையோ கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ ! *
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித் துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா *
தொடையொத்ததுளவமும்கூடையும்பொலிந்து தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னு
மடியனை * அளியனென்றருளியுன்னடியார்க்காட்படுத்தாய் பள்ளியெழுந்தருளாயே. 10

| | | | |
|---|---|---|---|
| புனல் சூழ் | திருக்காவேரித்தீர்த்தத்தாலே சூழப்பட்ட | ஏறினர் | கரையேறிவிட்டார்கள்; |
| அரங்கா | ஸ்ரீரங்கத்தில் கண்வளர்ந்தருளுமவனே ! | தொடை ஒத்த | ஒழுங்காகத் தொடுக்கப் பெற்ற |
| கடி | பரிமளமுடைய | துளவமும் | திருத்துழாய் மாலையும் |
| கமலம் மலர்கள் | தாமரைப்பூக்களானவை | கூடையும் | பூக்குடலையும் |
| மலர்ந்தன | (நன்றாக மலர்ந்து விட்டன; | பொலிந்து தோன்றிய | விளங்கா நிற்கப்பெற்ற |
| கதிரவன் | (தாமரையை மலர்த்தவல்ல) ஸூர்யனானவன் | தோள் | தோளையுடைய |
| கனை கடல் | கோஷஞ் செய்கையையே இயல்வாகவுடைய கடலிலே | தொண்டரடிப் பொடி யென்னும் | தொண்டரடிப்பொடி என் பெயரையுடைய |
| முளைத்தனன் | உதயகிரியிலே வந்துதோன்றினான்; | அடியனை | தாஸனை |
| துடி இடையார் | உடுக்கை போன்ற (சூக்ஷ்மமான) இடையையுடைய மாதர் | அளியன் என்று அருளி | 'கிருபை பண்ணுகைக் உரிய பாத்திரம்' என் திருவுள்ளம் பற்றி அங் கரித்தருளி |
| சுரி குழல் | (தமது) சுருண்டமயிர் முடியை | உன் அடியார்க்கு | தேவரீருடைய நித்யகிங்கர களான பாகவதர்களுக்கு |
| பிழிந்து உதறி | நீர்ப்பசையறப் பிழிந்து உதறிவிட்டு | ஆள்படுத்தாய் | ஆளாக்க வேணும்; (அத காக) |
| துகில் உடுத்து | (தம்தம்) ஆடைகளை உடுத்துக்கொண்டு | பள்ளி எழுந்தருளாய் | திருப்பள்ளியைவிட்டு எழு தருளவேணும். |

அடி வரவு ;

கதிர் கொழு சுடர் மேட்டு புலம்பின இரவியர் அந்தரம் வம்பு ஏதம் கடி அமலன்

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்த
திருவரங்கத் தமிழ்மாலையில்
திருப்பள்ளியெழுச்சியுரை முற்றிற்று.

---

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளே சரணம்.

திருவரங்கத் தமிழ்மாலையில் மூன்ருவது பிரபந்தம்

## திருப்பாணுழ்வார் அருளிச்செய்த அமலனுதிபிரான்-

### தனியன் உரை

---

ஆபாதசூட மநுபூய ஹரிம் சயாநம் மத்யே கவேரதுஹிதுர் முதிதாந்தராத்மா,
அத்ரஷ்ட்ருதாம் நயநயோர் விஷயாந்தராணும் யோ நிச்சிகாய மநவை முநிவாஹநம் தம்.

| | | | |
|---|---|---|---|
| ய: | யாவரொரு திருப்பாணுழ்வார் | நயநயோ: விஷயாந்தராணும் அத்ரஷ்ட்ருதாம் | (தமது) திருக்கண்கள் (அப்பெருமானன்றி மற்ருென்றையும் காணமாட்டாமையை |
| கவேர துஹிது: | திருக்காவேரியின் | நிச்சிகாய | அறுதியிட்டருளினுரோ, |
| மத்யே | நடுவில் | தம் | அப்படிப்பட்ட |
| சயாநம் | திருக்கண் வளர்ந்தருளுகிற | முநிவாஹநம் | லோகஸாரங்க மஹாமுநியை வாஹநமாகக் கொண்ட திருப்பாணுழ்வாரை |
| ஹரிம் | அழகிய மணவாளப்பெருமாளை | மநவை | சிந்திக்கக்கடவேன். |
| ஆபாதசூடம் | திருவடி தொடங்கித் திருமுடியளவாக | | |
| அநுபூய | (கண்குளிர) அநுபவித்து | | |
| முதித அந்தராத்மா | மகிழ்ந்த சிந்தையராய் | | |

காட்டவேகண்டபாத கமலநல்லாடையுந்தி
தேட்டருமுதரபந்தந்திருமார்வு கண்டஞ்செவ்வாய்
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து
பாட்டினுல்கண்டுவாழும் பாணர்தாள்பரவினேமே.

| | | | |
|---|---|---|---|
| முனி ஏறி | லோகஸாரங்க மஹா முனியின் (தோளின்மேல்) ஏறி | கண்டம் | திருக்கழுத்தும் |
| தனி புகுந்து | தனியே உள்ளே புகுந்து | செம் வாய் | சிவந்த வாயும் |
| காட்டவே கண்ட | (அம்முனிவரர்) காண்பித்தபடியே கண்டு ஸேவிக்கப்பட்ட | வாட்டம் இல் | சோர்வு இல்லாத |
| | | கண்கள் | திருக்கண்களும் (ஆகிய இவற்ருேடு கூடிய) |
| பாத கமலம் | திருவடித்தாமரைகளும் | மேனி | திருமேனியை |
| நல் ஆடை | விலக்ஷணமான திருப்பீதாம்பரமும் | பாட்டினுல் கண்டு வாழும் | பாசுரங்களின் அநுஸந்தாணத்தோடு கூட சேவித்து ஆனந்தித்த |
| உந்தி | திருநாபியும் | | |
| தேட்டரும் | கிடைத்தற்கு அரிதான | பாணர் | திருப்பாணுழ்வாருடைய |
| உதர பந்தம் | பொன் அரைநாணும் | தாள் | திருவடிகளை |
| திரு மார்வு | பிராட்டி வாழ்கிற மார்பும் | பரவினேம் | துதிக்கப்பெற்ருேம். |

---

# அமலனுதிபிரான்

அமலனுதிபிரான் அடியார்க்கென்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன்நீதிவானவன் நீண்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளனவொக்கின்றதே. 1

| | | | |
|---|---|---|---|
| அமலன் | பரிசுத்தனுய் | அடியார்க்கு | (தனது) அடியவர்களான பாகவதர்களுக்கு |
| ஆதி | ஜகத்காரணபூதனுய் | | |
| பிரான் | உபகாரகனுய் | ஆள் படுத்த | ஆட்படுத்துகையாலே வந்த |
| என்னை | (இழிகுலத்தவனுன) என்னை | விமலன் | சிறந்த புகரையுடையனுய் |

| | |
|---|---|
| விண்ணவர் கோன் | நித்யஸூரிகட்குத் தலைவனு யிருந்து வைத்து (ஆச்ரிதர்கட்காக) |
| விரை ஆர் பொழில் | பரிமளம் மிக்க சோலைகளை யுடைய |
| வேங்கடவன் | திருவேங்கட மலையில் வந்து தங்குமவனுய் |
| நிமலன் | ஆச்ரயிப்பார்க்கு அரியனுயி ருக்கையாகிற குற்றமற்று, ஆச்ரித பாரதந்திரியத்தை வெளியிட்டு நிற்குமவனுய் |
| நின்மலன் | அடியாருடைய குற்றத்தைக் காண்கையாகிற தோஷ மில்லாத வத்ஸலனுய், |
| நீதிவானவன் | சேஷசேஷி முறை வழுவாத படி நியாயமே செல்லும் நிலமான பரமபதத்துக்கு நிர்வாஹகனுய் |
| நீள் மதில் | உயர்ந்த மதில்களையுடைய |
| அரங்கத்து | கோயிலிலே (கண் வளர்ந் தருளுகிற) |
| அம்மான் | ஸ்வாமியான அழகிய மண வாளனுடைய |
| திருக்கமலபாதம்- | திருவடித்தாமரைகளானவை |
| வந்து | தானே வந்து |
| என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே | என் கண்ணுக்குள்ளே புகுந்தன போலிரா நின்றனவே. |

**உவந்தவுள்ளத்தனுய் உலகமளந்தண்டமுற *
நிவந்தநீண்முடியன் அன்றுநேர்ந்தநிசாசரரை *
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான் * அரைச்
சிவந்தவாடையின்மேல் சென்றநாமெனசிந்தனையே.** 2

| | |
|---|---|
| உவந்தஉள்ளத்தன் ஆய் | மகிழ்ச்சியோடு கூடிய மனத்தையுடையனுய்க் கொண்டு |
| உலகம் அளந்து | மூவுலகங்களையும் அளந்து |
| அண்டம் உற | அண்டகடாஹத்தளவுஞ் சென்று முட்டும்படி |
| நிவந்த | உயர்த்தியை அடைந்த |
| நீள் முடியன் | பெரிய திருமுடியையுடையவனுய் |
| அன்று | முற்காலத்தில் |
| நேர்ந்த | எதிர்த்து வந்த |
| நிசாசரரை | ராக்ஷஸர்களை |
| கவர்ந்த | உயிர்வாங்கின |
| வெம் கணை | கொடிய அம்புகளையுடைய |
| காகுத்தன் | இராமபிரானுய், |
| கடி ஆர் | மணம்மிக்க |
| பொழில் | சோலைகளையுடைய |
| அரங்கத்து | ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருப்பவனுன |
| அம்மான் | எம்பிரானுடைய |
| அரை | திருவரையில் (சாத்திய) |
| சிவந்த ஆடையின் மேல் | பீதாம்பரத்தின்மேல் |
| என சிந்தனை | என்னுடைய நினைவானது |
| சென்றது ஆம், | பதிந்ததாயிற்று. |

**மந்திபாய் வடவேங்கடமாமலை * வானவர்கள்
சந்திசெய்யநின்ருன் அரங்கத்தரவினணையான் *
அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில் *
உந்திமேலதன்ரே அடியேனுள்ளத்தின்னுயிரே.** 3

| | |
|---|---|
| மந்தி | குரங்குகளானவை |
| பாய் | (ஒருகிளையில் நின்றும் மற்ருெரு கிளையில்) பாயப் பெற்ற |
| வடவேங்கடம் மா மலை | வடதிசையிலுள்ள திருவேங் கடமென்னும் திருமலையிலே |
| வானவர்கள் | நித்யஸூரிகள் |
| சந்தி செய்ய நின்ருன் | பூக்களைக்கொண்டு ஆராதிக் கும்படி நிற்பவனுல், |
| அரங்கத்து | கோயிலிலே |
| அரவு இன் அணையான் | திருவனந்தாழ்வானுகிற போக்யமான படுக்கையை யுடையவனுன அழகிய மண வாளனுடைய |
| அந்தி போல் நிறம் ஆடையும் | செவ்வானம்போன்ற நிறத் தையுடைய திருப்பீதாம் பரமும் |
| அதன் மேல் | அப்பீதாம்பரத்தின் மேலே |
| அயனை படைத்தது ஓர் எழில் உந்தி மேலது அன்ரே | பிரமனைப்படைத்த ஒப்பற்ற அழகையுடைய திருநாபிக் கமலமும் ஆகிய இவற்றின் மேற் படிந்ததன்ரே |
| அடியேன் உள்ளத்து இன் உயிர் | என்னுடைய மனஸ்ஸிலே விளங்குகிற இனிதான ஆத்மஸ்வருபம். |

* * *—"வடவேங்கட மாமலை நின்றான் - அரங்கத்தரவினணையான்" என்ற சொற்போக்கால் உபய காவேரிமத்தியில் கோயிலிலே பாங்காகக் கண்வளர்ந்தருள்வதற்காகச் சேணுயர்ந்த திருமலையிலே நின்று இடம் பார்த்தான்போலும் என்று நம் ஆசாரியர்கள் ரஸோக்தியாக அருளிச் செய்வர்கள். கோயில்வாஸமாகிற உபேயத்திற்குத் திருமலையில்வாஸம் உபாயமென்றதாயிற்று. * மலைமேல் தான் நின்று என் மனத்துளிருந்தானை * என்ற திருவாய்மொழி இங்கு நினைக்கத்தக்கது. ... (3)

**சதுரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன் தலைபத்து**
**உதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன் ***
**மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்**
**றுதரபந்தம் என்னுள்ளத்துள் நின்றுலாகின்றதே.** 4

| | | | |
|---|---|---|---|
| சதுரம் மா மதிள் சூழ் இலங்கைக்கு இறைவன் | நாற்சதுரமாய் உயர்ந்திருக்கிற மதிள்களாலே சூழப்பட்ட லங்காநகரத்திற்கு நாதனான இராவணனை | வண்டு மதுரமா பாட | வண்டுகளானவை மதுரமாக இசைபாட (அதற்குத் தகுதியாக) |
| ஓட்டி | (முதல் நாள் யுத்தத்தில்) தோற்று ஓடும்படி செய்து (மறுநாட்போரில்) | மா மயில் ஆடு | சிறந்த மயில்கள் கூத்தாடப் பெற்ற |
| தலை பத்து | (அவனது) தலைபத்தும் | அரங்கத்து அம்மான் | திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமியுமான ஸ்ரீரங்கநாதனுடைய |
| உதிர | (பனங்காய்போல்) உதிரும்படி | திரு வயிறு உதரபந்தம் | திருவயிற்றில் சாத்தியுள்ள 'உதரபந்தன' மென்னும் திருவாபரணமானது |
| ஓர் | ஒப்பற்ற | | |
| வெம் கணை | கூர்மையான அஸ்த்ரத்தை | | |
| உய்த்தவன் | ப்ரயோகித்தவனும், | என் உள்ளத்துள் நின்று | என் நெஞ்சினுள் நிலைத்து நின்று |
| ஓதம் வண்ணன் | கடல்போன்ற (குளிர்ந்த) வடிவையுடையவனும், | உலாகின்றது | உலாவுகின்றது. |

* * *—இரண்டாமடியிலுள்ள 'ஓட்டி' என்பதை இராவணனிடத்தே அந்வயிக்காமல் வெங்கணையிலே அந்வயிக்கவுமாம். இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிரும்படியாக ஓர் வெங்கணையை யோட்டி உய்த்தவன் என்க. திருவயிற்றுதரபந்தம்=திருவயிற்றிலே சாத்தியுள்ள உதரபந்தனமென்கிற திருவாபரணம் என்று பொருள்படுதலால் 'வயிறு, உதரம்' என்பன புனருக்தியாகா. ... (4)

**பாரமாய பழவினைபற்றறுத்து * என்னைத்தன்**
**வாரமாக்கிவைத்தான் வைத்ததன்றியென்னுள்புகுந்தான் ***
**கோரமாதவம்செய்தனன்கொலறியேன் அரங்கத்தம்மான் * திரு**
**வாரமார்பதன்றோ அடியேனையாட்கொண்டதே.** 5

| | | | |
|---|---|---|---|
| பாரம் ஆய | பொறுக்க முடியாத சுமையாயிரா நின்ற | கோரம் மா தவம் | உக்கிரமான பெரியதொரு தபஸ்ஸை |
| பழ வினை பற்று அறுத்து | அநாதியான பாபங்களின் சர்பந்தத்தைத் தொலைத்து | செய்தனன் கொல் | (முற்பிறவியில்) செய்திருப்பேனோ என்னவோ? |
| என்னை | (அதனால் பாபம் நீங்கப் பெற்ற) அடியேனை | அறியேன் | அறிகிறேனில்லை; |
| தன் வாரம் ஆக்கி வைத்தான் | தன்னிடத்தில் அன்பு உடையவனாகப் பண்ணி வைத்தான்; (ரங்கநாதன்.) | அரங்கத்து அம்மான் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| வைத்தது அன்றி | இப்படி செய்து வைத்தது மல்லாமல் | திரு ஆரம் | பிராட்டியையும் முக்தாஹாரத்தையும் உடைத்தான |
| என்னுள் புகுந்தான் | என் ஹ்ருதயத்திலும் பிரவேசித்து விட்டான்; (இப்படிப்பட்ட பாக்கியத்தைப் பெறுதற்கு உறுப்பாக, நான்) | மார்பு அது அன்றோ | அத்திருமார்பன்றோ |
| | | அடியேனை | தாஸனான என்னை |
| | | ஆள்கொண்டது | அடிமைப்படுத்திக் கொண்டது. |

* * *—அடியார்களைப் பரிந்துகாத்தருளவல்ல பெரிய பிராட்டியாரும், ஸர்வ ரக்ஷகத்வஸூசகமான ஹாரமும் திகழப்பெற்ற திருமார்பினழகே என்னை ஆட்படுத்திக்கொண்டதென்கிறார். ‘கோரமாதவம் செய்தனன் கொல்’ என்றவிடத்து ‘செய்தனன்’ என்பதைத் தன்மையாகக் கொள்ளாமல் படர்க்கையாகக் கொள்வதுமுண்டு; தன்மையாகக் கொள்ளுமளவில், இப்படிப்பட்ட பாக்கியம் பெறுதற்கு நான் என்ன தவஞ் செய்தேனோ! என்றதாம். படர்க்கையாகக் கொள்ளுமளவில், இப்படி யென்னெஞ்சினுள் புகுவதற்கு எம்பெருமான் உபய காவேரீமத்தியிலே நின்றுகொண்டு என்ன கடுந்தவம் புரிந்தானோ! என்றதாம். ஒரு சேதநனைப் பெறுகை ஈச்வரனுக்குப் பரம புருஷார்த்தமாகையாலே தவம் செய்யவேண்டியவன் அவனே யென்க. இரண்டாமடியில், வாரம் - பக்ஷபாதம். ... ... (5)

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூழ் அரங்கநகர்மேயவப்பன் *
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலமெழுமால்வரை * முற்றும்
உண்டகண்டங்கண்டீர் அடியேனையுய்யக்கொண்டதே. 6

| | | | |
|---|---|---|---|
| துண்டம் | ஒரு துண்டாயிருக்கிற (கலா மாத்ரமான) | அப்பன் | ஸ்வாமியுமான ஸ்ரீ ரங்கநாதனுடைய |
| வெண் பிறையன் | வெளுத்த சந்திரனை (முடியிலே) உடையனான சிவபெருமானுடைய | அண்டர் | அண்டத்துக்குட்பட்ட தேவாதி வர்க்கங்களையும் |
| துயர் | (பிச்சை யெடுத்துத் திரிந்த) பாதகத்தை | அண்டம் | அண்டங்களையும் |
| தீர்த்தவன் | போக்கினவனும் | பகிரண்டம் | அண்டாவரணங்களையும் |
| அம் சிறைய வண்டு | அழகிய சிறகையுடைய வண்டுகள் | ஒரு மா நிலம் | ஒப்பற்ற மஹாப்ருதிவியையும் |
| வாழ் | வாழ்தற்கிடமான | எழு மால் வரை | ஏழுகுல பர்வதங்களையும் |
| பொழில் சூழ் | சோலைகள் சூழப் பெற்ற | முற்றும் | சொல்லிச் சொல்லாத மற்றெல்லாவற்றையும் |
| அரங்கம் நகர் | திருவரங்கப்பெருநகரிலே | உண்ட | அமுதுசெய்த |
| மேய | பொருந்தியிரா நின்ற | கண்டம் கண்டீர் | திருக்கழுத்துக்கிடீர் |
| | | அடியேனை | தாஸனான என்னை |
| | | உய்யக்கொண்டது | உஜ்ஜீவிப்பது. |

* * *—முதலடியில் ‘பிறையன்’ ‘பிறையின்’ என்பன பாடபேதங்கள். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் ‘சந்த்ரனுடைய க்ஷயத்தைப் போக்கினனென்றுமாம்’ என்றருளிச் செய்தது கொண்டு ‘பிறையின்’ என்கிற பாடாந்தரம் ஊஹிக்கப்படுகிறது. ... ... .... ... ... (6)

கையினார்சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார் கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனார் அரவினணைமிசைமேயமாயனார் *
செய்யவாய்ஐயோ! என்னைச்சிந்தைகவர்ந்ததுவே. 7

| | | | |
|---|---|---|---|
| கையின் | திருக்கைகளில் | அணி அரங்கனார் | அழகு பொருந்திய திருவரங்கத்திற் கண்வளர்ந்தருள்பவராய் |
| ஆர் | பொருந்தியிருக்கிற | அரவு இன் அணை மிசை மேய | திருவனந்தாழ்வானாகிற இனிய திருப்பள்ளியின்மீது பொருந்திய |
| சுரி சங்கு | சுரியையுடைய திருச்சங்கையும் | மாயனார் | ஆச்சரிய செய்கைகளையுடையரான ஸ்ரீரங்கநாதருடைய |
| அனல் ஆழியர் | தீ வீசுகின்ற திருவாழியையும் உடையராய், | செய்ய வாய் | சிவந்த திருப்பவளமானது |
| நீள் வரைபோல் | பெரியதொரு மலைபோன்ற | என்னை | என்னுடைய |
| மெய்யனார் | திருமேனியை யுடையராய் | சிந்தை கவர்ந்தது | நெஞ்சைக் கொள்ளைகொண்டது |
| துளபம் விரை ஆர் | திருத்துழாயின் பரிமளம் மிகப் பெற்று அதனால் | ஐயோ! | (ஆநந்தாதிசயக் குறிப்பு.) |
| கமழ் | பரிமளியா நின்றுள்ள | | |
| நீள் முடி | உயர்ந்த திருவபிஷேகத்தை யுடையராய் | | |
| எம் ஐயனார் | எமக்கு ஸ்வாமியாய் | | |

* * *—எம்பெருமானை முழுக்க அனுபவிக்கப் பாரித்திருக்கையில் இடையிலே அதாம் நெஞ்சைக் கொள்ளைகொண்டு விட்டதே! இதற்கென் செய்வேன்? என் பார்போலே ஐயோ என்கிறார். "பண்டே நெஞ்சுபறிகொடுத்த வென்னை அநியாயம் செய்வதேயென்று கூப்பிடுகிறார்" என்பர் பெரியவாச்சான்பிள்ளை. "ஐயோவென் றது—ஆச்சர்யத்தையாதல் அநுபவிக்க அரிதானபடியையாதல், அநுபவரஸத்தை யாதல் காட்டுகிறது" என்பர் முனிவாஹன போகத்தில். .... .... (7)

**பரியனாகிவந்த அவுணனுடல்கீண்ட * அமரர்க்**
**கரியவாதிப்பிரான் அரங்கத்தமலன்முகத்து ***
**கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டவப்**
**பெரியவாயகண்கள் என்னைப்பேதைமைசெய்தனவே. 8**

| | | | |
|---|---|---|---|
| பரியன் ஆகி | மிகவும் ஸ்தூலமான வடிவை யுடையனாய்க் கொண்டு | முகத்து | திருமுக மண்டவத்தில் |
| வந்த | (ப்ரஹ்லாதனை நலிய) வந்த | கரிய ஆகி | கறுத்தநிறமுடையவையாய் |
| அவுணன் | அஸுரனான இரணியனுடைய | புடை பரந்து | விசாலங்களாய் |
| உடல் | சரீரத்தை | மிளிர்ந்து | பிரகாசமுடையவையாய் |
| கீண்ட | கிழித்துப் பொகட்டவனும், | செவ்வரி ஓடி | செவ்வரி படர்ந்திருப்பனவாய் |
| அமரர்க்கு | பிரமன் முதலிய தேவர்கட்கும் | நீண்ட | (காதுவரை) நீண்டிருப்பனவாய் |
| அரிய | அணுக முடியாதவனும் | | |
| ஆதி | ஜகத்காரணபூதனும் | பெரிய ஆய | பெருமை பொருந்தியவையு மான |
| பிரான் | மஹோபகாரகனும் | | |
| அரங்கத்து | கோயிலில் எழுந்தருளியிருக்கிற | அக் கண்கள் | அந்தத்திருக்கண்களானவை |
| | | என்னை | அடியேனை |
| அமலன் | பரமபாவநனுமாகிய எம்பெருமானுடைய | பேதைமை செய்தன | உந்மத்தனாகச் செய்துவிட்டன. |

* * *—எப்போதும் அழகிய மணவாளனது திருக்கண்களின் பெருமையையே தாம் வாய்வெருவி, பலரும் பேயனென்று ஏசும்படியான உன்மத்த நிலைமையை அடைந்திட்டதாக அருளிச்செய்கிறார். கறுத்த நிறமுடைமை, விசாலமாயிருக்கை, ஒளி பொருந்தியிருக்கை. செவ்வரி படர்ந்திருக்கை [சிறு கொடிபோன்ற சிவந்த ரேகை யோடுதல்] காதளவும் நீண்டிருக்கை ஆகிய இவை கண்களுக்குப் பெருமை.

**ஆலமாமரத்தினிலைமேல் ஒருபாலகனாய் ***
**ஞாலமேழுமுண்டான் அரங்கத்தரவினணையான் ***
**கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில் ***
**நீலமேனிஐயோ! நிறைகொண்டதென்னெஞ்சினையே. 9**

| | | | |
|---|---|---|---|
| மா | பெரிதான | முத்து தாமமும் | முத்துவடமும் (ஆகிய இவை போன்ற பல்லாயிரம் திருவாபரணங்கள்) |
| ஆல மரத்தின் | ஆலமரத்தினுடைய | | |
| இலை மேல் | (சிறிய) இலையிலே | | |
| ஒரு பாலகன் ஆய் | ஒரு சிறுபிள்ளையாகி | | |
| ஞாலம் ஏழும் உண்டான் | ஏழுலகங்களையும் திருவயிற்றிலே வைத்து நோக்கினவனும் | முடிவு இல்லது | எல்லைகாண முடியாமல் அபரிமிதமாக விளங்காநிற்கப் பெற்றதும் |
| அரங்கத்து | கோயிலிலே | ஓர் எழில் | ஒப்பற்ற அழகையுடையதும் |
| அரவு இன் அணையான் | திருவனந்தாழ்வானாகிற திருப்பள்ளியின்மீது சாய்ந்தருள்பவனுமான ஸ்ரீரங்கநாதனுடைய | நீலம் | கருநெய்தல் மலர் போன்றது மான |
| | | மேனி | திருமேனியானது |
| கோலம் | அழகிய | என் நெஞ்சினை | எனது நெஞ்சினுடைய |
| மா | சிறந்த | நிறை | அடக்கத்தை |
| மணி ஆரமும் | ரத்நங்களால் செய்யப்பட்ட ஹாரமும் | கொண்டது | கொள்ளைகொண்டுபோயிற்று. |

ஐயோ! = இதற்கென்செய்வேன்? என்கிறார்.

* * *—தனித்தனி ஒவ்வொரு அவயவத்திலும் ஈடுபட்டுப் போந்த ஆழ்வா
அவயவியான திருமேனியை யநுபவித்துத் தமது நெஞ்சு பரவசமானபடியை
பேசுகிருர் இதில். கோலமாமணி யாரங்களையும் முத்துத் தாமங்களையும் மு
வில்லாத அழகையும் நீல நிறத்தையுமுடைய திருமேனி என்றுரைத்தலுமா
நெஞ்சை நிறை கொள்வதாவது மோஹிக்கச் செய்கை. ... ... (9

**கொண்டல்வண்ணனைக் கோவலனுய்வெண்ணெய்**
**உண்டவாயன் * என்னுள்ளம் கவர்ந்தானை ***
**அண்டர்கோனணியரங்கன் என்னமுதினைக்**
**கண்டகண்கள் * மற்ருென்றினைக் காணுவே.** 1

| | |
|---|---|
| கொண்டல் வண்ணனை | காளமேகம் போன்ற வடிவை யுடையவனும் |
| கோவலன் ஆய் வெண்ணெய் உண்டவாயன் | கோபாலகுமாரனுகப் பிறந்து வெண்ணெயமுது செய்த திருவாயையுடையவனும் |
| என் உள்ளம் கவர்ந்தானை | என்னுடைய நெஞ்சை கொள்ளை கொண்டவனும் |
| அண்டர்கோன் | நித்யசூரிகட்குத் தலைவனும் |
| அணி அரங்கன் | (பூமண்டலத்துக்கு) அலங்காரமான திருவரங்கத்தில் கண்வளர்ந்தருள்பவனும் |
| என் அமுதினை | எனக்குப் பரமபோக்யமா அம்ருதமாயிருப்பவனுமா அழகியமணவாளனை |
| கண்டகண்கள் | ஸேவிக்கப்பெற்ற (எனது கண்களானவை |
| மற்று ஒன்றினை | வேருென்றையும் (பரமப நாதனையும்) |
| காணு | காண விரும்பமாட்டா. |

* * *—இவ்வாழ்வார் ' அடியேன் ' என்னுமதொழிய, இப்பிரபந்தம் தலை
கட்டுமளவிலும் தம்முடைய பேரும் ஊரும் பேச மறக்கும்படி தாம் பெற்ற அனுபவ
திற்கு இனியொரு விச்சேதம் வாராதபடி பெரியபெருமாள் அருள்புரிந்தமையை
கண்டு வியந்து அப்பெருமாளுடைய திருமேனியிலே தாம் ஒரு நீராக லயம்பெற்
படியைப் பேசித் தலைக்கட்டுகிருர். கொண்டல்வண்ணன்=கடலிலுள்ள நீரை
யடங்கலும் முகந்துகொண்டு காவேரீ மத்தியில் வந்து படிந்ததொரு காளமேக
போன்று கண்டாருடைய விடாயைத் தீர்க்கவல்ல திருமேனியை யுடையவன்
அன்றி, மேடுபள்ள வாசியின்றித் தாழ்ந்தாருயர்ந்தார் அனைவரும் உஜ்ஜீவிக்கும்பட
காருண்யரஸத்தை வர்ஷிக்குமவன் என்றுமாம், கொண்டல்-மேகம்; தொழிலாகு
பெயர். மற்ருென்றினைக்காணு=பரவ்யூஹாதிகள் மற்றுள்ள அர்ச்சாவதாரங்கள்
ஒன்றையும் காணமாட்டா என்க. பரமபதநாதனை வியாவர்த்திப்பதே இங்கு
முக்கியம். இப்பாசுரம் அருளிச்செய்தவுடனே பெரிய பெருமாள் அத்திருமே
யோடு ஆழ்வாரை அங்கீகரித்தருள அனைவரும் காண அப்பிரானது திருமேனியிலே
அந்தர்ப்பவித்து, காய்ந்த இரும்புண்ட நீராயினர் என்று ஸம்பிரதாயம்வல்
பெரியோர்கள் அருளிச்செய்வர். .... .... .... .... (10

அடிவரவு :
அமலன் உவந்த மந்தி சதுரம் பாரம் துண்டம் கை பரி ஆலம் கொண்டல் கண்ணி

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்த
திருவரங்கத் தமிழ் மாலையில்— அமலனுதிபிரான் உரை முற்றிற்று

திருப்பாணுழ்வார் திருவடிகளே சரணம்

திருவரங்கத் தமிழ்மாலையில் நம்மாழ்வாருடைய பதிகமொன்று.

## திருவாய்மொழி—ஏழாம்பத்து—இரண்டாம் பதிகம்—கங்குலும் பகலும்

அவதாரிகை :—நம்மாழ்வார் தாமான தன்மையிலேயிருந்து பேசுவதுதவிர, [illegible] பாசுரமாகவும் தோழிபாசுரமாகவும் தாய்பாசுரமாகவும் பேசுவதுமுண்டு சில திருவாய்மொழிகள் ; தாய்பாசுரமாகச் செல்லுகிறதாயிற்று இத்திருவாய்மொழி. [illegible] திறத்திலே அதிமாத்ரமாக ஈடுபாடுகொண்ட ஆழ்வார் தமது நிலைமை [illegible] தம் வாயாலே பேசமாட்டாமல் தாய்வாயாலே பேசுகிறாராயிற்று. .... *

கங்குலும்பகலும் கண்டுயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னும் இருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்கின்றாயே. 1

| | | | |
|---|---|---|---|
| செங்கயல்பாய் நீர்த் திருவரங்கத்தாய் | அழகிய மீன்கள் துள்ளி விளையாடுமிடமான திருக்காவேரி சூழ்ந்த கோயிலில் சயனித்தருள் பவனே! (இப் பெண்பிள்ளையானவள்) | என்று கை கூப்பும் | என்று சொல்லி அஞ்ஜலி பண்ணுநின்றாள்; |
| | | தாமரை கண் என்றே தளரும் | (என்னைக் கடாக்ஷித்த) தாமரைக் கண்களன்றோ இவை! என்று சொல்லித் தளர்கின்றாள்; |
| கங்குலும் பகலும் | இரவும் பகலும் | உன்னை விட்டு எங்ஙனே தரிக்கேன் என்னும் | '(பிரானே) உன்னைவிட்டுப் பிரிந்து தரிக்கவும் முடியுமோ?' என்கிறாள்; |
| கண் துயில் அறியாள் | கண்ணுறங்கப் பெறுகின்றிலள்; | இரு நிலம் | விஸ்தீரணமான பூதலத்தை |
| கண்ண நீர் கைகளால் இறைக்கும் | கண்ணீரைக் கைகளாலே இறைக்க வேண்டும்படி தாரை தாரையாய்ப் பெருக விடாநின்றாள்; | கை துழாவிருக்கும் | கைகளாலே துழாவா நின்றாள்; (ஸ்ரீரங்கநாதனே!) |
| சங்கு சக்கரங்கள் | திருவாழி திருச்சங்குகள் இதோ ஸேவை ஸாதிக்கின்றன | இவள் திறத்து | இப்பெண்பிள்ளை விஷயத்தில் |
| | | என் செய்கின்றாய் | ஏது செய்வதாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறாய்? |

***—ஸ்ரீரங்கநாதனே! இப் பராங்குசநாயகி உன்னைக் காணவாசைப்பட்டு [illegible] பெருமையாலே கண் துஞ்சாதே கண்ணீரைப் பெருக்கிக்கொண்டிரா நின்றாள்; [illegible] ப்ரகர்ஷத்தாலே உன்னை நேரில் ஸேவிக்கப்பெற்றதாகக்கொண்டு சங்குசக்[கரங்களை] நோக்கிக் கைகூப்புகின்றாள் ; 'இவையன்றோ என்னைக் கடாக்ஷித்தருளி [ஈடு]படுத்தின தாமரைக்கண்கள்' என்று சொல்லி, இப்போது ஸாக்ஷாத்தாகக் [காணப்]பெறவில்லையே! என்று நொந்து தளர்கின்றாள் ; உன்னைப் பிரிந்து தரிக்க [முடிய]வில்லையே! என்கிறாள் ; தன்னுடைய ஸந்தாபத்தைப் பொறுக்க மாட்டாமே [தரை]யெல்லாம் கையாலே துழாவா நின்றாள் ; திருவரங்கநாதனே ! இவள் திறத்து [உனது] ஸங்கல்பம் எத்தகைத்தோ தெரியவில்லையே! என்று தாய் அலமருகின்ற [பாசுர]மாயிருக்கிறபடி. ... ... .... ... ... (1)

என்செய்கின்றாயென் தாமரைக்கண்ணாவென்னும் கண்ணீர்மல்கவிருக்கும் *
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும் வெவ்வுயிர்த்துயிர்த்துருகும் *
முன்செய்தவினையேமுகப்படாயென்னும் முகில்வண்ணாதகுவதோவென்னும் *
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாய் என்கொலோமுடிகின்றதிவட்கே. 2

(இப்பெண்பிள்ளையானவள்)

| | |
|---|---|
| என் தாமரை கண்ணு | என்னையீடுபடுத்திக்கொண்ட செந்தாமரைக்கண்ணனே! |
| என் செய்கின்ருய் என்னும் | என்னை என் செய்வதாக விருக்கின்ருய்? என்று சொல்லுகின்ருள்; |
| கண் நீர் மல்க இருக்கும் | கண்ணீர் ததும்பநின்று ஸ்தப்தையாயிருக்கின்ருள்; |
| எறி நீர் திரு அரங்கத்தாய் | அலையெறிகின்ற திருக்காவேரி சூழ்ந்த திருவரங்கத்தில் துயில்பவனே! |
| என் செய்கேன் என்னும் | (உன்னைப் பெறுதற்கு) என்ன செய்வேன்? என்கிருள்? |
| வெவ்வுயிர்த்து உயிர்த்து உருகும் | வெப்பமாகப் பலகாலும் பெருமூச்சுவிட்டு கரைகின்ருள்; |
| முன் செய்த வினையே | முற்பிறவிகளிலே நான் பண்ணிவைத்த கருமமே! |
| முகப்படாய்! என்னும் | என் கண்முன்னே வந்து நில் பார்ப்போம் என்கிருள்; |
| முகில் வண்ணு | காளமேக வண்ணனை எம் பெருமானே! |
| இது தகவோ என்னும் | இதுதானே உன்னுடைய க்ருபைக்கு லக்ஷணம்! என்கிருள்; |
| இவ் உலகம் | இந்த ப்ரபஞ்சங்களை யெல்லாம் |
| முன் செய்து | முற்காலத்தில் சிருஷ்டித்து |
| உண்டு உமிழ்ந்து | (காலவிசேஷங்களிலே) உண்பதும் உமிழ்வதும் செய்து |
| அளந்தாய் | அளப்பதும் செய்தும் பல முகமாக ரக்ஷித்தருளும் பெருமானே! |
| இவட்கு | இங்ஙனே துடிக்கின்ற என் பெண்பிள்ளைக்கு |
| முடிகின்றது என்கொலோ | (இந்தப் பரிதாபமெல்லாம்) என்ருல்முடியப்போகிறதோ? |

* * *—எம்பெருமான் என்னை இப்படி உபேக்ஷிக்கும்படி நான் என்ன பாவம் பண்ணிவிட்டேன்? அப்படி நான் செய்த பாவம் ஏதேனுமுண்டாகில் அது என்னெதிரே வந்து நிற்கட்டுமே யென்கிருளென்பது ''முன்செய்தவினையே முகப்படாயென்னும்'' என்றதன் கருத்தாம். ''தகுவதோ'' ''தகவுஇதோ'' என்பன பாடபேதங்கள். (2)

வட்கிலளிறையும்மணிவண்ணுவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுரருயிரெல்லாமுண்ட ஒருவனேயென்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்செய்திட்டாயே. 3

(இப்பெண்பிள்ளை)

| | |
|---|---|
| இறையும்வட்கு இலள் | சிறிதும் வெட்கமில்லாதவளாகி |
| மணிவண்ணு என்னும் | நீலமணிவண்ணனே! என்று கூப்பிடா நின்ருள்; |
| வானமே நோக்கும் | (யானைக்கு உதவ வந்தாப்போலே நமக்கும் உதவ வரக்கூடுமென்று) வானத்தையே நோக்குகின்ருள்; |
| மையாக்கும் | (எதிர்பார்த்தபடி வந்துதோன்றக் காணுமையினுல்) மோஹமடைகின்ருள்; |
| உட்கு உடை அசுரர் | வலிமையுடையவர்களான அசுரர்களினுடைய |
| உயிர் எல்லாம் உண்ட | பிராணன்களை யெல்லாம் கவர்ந்த |
| ஒருவனே என்னும் | அத்விதீயனே! என்கிருள்; |
| உள் உருகும் | உள்ளம் நீர்ப்பண்டமாய் உருகப் பெறுகின்ருள்; |
| கட்கு இலீ | கண்களுக்கு விஷயமாக மாட்டாதவனே! |
| காகுத்தா கண்ணனே | ஸ்ரீராம க்ருஷ்ணுவதாரங்கள் செய்து எல்லார் கண்ணுக்கும் விஷயமானவனே! |
| உன்னை காணும் ஆறு அருளாய் என்னும் | உன்னை நான் கண்ணுரக் காணும்விதம் அருளவேணுமென்கின்ருள்; |
| திண் கொடி மதிள் சூழ் திரு அரங்கத்தாய் | திடமான கொடிகள் விளங்கும் மதிள்களாலே சூழப்பட்ட திருவரங்கத்தில் துயிலும் பெருமானே! |
| இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| என் செய்திட்டாய் | நீ செய்தது என்னே! |

இட்டகாலிட்டகையளாயிருக்கும் எழுந்துலாமயங்குங்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வந்திடாயென்றென்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தாய் இவள்திறத்தென்சிந்தித்தாயே. 4

| | | | |
|---|---|---|---|
| (இப் பெண்பிள்ளையானவள்) | | கடல் வண்ணா கடியைகாண் என்னும் | கடல் வண்ணனே! என் விஷயத்தில் நீ கடுமை கொண்டிருக்கிருயே! என்கிருள்! |
| இட்ட கால் இட்ட கையள் ஆய் இருக்கும் | (சில சமயங்களிலே) கையும் காலும் இட்டது இட்டபடியேயிரா நின்ருள் | வட்டம் வாய் நேமி வலம் கையா என்னும் | வட்டமான விளிம்பையுடைய திருவாழியை வலத்திருக்கையிலுடையவனே என்கின்ருள்; |
| (மற்றுஞ் சிலசமயங்களிலே) | | | |
| எழுந்து உலாம் | எழுந்து உலாவுகின்ருள்; | | |
| மயங்கும் | மயங்கா நின்ருள், | வந்திடாய் என்று என்றே மயங்கும் | வாராய் வாராய் என்று பலகாலு மழைத்தும் வரக்காணுதுமயங்குகின்ருள்; |
| கை கூப்பும் | (அப்படி மயங்கின தசையிலும்) கைகூப்புதல் தவிர்கின்றிலள்; | சிட்டனே | பரமபவித்திரனே! |
| | | செழு நீர் திரு அரங்கத்தாய் | நீர்வளம் பொருந்திய கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! |
| காதல் கட்டமே என்று மூர்ச்சிக்கும் | (பகவத் விஷயத்திலே) காதலைத் தாங்குவது வெகு கஷ்டமென்று சொல்லி மூர்ச்சை யடைகின்ருள்; | இவள் திறத்து என் சிந்தித்தாய் | இப்பெண்பிள்ளை விஷயமாக நீ சிந்தித்திருப்பது என்ன? |

சிந்திக்கும்திசைக்கும்தேறும்கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்க வந்திடாயென்றென்றேமயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே அலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன் சரணம்சார்வதேவலித்த தையலைமையல்செய்தானே. 5

| | | | |
|---|---|---|---|
| அந்திபோது | மாலைப்பொழுதிலே | திசைக்கும் | அறிவு அழியா நின்ருள்; |
| அவுணன் உடல் இடந்தானே | (நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றி) இரணியனது உடலைப் பிளந்தவனே! | தேறும் | (திடீரென்று) தெளிவு பெறுகின்ருள்; |
| | | கைகூப்பும் | அஞ்சலி பண்ணுநின்ருள்; |
| அலை கடல் கடைந்த ஆர் அமுதே | அலையெறிகின்ற கடலை (த்தேவர்களுக்காக)க் கடைந்த ஆராவமுதமே | திரு அரங்கத்து உள்ளாய் என்னும் | கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே! என்கிருள்; |
| சந்தித்து உன் சரணமே சார்வது வலித்த தையலை மையல் செய்தானே | உன்னோடே கலந்து உன் திருவடிகளிலேயே லயிக்கவேணுமென்கிற திடமான அத்யவஸாயங் கொண்ட இப் பெண் பிள்ளையை மதிகெடுத்தவனே! | வந்திக்கும் | தலைவணங்கா, நின்ருள்; |
| | | ஆங்கே | அவ்வளவிலே |
| | | மழை கண் நீர் மல்க | கண்ணீர் தாரை தாரையாகப் பெருகநின்று |
| (இப் பெண்பிள்ளையானவள்) | | | |
| சிந்திக்கும் | ஏற்கெனவே விதிவசமாக நேர்ந்திருந்த கலவியைப் பற்றிச் சிந்தனைசெய்கின்ருள்! | வந்திடாய் என்று என்றே மயங்கும் | (எம்பெருமானே!) வாராய் வாராய் என்று பலகாலுஞ் சொல்லி (வரக் காணுது) மோஹிக்கின்ருள். |

மையல்செய்தென்னை மனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும் *
செய்யவாய்மணியேயென்னும் தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும் *
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய் பாவியேன்செயற்பாலதுவே. 6

(இப் பெண்பிள்ளையானவள்,)

| | |
|---|---|
| என்னை மையல் செய்து | என்னை வியாமோஹப்படுத்தி |
| மனம் கவர்ந்தானே என்னும் | மனதைக்கொள்ளை கொண்டவனே ! என்கிருள் ; |
| மா மாயனே என்னும் | மிகப்பெரிய மாயங்களை யுடையவனே ! என்கிருள் ; |
| செய்ய வாய் மணியே என்னும் | சிவந்த அதரசோபையை உடையையாய்க்கொண்டு நீலமணி போன்றவனே என்கிருள் ; |
| தண் புனல் சூழ் திரு அரங்கத்து உள்ளாய் என்னும் | குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் கண் வளர்ந்தருள்பவனே ! என்கிருள். |
| வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில் ஏந்தும் | (ஆச்ரித விரோதி விஷயத்தில்) வெப்பமே வடிவெடுத்த பஞ்சாயுதங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற |
| விண்ணோர் முதல் என்னும் | நித்யஸூரிநாதனே! என்கிருள் ; |
| பை கொள் பாம்பு அணையாய் | படமெடுத்த ஆதிசேஷன் மீது சயனித்தருள்பவனே ! |
| இவள் திறத்து | இப் பெண்பிள்ளை விஷயமாக |
| பாவியேன் செயல் பாலது அருளாய் | பாவியேனை நான் செய்யக்கூடியது இருந்தால் அதை அருளிச்செய்யவேணும். |

* * *—இவள் விஷயத்தில் என்னல் செய்யத்தக்கது ஒன்றுமில்லையே ! என்கிற கருத்தில் ஈற்றடி அமைந்தது. அநந்யகதித்வம் சொன்னபடி. ... (6)

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்றநின்ருனே *
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்ட கடல்வண்ணகண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும் என்தீர்த்தனேயென்னும் *
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. 7

| | |
|---|---|
| என்னுடை கோமளம் கொழுந்து | மிக மெல்லியலாளான என் மகள் ; |
| பால துன்பங்கள் இன்பங்கள் | அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாக துன்பங்களையும் இன்பங்களையும் |
| படைத்தாய் என்னும் | படைத்தவனே! என்கிருள்; |
| பற்று இலார் பற்ற நின்ருனே என்னும் | அசரண்ய சரண்யனே ! என்கிருள் ; |
| கால சக்கரத்தாய் என்னும் | காலசக்கரத்திற்கு நிர்வாஹகனவனே! என்கிருள்; |
| கடல் இடம் கொண்ட கடல்வண்ண என்னும் | திருப்பாற் கடலை இடமாகக் கொண்ட கடல் வண்ணனே! என்கிருள்; |
| கண்ணனே என்னும் | ஸ்ரீ கிருஷ்ண என்கிருள்; |
| சேல் கொள் தண் புனல் சூழ் திரு அரங்கத்தாய் என்னும் | மீன்கள் நிரம்பிய குளிர்ந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலில் வாழ்பவனே! என்கிருள்; |
| என் தீர்த்தனே என்னும் | என்னைப் பவித்திரமாக ஆக்குமவனே! என்கிருள்; |
| கோலம் மா மழை கண் பனி மல்க இருக்கும் | அழகு பொருந்திப் பெருத்துக் குளிர்ந்தகண்கள் நீர்பெருக நிற்கின்ருள். |

* * *—என்னும் என்கிற வினைமுற்று ஒவ்வொரு விளியோடும் அந்வயிக்கவுரியது. "பால துன்பங்களின்பங்கள் படைத்தாய்" என்றதற்குப் பலவகையாகப் பொருள் கூறுவர். எம்பெருமானே ! நீ உலகில் இன்ப துன்பங்களைப் படைக்குமிடத்து அவ்வவ்விடங்களுக்குத் தகுதியாகவன்ரே படைப்பது; என்னல் தாங்கவொண்ணுத துன்பத்தைப் படைத்திருக்கின்ருயே! இது உனக்குத் தகுதியோ ? என்பதான கருத்தை முக்கியமாகக் கொள்க. பால் - இடம் ; பால - பாலவாக ; இடங்களுக்கேற்ப என்றவாறு. ... ... ... ... (7)

கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக் கோநிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கும் அஞ்சனவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கும் எங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடப்புனல்சூழ்திருவரங்கத்தாய் என்செய்கேனென்திருமகட்கே. 8

(இப் பெண்பிள்ளையானவள்)

வானவர்கட்கு கொழுந்து என்னும் — நித்யஸூரிகளுக்குத் தலையானவனே! என்கிறாள்;

குன்று ஏந்தி — கோவர்த்தனமலையைக்குடையாகவெடுத்து நின்று

கோ நிரை காத்தவன் என்னும் — பசுக்களின்கூட்டத்தைக்காத்தருளினவனே என்கிறாள்;

அழும் — கண்ணுங் கண்ணீருமாயிருக்கின்றாள்;

தொழும் — அஞ்சலி பண்ணுநின்றாள்;

ஆவி அனல வெவ்வுயிர்க்கும் — ஆத்மவஸ்து கொளுந்தும்படி வெப்பமாகப் பெரு மூச்சு விடா நின்றாள்;

அஞ்சனம் வண்ணனே என்னும் — அஞ்சனமேனியனே ! என்கிறாள்;

(இக் கூக்குரலைக்கேட்டு எம்பெருமான் வரக்கூடுமென நினைத்து)

மேல் எழுந்து நோக்கி — மேலே தலையெடுத்துப் பார்த்து

இமைப்புஇலள் இருக்கும் — இமையாத கண்ணினளாய் இருக்கின்றாள்;

எங்ஙனே நோக்குகேன் என்னும் — எந்தப்ரகாரத்தாலே உன்னைக் காண்பேன்? என்கிறாள்;

செழு தடம் புனல்சூழ் திரு அரங்கத்தாய் — மிகச்சிறந்த தீர்த்தம் சூழ்ந்த கோயிலிலே கண்வளர்ந்தருளுமவனே!

என் திருமகட்கு — பிராட்டியோடொத்த என் பெண்மணிகள் விஷயத்திலே

என் செய்கேன் — எதைச் செய்வேன்?

என்திருமகள்சேர்மார்பனேயென்னும் என்னுடையாவியேயென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனேயென்னும் *
அன்றுருவேழும்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும் *
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே. 9

என் திரு மகள் சேர் மார்பனே என்னும் — எனக்குப் புருஷகார பூதையான பிராட்டி சேர்ந்த திருமார்பை யுடையவனே! என்கிறாள்;

என்னுடை ஆவியே என்னும் — எனக்கு உயிராயிருப்பவனே! என்கின்றாள்;

நின் திரு எயிற்றால் இடந்து நீ கொண்ட — உனது கோரப் பற்களாலே இடந்து ஏற்றுக்கொண்ட

நிலம் மகள் கேள்வனே என்னும் — பூம்ப்பிராட்டிக்கு நாயகனே என்கிறாள் ;

அன்று — முன் பொருகால்

உரும் ஏழும் — இடிபோன்ற குரலையுடைய ரிஷபங்களேழையும்

தழுவி — மதமொழித்து

நீ கொண்ட — மணந்துகொண்ட

ஆய்மகள அன்பனே என்னும் — நப்பின்னைப் பிராட்டிக்கு ப்ரியனே ! என்கிறாள் ;

தென் திருஅரங்கம் கோயில் கொண்டானே — ஸ்ரீரங்கநாதனே !

இவள் தனக்கு — இவளுக்கு

முடிவு தெளிகிலேன் — ஆர்த்தி முடியும்வழி அறிகின்றிலேன்.

முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும் *
வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. 10

| | |
|---|---|
| இவள் | இப் பெண்பிள்ளையானவள் |
| தனக்கு முடிவு ஒன்று அறிகிலேன் என்னும் | தனது ஆர்த்திக்கு முடிவு ஒன்றும் தெரியவில்லையே! என்கிருள் ! |
| மூ உலகு ஆளியே என்னும் | மூவுலகுக்கும் கடவுளான இந்திரனுக்கு அந்தர்யாமியே என்கிருள். |
| கடி கமழ் கொன்றை சடையனே என்னும் | பரிமளம் மிக்க கொன்றை மாலையைச் சடையிலணிந்த சிவனுக்கு அந்தர்யாமியே! என்கிருள் ; |
| நான்முகக் கடவுளே என்னும் | பிரமதேவனுக்கு அந்தர்யாமியே! என்கிருள் ; |
| வடிவு உடை வானோர் தலைவனே என்னும் | தன்னேடொத்த வடிவுடையரான நித்ய ஸூரிகளுக்கு நாதனே ! என்கிருள் ; |
| வண் திரு அரங்கனே என்னும் | ஸ்ரீ ரங்கநாதனே ! என்கிருள் ! |
| அடி அடையாதாள் போல் இவள் | திருவடிகளைக் கிட்டமாட்டாள் போலும் என்னும்படியிருந்தவிவள் |
| முகில் வண்ணன் அடி | மேகவண்ணனை அவனது திருவடிகளை |
| அணுகி அடைந்தனள் | கிட்டியடையப் பெற்ருள். |

முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன் மொய்புனற்பொருநல் *
துகில்வண்ணத்தூநீர்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன் *
முகில்வண்ணனடிமேல்சொன்னசொல்மாலை ஆயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர் சூழவிருப்பர்பேரின்பவெள்ளத்தே. 11

| | |
|---|---|
| முகில் வண்ணன் அடியை அடைந்து | மேகவண்ணனை எம்பெருமானுடைய திருவடிகளையடைந்து |
| அருள் சூடி உய்ந்தவன் | அவனுடைய திருவருளைத் தலைக்கொண்டு உஜ்ஜீவித்தவரும் |
| மொய் புனல் பொருநல் | உத்தமதீர்த்தமான தாமிரபர்ணியினுடைய |
| துகில்வண்ணம் தூ நீர் சேர்ப்பன் | துகிலின் நிறம்போலே பரிசுத்தமான ஜலத்தின் கரையிலே சேர்ந்திருப்பவரும் |
| வண் பொழில் சூழ் வண் குருகூர் | வளம்மிக்க சோலைகள் சூழ்ந்த திருநகரிக்குத் தலைவருமான |
| சடகோபன் | ஆழ்வார் |
| முகில் வண்ணன் அடிமேல் சொன்ன | மேகவண்ணனை அரங்கநாதனது திருவடிகளை நோக்கியருளிச் செய்த |
| சொல் மாலை ஆயிரத்து இப்பத்தும் வல்லார் | சொல் தொடையான ஆயிரத்தினுள் இப்பதிகத்தை ஓத வல்லவர்கள் |
| முகில் வண்ணம் வானத்து | முகில் வண்ணனுடைய நிழலீட்டாலே முகில்வண்ணமாயிருக்கின்ற பரமபதத்திலே |
| இமையவர் சூழ | நித்யஸூரிகள் புடைசூழ |
| பேர் இன்பம் வெள்ளத்தே | ப்ரஹ்மானந்த ப்ரவாஹத்தில் |
| இருப்பர் | மூழ்கியிருக்கப் பெறுவர்கள்! |

* * *—திருவிருத்தத்தில் இப்பதிகத்திற்கு ஸங்க்ரஹமான பாசுரம் * இறையோ விரக்கினும் * என்பதாம். அதில் "முறையோ அரவணைமேல் பள்ளிகொண்ட முகில்வண்ணனே" என்று ஸ்ரீ ரங்கநாதனை முகில்வண்ணனைகச் சொன்னதனுல் இங்கு * முகில்வண்ணனடிமேல் சொன்ன சொல்மாலை யாயிரத்து * என்றதைக் கொண்டு "மதிளரங்கர் வண்புகழ்மேல் ஆன்றதமிழ் மறைகளாயிரமும்" என்றது பொருத்தமானதென்க. ... ... ... ... (11)

ஸ்ரீ காஞ்சீ. பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்த
திருவரங்கத் தமிழ்மாலையில்—திருவாய்மொழிப் பதிகம் முற்றிற்று

ஆழ்வார் திருவடிகளே சரணம்

———

பதிகப்பாடல்களில் ஸ்ரீகுலசேகராழ்வார் பாடியருளின பதிகங்கள் மூன்று.

## பெருமாள் திருமொழித் தனியன் உரை.

---

**இன்னமுதமூட்டுகேனிங்கேவாபைங்கிளியே! தென்னரங்கம்பாடவல்லசீர்ப்பெருமாள்-பொன்னஞ் சிலைசேர்நுதலியர்வேள்சேரலர்கோனெங்கள் குலசேகரனென்றேகூறு.**

| | | | |
|---|---|---|---|
| பைங் கிளியே | பசுமைதங்கிய கிளியே! | பொன் அம் சிலை சேர் நுதலியர் வேள் | விரும்பத்தக்கதாய் அழகியதான புருவத்தை நெற்றியிலே யுடைய மாதர்கட்கு மநோஹரரான—, |
| இன் அமுதம் ஊட்டுகேன் | (உனக்கு) இனிமையானதோர் அம்ருதம் உண்ணத்தருகிறேன்; | சேரலர் கோன் | சேரவம்சத்தவர்களுக்கெல்லாம் ராஜா—, |
| இங்கே வா | என்னருகே வருவாயாக; | எங்கள் குலசேகரன் | ப்ரபந்நரான நம்முடையகுலத்துக்குச் சிரோபூஷணமான குலசேகராழ்வார் |
| தென் அரங்கம் | தென் திருவரங்கத்தைக் குறித்து | என்றே கூறு | என்று இதையே நீ வாய் பிதற்ற வேணும். |
| பாடவல்ல | (இனிய கவிகளை) அருளிச் செய்யவல்ல | | |
| சீர் பெருமான் | கல்யாண குணசாலியான மஹாநுபாவர்—, | | |

* * *—ஸ்ரீராம பக்தரான குலசேகரப்பெருமாள் அவ்விராமபிரானது திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்துவைத்து அதன் முகத்தினின்று அவற்றைக் கேட்க விரும்புமாபோலே, குலசேகர பக்தரானவர்கள் அக்குலசேகரருடைய திருநாமங்களைக் கிளிக்குக் கற்பித்து அதன் முகமாகக்கேட்க விரும்புகிறபடி. "பொன்னஞ் சிலை சேர்" என்றவிடத்து, சிலை என்ற சொல்—வில் போன்ற புருவத்துக்கு வாசகமாதலால், உவமவாகு பெயர். .... .... .... ... *

**ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்றவர்களுக்கே ***
**வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவன் * மாற்றலரை**
**வீரங்கெடுத்தசெங்கோல்கொல்லிகாவலன் வில்லவர்கோன் ***
**சேரன்குலசேகரன்முடிவேந்தர்சிகாமணியே.**

| | | | |
|---|---|---|---|
| ஆரம் கெட | நவரத்தின மாலையொன்று கெட்டுப்போக (அதை ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்ததாகக் கள்ள மந்திரிகள் கூற) | மாற்றலரை வீரம் கெடுத்த செங்கோல் | சத்துருக்களை பரிபவப்படுத்திய செங்கோன்மையை உடையவரும் |
| அவர்களுக்கே வாரம் கொடு | அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் விஷயத்திலே பக்ஷபாதம் பூண்டு | கொல்லி காவலன் | கொல்லி என்கிற நகருக்கு நிர்வாஹகரும் |
| பரன் அன்பர் கொள்ளார் என்று | "பாகவதர்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் களவு செய்யமாட்டார்கள்" என்று சொல்லி | வில்லவர் கோன் | தநுர்வித்யை பயின்றவர்களில் தலைவரும் |
| குடப்பாம்பில் கை இட்டவன் | பாம்புக்குடத்தில் கையிட்டருளியவர்—. | சேரன் | சேரதேசத்தரசரும் |
| | | முடி வேந்தர் சிகாமணி | முடியுடை மன்னர்களிற் சிறந்தவருமான |
| | | குலசேகரன் | குலசேகராழ்வாராவர். |

* * *—குலசேகராழ்வார்க்குள்ள ஸ்ரீவைஷ்ணவ பக்ஷபாதாதிசயத்தைக் கூறுவது இது. 'ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒருபோதும் கெட்டகாரியஞ்செய்யார்' என்று குடப்பாம்பிற் கையிட்டு சபதம்பண்ணின வரலாறு இவரது சரித்திரத்தில் விசதம். *

தனியன் உரை முற்றிற்று.

---

# பெருமாள் திருமொழி

## முதல் திருமொழி—இருளிரிய

* * *—அழகிய மணவாளனுடைய நித்யாநுபவமும் அவ்விடத்துக் கைங்கர்யபரர்களோடு நித்ய ஸஹவாஸமும் தமக்கு விரைவில் கிடைக்குமாறு எம்பெருமான் அருள்புரிய வேணுமென்று ப்ரார்த்திப்பது இப்பதிகம். .... *

**இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றி இனத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த *
அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்னும் அணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவி *
திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும் *
கருமணியைக்கோமளத்தைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளென்றுகொலோகளிக்குநாளே.**

| | |
|---|---|
| திரு அரங்கம் | ஸ்ரீரங்கமென்கிற |
| பெரு நகருள் | பெரிய நகரத்திலே |
| இருள் இரிய சுடர் மணிகள் இமைக்கும் | இருளானது சிதறி யொழியும் படி ஒளிவிடுகின்றமணிகள் விளங்காநிற்கப்பெற்ற |
| நெற்றி | நெற்றியையும் |
| இனம் துத்தி | சிறந்த புள்ளியையும் |
| அணி | அழகாக உடைய |
| ஆயிரம் பணங்கள் ஆர்ந்த | ஆயிரம் படங்களை உடையனாய் |
| அரவு அரசன் | நாகங்களுக்குத் தலைவனாய் |
| பெரு சோதி | மிக்கதேஜஸ்ஸையுடையனான |
| அனந்தன் என்னும் | திருவனந்தாழ்வானென்கிற |
| அணி விளங்கும் உயர் வெள்ளை அணையை | அழகு மிக்கு உயர்த்தியையுடைய வெண்ணிறமான திருப்படுக்கையிலே |

| | |
|---|---|
| மேவி | பொருந்தி |
| தெள் நீர் பொன்னி | தெளிந்த தீர்த்தத்தையுடைய காவிரியானது |
| திரை கையால் அடி வருட | அலைகளாகிற கைகளாலே திருவடிகளைப்பிடிக்க |
| பள்ளிகொள்ளும் | திருக்கண் வளர்ந்தருளாநின்ற |
| கரு மணியை | நீலமணி போன்றவராய் |
| கோமளத்தை | ஸௌகுமார்யமே வடிவெடுத்தவரான பெரிய பெருமாளை |
| என் கண் இணைகள் | என் கண்களானவை |
| கண்டுகொண்டு | ஸேவிக்கப்பெற்று |
| களிக்கும் நாள் | ஆநந்தமடையும் நாள் |
| என்று கொல் | எந்நாளோ! |

**வாயோரீரைஞ்ஞூறுதுதங்களார்ந்த வளையுடம்பினழல்நாகமுமிழ்ந்தசெந்தீ *
வீயாதமலர்ச்சென்னிவிதானமேபோல் மேன்மேலும்மிகவெங்கும்பரந்ததன்கீழ் *
காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக் கடியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாயோனைமணத்தூணேபற்றிநின்று என்வாயாரவென்றுகொலோவாழ்த்துநாளே.** 2

| | |
|---|---|
| கடி அரங்கத்து | நறுமணம்மிக்க கோயிலிலே |
| ஓர் ஈர் ஐ நூறு வாய் | ஓராயிரம் வாய்களிலே |
| துதங்கள் ஆர்ந்த | ஸ்தோத்ர வாக்கியங்கள் நிறைந்திருக்கப்பெற்றவனாய் |
| வளை உடம்பின் | வெளுத்த உடம்பை யுடையவனாய் |
| அழல் | (எதிரிகள் வந்து கிட்டவொண்ணாதபடி) அழலை உமிழாநிற்பவனான |
| நாகம் | ஆதிசேஷன் |

| | |
|---|---|
| உமிழ்ந்த | (தன் வாயினின்று) வெளிக்கக்கிய |
| செம் தீ | செந்நிறமான அக்நிஜ்வாலையானது |
| சென்னி | தலையின் மேலே |
| வீயாத மலர் விதானம் போல் | அழிவில்லாத புஷ்பங்களாற் சமைத்ததொரு மேற்கட்டி போல |
| எங்கும் மேல் மேலும் பரந்து மிக | மேற்புறமெங்கும் விஸ்தரித்து விளங்க |

அதன் கீழ் — (ஆதிசேஷன் உமிழ்ந்த அக்நி ஜ்வாலையாகிற) அந்தப் புஷ்ப விதாநத்தின் கீழே

அரவு அணையில் - சேஷசயநத்திலே

பள்ளி கொள்ளும் - கண் வளர்ந்தருளா நிற்பவனும்

காயா பூ மலர் பிறங்கல் அன்ன — காயாவின் அழகிய பூக்களாலே தொடுக்கப்பட்ட நீலமாலை போன்றவனுய்

மாலை — பெருமை பொருந்தியவனுய்

மாயோனை — ஆச்சர்யனுன ஸ்ரீரங்கநாதனை (அடியேன்)

மணம் தூண் பற்றி நின்று — திருமணத் தூண்களிரண்டையும் அவலம்பமாகப் பற்றிக் கொண்டு நின்று

என் வாய் ஆர வாழ்த்தும்நாள் என்று கொல் — என் வாய்த்தினவு தீர ஸ்துதி செய்யுங்காலம் என்றைக்கு வாய்க்குமோ?

**எம்மாண்பினயன்நான்குநாவினலுமெடுத்தேத்தி ஈரிரண்டுமுகமுங்கொண்டு ***
**எம்மாடுமெழிற்கண்களெட்டினேடும் தொழுதேத்தியினிதிறைஞ்சநின்றசெம்பொன் ***
**அம்மான்றன்மலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும்***
**அம்மான்றனடியிணைக்கீழலர்களிட்டு அங்கடியவரோடென்றுகொலோவணுகுநாளே.** 3

எ மாண்பின் அயன் — ஸர்வவிதத்தாலு முண்டான மாட்சிமையையுடைய நான்முகன்

நான்கு நாவினுலும் — (தனது) நாலு நாக்கினுலும்

எடுத்து — சொற்களை யெடுத்து

ஏத்தி — துதித்து

ஈர் இரண்டு முகமும் கொண்டு — நான்கு முகங்களாலும்

இனிது ஏத்தி — இனிமையாக (வேதங்களாலே) ஸ்தோத்திரம்பண்ணி

எழில் கண்கள் எட்டினேடும் — அழகிய எட்டுக் கண்களினுலே

எம் மாடும் — எல்லாப்பக்கங்களிலும்

தொழுது இறைஞ்சநின்ற — நன்ருக ஸேவிக்கும்படி அமைந்த

செம்பொன் அம்மான்தன் — செவ்விய பொன் போல் (விரும்பத்தக்க வடிவுடைய) ஸ்வாமியான தன்னுடைய

கமலம் மலர் கொப்பூழ் — தாமரைப் பூவையுடைய திரு நாபியானது

தோன்ற — விளங்கும்படி

அணி அரங்கத்து அரவு அணையில் பள்ளிகொள்ளும்:—;

அம்மான் தன் — பெரிய பெருமாளுடைய

அடி இணை கீழ் — திருவடிகளின் கீழே

அலர்கள் இட்டு — புஷ்பங்களை ஸமர்ப்பித்து

அங்கு அடியவரோடு — அங்குள்ள கைங்கர்யபரர்களோடுகூட

அணுகும் நாள் என்றுகொல் — நெருங்கி வாழ்வது என்றைக்கோ?

**மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலைவண்ணனை யென்கண்ணனைவன்குன்றமேந்தி ***
**ஆவினையன்றுய்யக்கொண்டவாயரேற்றை அமரர்கள்தந்தலைவனையந்தமிழினின்பப்**
**பாவினை * அவ்வடமொழியைப்பற்றற்ருர்கள் பயிலரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் ***
**கோவினைநாவுறவழுத்தியென்றன்கைகள் கொய்ம்மலர்தூயென்றுகொலோகூப்புநாளே.** 4

மாவினை வாய் பிளந்து உகந்த மாலை — குதிரை வடிவங்கொண்டு வந்த கேசியினுடைய வாயைக் கிழித்து மகிழ்ந்த பெருமானுய்

வேலை வண்ணனை — கடல்போன்ற வடிவையுடையவனுய்

என் கண்ணனை — ‘என்னுடையவன்’ என்றுஅபிமானிக்கக்கூடிய (ஸுலபனுன) க்ருஷ்ணனுய்

அன்று — (இந்திரன் கல் மழை பெய்வித்த) அக்காலத்திலே

வல் குன்றம் ஏந்தி — வலிய (கோவர்த்தன) மலையை (க்குடையாக)த் தூக்கி

ஆவினை உய்யக் கொண்ட — பசுக்களைக் காப்பாற்றியருளின

ஆயர் ஏற்றை — இடையர் தலைவனுய்

அமரர்கள் தம் தலைவனை — நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாய்,

அம் தமிழின் இன்பம் பாவினை — அழகிய தமிழ்ப் பாஷையாலாகிய ஆநந்தமயமான அருளிச்செயல் போல் போக்யனுய்

அ வடமொழியை — அழகிய ஸம்ஸ்க்ருத பாஷையாலாகிய ஸ்ரீராமாயணுதிகள் போல் போக்யனுய்

பற்று அற்றார்கள் பயில் அரங்கத்து { ஸம்ஸார பந்தம் அற்றவர்களான விரக்தர்கள் நித்திய வாஸம் செய்கிற கோயிலிலே
அரவு அணையில் பள்ளிகொள்ளும்— ;
கோவினை ஸ்வாமியான ஸ்ரீ ரங்கநாதனை
நா உற நாக்குத் தடிக்கும்படி
வழுத்தி துதித்து
என் தன் கைகள் என்னுடைய கைகளானவை
கொய் மலர் தூய் { (காலத்தில்) பறிக்கப்பட்ட புஷ்பங்களைப் பணிமாறி
கூப்பும் நாள் என்று கொல் { அஞ்ஜலி பண்ணும் நாள் எதுவோ ?

**இணையில்லாவின்னிசையாழ்கெழுமி இன்பத்தும்புருவும்நாரதனுமிறைஞ்சியேத்த ***
**துணையில்லாத்தொன்மறைநூல்தோத்திரத்தால் தொன்மலர்க்கணயன்வணங்கியோவாதேத்த ***
**மணிமாடமாளிகைகள்மல்குசெல்வ மதிளரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் ***
**மணிவண்ணனம்மானைக்கண்டுகொண்டு என்மலர்ச்சென்னியென்றுகொலோவணங்குநாளே.** 5

இன்பம் { (வீணாகானத்தாலே) இன்பந் தருகின்ற
தும்புருவும் தும்புரு மஹர்ஷியும்
நாரதனும் நாரத முனிவனும்
இணை இல்லா இன் இசை { ஒப்பற்றதும் போக்யமுமான இசையை
யாழ் வீணையிலே
கெழுமி நிறைந்து
(வீணாகானத்தைப் பண்ணிக்கொண்டு)
இறைஞ்சி ஏத்த { (திருவடிகளிலே விழுந்து) வணங்கித் துதிக்கவும்
தொல் மலர்க் கண் அயன் { நித்யமான நாபிகமலத்தி லுதித்த நான்முகனானவன்
வணங்கி நமஸ்கரித்து
துணை இல்லா ஒப்பு இல்லாததும்
தொல் அநாதியுமான
மறை நூல் தோத்திரத்தால் { வேதசாஸ்த்ரங்களாகிற ஸ்தோத்ரங்களால்
ஓவாது ஏத்த இடைவிடாமல் துதிக்கவும்
மணி மாடம் மாளிகைகள் { மணிமயமான மாடமாளிகைகளையும்
மல்கு செல்வம் பூர்ணமான ஸம்பத்தையும்
மதிள் ஸப்தப்ராகாரங்களையுமுடைய
அரங்கத்து கோயிலிலே
அரவு அணையில் பள்ளிகொள்ளும்—;
மணி வண்ணன் அம்மானை { நீலமணிபோன்ற திருநிறத்தையுடையனான எம்பெருமானை
கண்டுகொண்டு ஸேவித்து
என் மலர் சென்னி { என்னுடைய பூமாலையணிந்த தலையானது
வணங்கும் நாள் என்று கொல் { (அவன் திருவடிகளில் நமஸ்கரிப்பது என்றைக்கோ!.

**அளிமலர்மேலயனரனிந்திரனோடு ஏனையமரர்கள் தங்குழுவுமரம்பையரும்மற்றும் ***
**தெளிமதிசேர்முனிவர்கள்தம்குழுவுமுந்தித் திசைதிசையில்மலர்தூவிச்சென்றுசேரும் ***
**களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக் கண்வளரும்கடல்வண்ணர்கமலக்கண்ணும் ***
**ஒளிமதிசேர்திருமுகமும்கண்டுகொண்டு என்னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே.** 6

அளி மலர் மேல் அயன் { (மதுபானத்துக்காக வண்டுகள் படிந்திருக்கிற தாமரைப் பூவில் தோன்றிய பிரமனும்
அரன் சிவனும்
இந்திரனோடு ஏனை அமரர்கள் தம் குழுவும் { இந்திரனோடுகூட மற்றைத் தேவர்களின் திரளும்
அரம்பையரும் ரம்பை முதலிய தேவமாதரும்
மற்றும் மற்றுமுள்ள
தெளி மதி சேர் முனிவர்கள் தம் குழுவும் { தெளிந்த ஞானத்தையுடைய (ஸநகாதி) மஹர்ஷிகளின்ஸமூஹமும்
உந்தி { ஒருவருக்கொருவர் நெருக்கித் தள்ளி
திசை திசையில் பார்த்த பார்த்தவிடமெங்கும்
மலர் தூவி { புஷ்பங்களை இறைத்துக் கொண்டு
சென்று சேரும் வந்து சேர்தற்கு இடமான
களி மலர் சேர் பொழில் அரங்கத்து { தேன்மிக்க மலர்களையுடைய சோலைகளை யுடைத்தான கோயிலிலே
உரகம் ஏறி { திருவனந்தாழ்வான்மீது பள்ளிகொண்டு
கண் வளரும் திருக்கண் வளர்ந்தருளாநின்ற
கடல் வண்ணர் { கடல்போன்ற வடிவையுடையரான பெரிய பெருமாளுடைய
கமலம் கண்ணும் { செந்தாமரைபோன்ற திருக்கண்களையும்

தூராதமனக்காதல்தொண்டர்தங்கள்குழாங்குழுமித் திருப்புகழ்கள்பலவும்பாடி *
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர்மழைசோர நினைந்துருகியேத்தி * நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டும் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப் பூதலத்திலென்றுகொலோபுரளுநாளே. 9

| | |
|---|---|
| தூராத காதல் மனம் | ஒருநாளும் த்ருப்தி பெருத ஆசைகொண்ட மனத்தை யுடையரான |
| தொண்டர் தங்கள் குழாம் | ஸ்ரீ வைஷ்ணவர்களின்கோஷ்டியிலே |
| குழுமி | கூடி |
| திரு புகழ்கள் பலவும் பாடி | (எம்பெருமானது) கீர்த்திகளெல்லாவற்றையும்(வாயாரப்) பாடி |
| ஆராத மனம் களிப்போடு | (அவ்வளவிலும்) த்ருப்தி பெருத மநஸ்ஸிலுள்ள ஆநந்தத்தோடே |
| அழுத கண் நீர் | அழுத கண்களிலுண்டான நீர்த்துளிகள் |
| மழை சோர | மழைபோல் பெருகிவர |
| நினைந்து உருகி ஏத்தி | (எம்பெருமானை) நினைத்து (அத்தாலே) மனமுருகி ஸ்தோத்திரம்பண்ணி.— |
| நாளும் | எப்போதும் |

| | |
|---|---|
| சீர் ஆர்ந்த முழவு ஓசை | நல்ல வாத்யங்களின் கோஷமானது |
| பரவைகாட்டும் | கடலோசைபோல் முழங்கப்பெற்ற |
| திரு அரங்கத்து | ஸ்ரீ ரங்கத்திலே |
| அரவு அணையில் பள்ளிகொள்ளும்—; | |
| போர் ஆழி | (பகைவரோடு) யுத்தஞ் செய்வதையே தொழிலாகவுடைய திருவாழியாழ்வானை யுடையரான |
| அம்மானை | எம்பெருமானை |
| கண்டு | ஸேவிக்கப்பெற்று |
| துள்ளி | (ஆநந்தத்துக்குப் போக்குவீடாகத்) தலைகால் தெரியாமல் கூத்தாடி |
| பூதலத்தில் | பூமியிலே |
| புரளும் நாள் என்றுகொல் | (உடம்பு தெரியாமல்) புரள்வது என்றைக்கோ? |

வன்பெருவானகமுய்யவமரருய்யமண்ணுய்ய மண்ணுலகில்மனிசருய்ய *
துன்பமிகுதுயரகலவயர்வொன்றில்லாச்சுகம்வளர அகமகிழுந்தொண்டர்வாழ *
அன்பொடுதென்திசைநோக்கிப்பள்ளிகொள்ளும் அணியரங்கன்திருமுற்றத்தடியார்தங்கள் *
இன்பமிகுபெருங்குழுவுகண்டு யானுமிசைந்துடனேயென்றுகொலோவிருக்குநாளே. 10

| | |
|---|---|
| வல் | (நைமித்திக ப்ரளயத்தில்) அழியாதிருக்கக் கடவதும் |
| பெரு | பெருமைதங்கியதுமான |
| வானகம் | ஸ்வர்க்கம் முதலிய மேலுலகங்கள் |
| உய்ய | உஜ்ஜீவிக்கவும் |
| அமரர் | தேவர்கள் |
| உய்ய | உஜ்ஜீவிக்கவும் |
| மண் உய்ய | பூலோகம் உஜ்ஜீவிக்கவும் |
| மண்ணுலகில் மனிசர் உய்ய | பூலோகத்திலுள்ள மனிதர்களெல்லாம் உஜ்ஜீவிக்கவும் |
| மிகு துன்பம் துயர் அகல | மிக்க துக்கத்தை விளைப்பதான பாவங்கள் நீங்கவும் |
| அயர்வு ஒன்று இல்லா சுகம் வளர | துக்கம் கலசாத சுகம் வளரவும் |
| அகம் மகிழும் | (எப்போதும்) மனதில் ஆனந்தத்தை யுடையரான |
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்கள் |

| | |
|---|---|
| வாழ | உஜ்ஜீவிக்கவும் |
| அன்பொடு | திருவுள்ளத்தில் உகப்போடு |
| தென் திசை நோக்கி | தெற்குத் திக்குக்கு அபிமுகமாக |
| பள்ளிகொள்ளும்-பள்ளிகொண்டிரா நின்ற | |
| அணி அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| திருமுற்றத்து | ஸந்நிதியுள் திருமுற்றத்திலே |
| அடியார் தங்கள் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| இன்பம் மிகு பெரு குழுவு கண்டு | ஆநந்தம் நிரம்பிய பெரிய கோஷ்டியை ஸேவித்து |
| யானும் | அடியேனும் |
| இசைந்து | (அவர்களுள் ஒருவனாக) மனம் பொருந்தி |
| உடனே | அவர்களோடுகூட |
| இருக்கும் நாள் என்று கொல் | வாழ்ந்திருக்குங்காலம் எப்போது (வாய்க்குமோ?). |

**திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத் திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் ***
**கடல்விளங்குகருமேனியம்மான்தன்னைக் கண்ணாரக்கண்டுகக்குங்காதல்தன்னால் ***
**குடைவிளங்குவிறல்தானைக்கொற்றவொள்வாள் கூடலர்கோன்கொடைக்குலசேகரன்சொற்செய்த**
**நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார் நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே.** 11

| | |
|---|---|
| திடர் விளங்கு கரை | மணற்குன்றுகள் விளங்கா நின்ற கரையையுடைத்தான |
| பொன்னி நடுவு பாடு | காவிரியின் நடுவிடத்து |
| திரு அரங்கத்து அரவு அணையில் பள்ளிகொள்ளும்— | |
| கடல் விளங்கு | கடல்போல் விளங்குகின்ற |
| கரு மேனி | கரிய திருமேனியையுடைய |
| அம்மான் தன்னை-பெரிய பெருமாளை | |
| கண் ஆர கண்டு உகக்கும் காதல் தன்னால் | 'கண்கள் த்ருப்தியடையும்படி ஸேவித்து ஆநந்திக்கவேணும்' என்று உண்டான ஆசையினால் |
| குடை விளங்கு | (அரசாட்சிக்கு ஏற்ப) வெண்கொற்றக் குடையுடன் விளங்கா நிற்பவரும் |
| விறல் தானை | பராக்கிரமம்மிக்க ஸேனைகளை யுடையவரும் |
| கொற்றம் ஒள் வாள் | வெற்றியும் ஒளியும் பொருந்திய வாளை யுடையவரும் |
| கூடலர் கோன் | மதுரையிலுள்ளவர்களுக்குத் தலைவரும் |
| கொடை | ஔதார்யத்தையே இயற்கையாகவுடையவருமான |
| குலசேகரன் | குலசேகரப்பெருமாள் |
| சொற்செய்த | அருளிச்செய்த |
| நடை விளங்கு | தமிழ் நடையானது நன்கு விளங்கா நிற்கிற |
| தமிழ் மாலை பத்தும் | தமிழ்ப்பிரபந்தரூபமான இப் பத்துப் பாசுரங்களையும் |
| வல்லார் | ஓதவல்லவர்கள் |
| நலம் திகழ் நாரணன் | கல்யாண குணசாலியான ஸ்ரீமந்நாராயணனுடைய |
| அடி கீழ் நண்ணுவார் | திருவடிகளில் சேரப்பெறுவர். |

அடி வரவு :
இருள் வாயெம்மாண் மாவினை யிணை அளி மறங் கோல் தூரா வன் திடர்தேட்டரு.

---

ஸ்ரீ:

## பெருமாள் திருமொழியில்—இரண்டாந் திருமொழி—தேட்டருந்திறல்.

---

பகவத்விஷயத்தோடு நின்று தரிக்கமாட்டாமல் பாகவத விஷயத்திலே தாம் பித்தேறிக் கிடக்கின்றமையை வெளியிடுகிறார் இத்திருமொழியில். பகவத் விஷயத்திலே மெய்யன்பு பூண்டவர்கள் பாகவத விஷயத்திலே ப்ரவணராகாமலிருக்க முடியாது, பாகவத ப்ராவண்யம் அதிசயித்தாலன்றி பகவத்விஷய ப்ராவண்யம் ஸத்தை பெறாது. இவ்வாழ்வார்க்கு பகவத்விஷய ப்ராவண்யத்திற் காட்டில் பாகவத விஷய ப்ராவண்யமே பள்ளமடையா யிருக்கும்;* ஆரங் கெடப் பரனன்பர் கொள்ளாரென்றவர்களுக்கே வாரங்கொடு குடப்பாம்பிற் கையிட்டவரிறே. ... *

****தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனை * திருமாதுவாழ்**
**வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய் ***
**ஆட்டமேவியலந்நழைத்து அயர்வெய்தும்மெய்யடியார்கள்தம் ***
**ஈட்டங்கண்டிடக்கூடுமேல் அதுகாணும்கண்பயனாவதே.** 1

| | |
|---|---|
| தேட்டரும் | (தன்முயற்சியால்)தேடிப்பெறுதற்கு அருமையானவனும் |
| திறல் | (தன்னை முற்ற அநுபவிப்பதற்கு உறுப்பான)வலிவைக் கொடுப்பவனும் |
| தேனினை | தேன்போல் பரமபோக்யனும் |
| தென் அரங்கனை | தென் திருவரங்கத்தில் வாழ்பவனும் |
| திரு மாது வாழ் வாட்டம்இல் வனமாலை மார்பனை | பெரிய பிராட்டியார் நித்யவாஸம் செய்வதற்கிடமாய் வாடாமல் செவ்வி பெற்றிருக்கிற வன மாலையை அணிந்துள்ள திருமார்வையுடையவனுமான ஸ்ரீரங்கநாதனை |
| வாழ்த்தி | மங்களாசாஸநம் பண்ணி |
| மால் கொள் சிந்தையர் ஆய் | (அவன் திறத்தில்) மோஹங்கொண்டமனதையுடையராய் |
| ஆட்டம் மேவி | (அந்த மோஹத்தாலே நின்றவிடத்தில் நிற்கமாட்டாமல்) ஆடுவதிலே ஒருப்பட்டு |
| அலந்து அழைத்து | (பகவந்நாமங்களை) வாய்விட்டுக் கதறிக் கூப்பிட்டு |
| அயர்வு எய்தும் | இளைப்படைகின்ற |
| மெய் அடியார்கள் தம் | உண்மையான அன்புடைய பாகவதர்களின் |
| ஈட்டம் | கோஷ்டியை |
| கண்டிட கூடும் ஏல் | ஸேவிக்கப் பெறுவோமாகில் |
| அது காணும் கண் பயன் ஆவது | கண் படைத்ததற்குப் பயன் அதுவேயன்றோ!. |

தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததும் சுடர்வாளியால் *
நீடுமாமரம்செற்றதும்நிரைமேய்த்ததும் இவையேநினைந்து *
ஆடிப்பாடியரங்கவோவென்றழைக்கும் தொண்டரடிப்பொடி
யாடநாம்பெறில் * கங்கைநீர்குடைந்தாடும்வேட்கை என்னாவதே. 2

| | |
|---|---|
| தோடு உலாம் மலர் மங்கை | இதழ்கள் மிக்கிருந்துள்ள தாமரைப்பூவிற் பிறந்த பிராட்டியினது |
| தோள் இணை தோய்ந்ததும் | திருத்தோள்களோடு அணையவ முக்கிக் கட்டிக்கொண்டதும் |
| சுடர் வாளியால் | புகரையுடைய அம்பினால் |
| நீடு மா மரம் செற்றதும் | நீண்ட ஸப்தஸால வ்ருக்ஷங்களைத் துளைசெய்து தள்ளியதும் |
| நிரை மேய்த்ததும் | பசுக்கூட்டங்களை மேய்த்ததும் (ஆகிய) |
| இவையே நினைந்து | இப்படிப்பட்ட பகவச்சரிதங்களையே அநுஸந்தித்து |
| ஆடி | சரீர விகாரம்பெற்று |
| பாடி | (காதலுக்குப் போக்குவீடாக வாய்விட்டுப்) பாடி |
| ஓ! அரங்க!! என்று | 'ஓ அரங்கனே!' என்று அவன் திருநாமங்களைச் சொல்லி |
| அழைக்கும் | கூப்பிடுகிற |
| தொண்டர் | கைங்கரியத்தையே நிரூபகமாகவுடைய பாகவதர்களின் |
| அடி பொடி | திருவடித்தூள்களிலே |
| நாம் ஆட பெறில் | நாம் அவகாஹிக்கப்பெற்றால் (பிறகு) |
| கங்கை நீர் | கங்கா ஜலத்திலே |
| குடைந்து ஆடும் வேட்கை | அவகாஹித்து நீராடவேணுமென்கிற ஆசையானது |
| என் ஆவது | ஏதுக்கு? |

ஏறடர்த்ததுமேனமாய்நிலம்கீண்டதும் முன்னிராமனாய் *
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி * வண்பொன்னிப்பே
ராறுபோல்வருங்கண்ணநீர்கொண்டு அரங்கன்கோயில்திருமுற்றம் *
சேறுசெய்தொண்டர்சேவடிச் செழுஞ்சேறென்சென்னிக்கணிவனே. 3

| | |
|---|---|
| ஏறு அடர்த்ததும் | (நப்பின்னைக்காக) ஏழு ரிஷபங்களை வலியடக்கியதும் |
| ஏனம் ஆய் நிலம் கீண்டதும் | வராஹரூபியாய் பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்ததும் |
| முன் இராமன் ஆய் | முன்பு சக்ரவர்த்தி திருமகனாய்ப் பிறந்து |
| மாறு அடர்த்ததும் | சத்ரு ராக்ஷஸர்களைக் கிழங்கெடுத்ததும் |
| மண் அளந்ததும் | (த்ரிவிக்ரமனாய்) உலகளந்ததும் (ஆகிய இந்தசரிதங்களை) |
| சொல்லி பாடி | வாயாற்சொல்லி வாய்விட்டுப் பாடி |

| | |
|---|---|
| வண் பேர் பொன்னி ஆறு போல் வரும் கண்ணநீர் கொண்டு | ஔதார்யத்தையும் பெருமையையு முடைய காவிரியாறு போல் பெருகுகின்ற ஆநந்தபாஷ்பங்களாலே |
| அரங்கன் கோயில் திருமுற்றம் | நம்பெருமான் ஸந்நிதி உள் திருமுற்றத்தை |
| சேறு செய் தொண்டர் | சேருக்குகிற பாகவதர்களின் |
| சே அடி செழு சேறு | திருவடிகளால் துகையுண்ட அழகிய சேற்றை |
| என் சென்னிக்கு | என்னுடைய நெற்றிக்கு |
| அணிவன் | திலகமாகக் கொள்வேன். |

தோய்த்ததண்தயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் உடன்றுய்ச்சிகண்டு *
ஆர்த்ததோளுடையெம்பிரான் என்னரங்கனுக்கடியார்களாய் *
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழு
தேத்தி* இன்புறும்தொண்டர்சேவடி யேத்திவாழ்த்துமென்னெஞ்சமே. 4

| | |
|---|---|
| தோய்த்த தண் தயிர் | தோய்த்துக் குளிர்ந்த தயிரையும் |
| வெண்ணெய் | வெண்ணெயையும் |
| பால் | பாலையும் |
| உடன் உண்டலும் | ஒரே காலத்திலே அமுது செய்தவளவில் |
| ஆய்ச்சி | யசோதைப்பிராட்டியானவள் |
| கண்டு | (அந்தக் களவுதன்னைப்) பார்த்து |
| உடன்று | கோபித்து |
| ஆர்த்த | (பிறகு அவளாலே) பிடித்துக் கட்டப்பட்ட |
| தோள் உடை எம்பிரான் | தோள்களையுடைய எமக்குத் தலைவனான |
| என் அரங்கனுக்கு | என் ரங்கநாதனுக்கு |
| அடியார்கள் ஆய் | ஆட்பட்டவர்களாய் |
| நா தழும்பு எழ | நாக்குத் தடிக்கும்படி |
| நாரணா என்று அழைத்து | நாராயணா! என்று கூப்பிட்டு |
| மெய் தழும்ப தொழுது | சரீரம் காய்ப்பேறும்படி ஸேவித்து |
| ஏத்தி | தோத்திரம்பண்ணி |
| இன்புறும் | ஆநந்தமடைகின்ற |
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| சே அடி | திருவடிகளை |
| என் நெஞ்சம் | என் மனமானது |
| ஏத்தி வாழ்த்தும் | துதித்து (அவர்களுக்கே) பல்லாண்டு பாடுகின்றது. |

பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப் போரரவீர்த்தகோன் *
செய்சிலைச்சுடர்சூழொளித் திண்ணமாமதிள்தென்னரங்கனாம் *
மெய்சிலைக்கருமேகமொன்று தம்நெஞ்சில்நின்றுதிகழப்போய் *
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந்து என்மனம்மெய்சிலிர்க்குமே. 5

| | |
|---|---|
| பொய் | க்ருத்ரிமமாய் |
| சிலை குரல் | கோபத்தை வெளியிடுகின்ற கோஷத்தை யுடைத்தான |
| ஏறு | ஏழு ரிஷபங்களின் |
| எருத்தம் இறுத்து | முசுப்புகளை முறித்தவனாய் |
| போர் அரவு ஈர்த்த கோன் | போர்செய்யவந்த காளிய நாகத்தை நிரஸித்தஸ்வாமியாய் |
| சிலை செய் | கல்லினால் செய்யப்பட்ட |
| சுடர் ஒளி | மிக்கதேஜஸ்ஸையுடைத்தாய் |
| திண்ணம் | திடமாயிருக்குந் தன்மையையு முடைத்தாய் |
| மா | பெரிதான |
| மதிள் சூழ் | மதிள்களாலே சூழப்பட்ட |
| தென் அரங்கன் ஆம் | தென்னரங்கத்தில்எழுந்தருளியிருப்பவனான ரங்கநாதனாகிற |
| மெய் சிலை கரு மேகம் ஒன்று | சரீரத்தில் வில்லோடுகூடிய ஒரு காளமேகமானது |
| தம் நெஞ்சுள் நின்று திகழப்போய் | தங்கள் மனதில் நிலைத்து விளங்கப்பெற்று |
| மெய் சிலிர்ப்பவர் தம்மையே | மயிர்க்கூச்செறியும் சரீரமுடைய ஸ்ரீவைஷ்ணவர்களையே |
| என் மனம் நினைந்து | என் நெஞ்சானது அநுஸந்தித்து |
| மெய்சிலிர்க்கும் | மயிர்க்கூச்செறியப் பெற்றது. |

ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான் *
பாதமாமலர்சூடும்பத்தியிலாத பாவிகளுய்ந்திட *
தீதில்நன்னெறிகாட்டி யெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே *
காதல்செய்தொண்டர்க்கெப்பிறப்பிலும் காதல்செய்யுமென்னெஞ்சமே. 6

| | | | |
|---|---|---|---|
| ஆதி | ஜகத்காரணபூதனாய் | தீது இல் | குற்றமற்ற |
| அந்தம் | ப்ரளயகாலத்திலும் வாழ்பவனாய் | நல் நெறி | நல்வழிகளை |
| அனந்தம் | ஸர்வவியாபியாய் | காட்டி | (தமது அநுஷ்டாநமுகத்தாலே) வெளிப்படுத்திக் கொண்டு |
| அற்புதம் ஆன | ஆச்சரிய பூதனாய் | எம்மான் | நமக்குத் தலைவனான |
| வானவர் தம் பிரான் | அமரர்க்கதிபதியான ரங்கநாதனுடைய | அரங்கனுக்கே | ஸ்ரீரங்கநாதனுக்கே |
| மா மலர் பாதம் | சிறந்த மலர்போன்ற திருவடிகளை | காதல் செய் | பக்திபூண்டிருக்கின்ற |
| சூடும் பத்தி இலாத | சிரஸா வஹிப்பதற் குறுப்பான அன்பு இல்லாத | தொண்டர்க்கு | பாகவதர்கள் விஷயத்தில் |
| பாவிகள் உய்ந்திட | பாபிகளும் உஜ்ஜீவிக்கும்படி | என் நெஞ்சம் | எனது மனமானது |
| எங்கும் திரிந்து | ஸர்வதேசங்களிலும் ஸஞ்சாரஞ் செய்து | எப் பிறப்பிலும் | எந்த ஜன்மத்திலும் |
| | | காதல் செய்யும் | அன்புபூண்டிருக்கும். |

காரினம்புரைமேனிநற்கதிர் முத்தவெண்ணகைச்செய்யவாய் *
ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினை *
சேரும்நெஞ்சினராகிச் சேர்ந்துகசிந்திழிந்தகண்ணீர்களால் *
வாரநிற்பவர்தாளிணைக்கு ஒருவாரமாகுமென்னெஞ்சமே. 7

| | | | |
|---|---|---|---|
| கார் இனம் புரை | மேகங்களின் திரளை ஒத்த | சேரும் நெஞ்சினர் ஆகி | கிட்டி அநுபவிக்கவேணுமென்கிற சிந்தையையுடையராய் |
| மேனி | திருமேனியையும் | சேர்ந்து | (அங்ஙனமே) சேர்ந்து |
| நல் கதிர் | அழகிய லாவண்யத்தையும் | கசிந்து இழிந்த | (பக்தி பாரவச்யத்தாலே) சுரந்து பெருகின |
| முத்தம் வெண் நகை செய்ய வாய் | முத்துக்கள் போல் வெளுத்த புன்சிரிப்பையுடைய சிவந்த திருப்பவளத்தையும் | கண் நீர்கள் | ஆநந்த பாஷ்பங்கள் |
| ஆரம் மார்வன் | முக்தாஹாரங்களை யணிந்த மார்வையு முடையனை | வார நிற்பவர் | வெள்ளமிட்டொழுகும்படி நிற்குமவர்களுடைய |
| அரங்கன் என்னும் | ஸ்ரீரங்கநாதனாகிற | தாள் இணைக்கு | இரண்டுதிருவடிகள் விஷயத்தில் |
| அரும் பெரும் சுடர் ஒன்றினை | அருமை பெருமையுள்ள விலக்ஷணமானதொரு தேஜஸ்ஸை | என் நெஞ்சம் | என் மனமானது |
| | | ஒரு வாரம் ஆகும் | ஒப்பற்ற அன்பையுடையதாகும். |

மாலையுற்றகடல்கிடந்தவன் வண்டுகிண்டுநறுந்துழாய் *
மாலையுற்ற வரைப்பெருந்திருமார்வனை மலர்க்கண்ணனை *
மாலையுற்றெழுந்தாடிப்பாடித் திரிந்தரங்கனெம்மானுக்கே *
மாலையுற்றிடும்தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்றதென்னெஞ்சமே. 8

| | | | |
|---|---|---|---|
| மாலை உற்ற கடல் | (தன் திருமேனி ஸ்பர்சத்தாலே) அலையெறிகிற திருப்பாற்கடலில் | வண்டு கிண்டு நறு துழாய் மாலை உற்ற | (தேனுக்காக) வண்டுகள் குடையாநின்றுள்ள திருத்துழாய் மாலையை அணிந்த |
| கிடந்தவன் | பள்ளிகொள்பவனும் | வரை பெரு திருமார்பனை | மலைபோற் பெருமை தங்கிய திருமார்வையுடையவனும் |

| | |
|---|---|
| மலர் கண்ணை | செந்தாமரை மலர்போன்ற திருக்கண்களையுடையவனுமான ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில் |
| மாலை உற்று | வ்யாமோஹத்தை அடைந்து |
| எழுந்து ஆடி | (இருந்தவிடத்திலிராமல்) எழுந்து கூத்தாடி |
| பாடி | (வாயாரப்) பாடி |
| திரிந்து | (திவ்ய தேசங்கள்தோறும் ஸஞ்சரித்து |
| அரங்கன் எம் மானுக்கே | எமக்கு ஸ்வாமியான ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலேயே |
| மாலை உற்றிடும் | பித்தேறித் திரிகின்ற |
| தொண்டர் | ஸ்ரீவைஷ்ணவர்களுடைய |
| வாழ்வுக்கு | ஸ்ரீவைஷ்ணவ லக்ஷ்மிக்கு |
| என் நெஞ்சம் மாலை உற்றது | என் மனம் மயங்கிக் கிடக்கின்றது. |

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று *
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்து ஆடிப்பாடியிறைஞ்சி * என்
அத்தனச்சனரங்கனுக்கடியார்களாகி அவனுக்கே
பித்தராமவர் * பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. 9

| | |
|---|---|
| கண் பனி | ஆநந்த பாஷ்பமானது |
| மொய்த்து சோர | இடைவிடாமல் சொரியவும் |
| மெய்கள் சிலிர்ப்ப | உடல் மயிர்க்கூச் செறியவும் |
| ஏங்கி இளைத்து நின்று | நெஞ்சு தளர்ந்து களைத்துப் போய் |
| எய்த்து | நிலை தளர்ந்து |
| கும்பிடு நட்டம் இட்டு | மஹா கோலாஹலத்தோடு கூடிய நர்த்தனத்தைப்பண்ணி |
| எழுந்து ஆடி பாடி இறைஞ்சி | நின்றவிடத்து நில்லாமல் (பலவித ஆட்டங்களாடிப்) பாட்டுகள் பாடி வணங்கி, |
| என் அத்தன் | எனக்குத் தந்தையாய் |
| அச்சன் | ஸ்வாமியான |
| அரங்கனுக்கு | ஸ்ரீரங்கநாதனுக்கு |
| அடியார்கள் ஆகி | அடியவர்களாய் |
| அவனுக்கே | அந்த ரங்கநாதன் விஷயத்திலேயே |
| பித்தர் ஆமவர் | பித்தேறித் திரிகிறவர்கள் |
| பித்தர் அல்லர்கள் | பைத்தியக்காரர்களல்லர்; |
| மற்றையார் முற்றும் | (பக்திகார்யமான இந்த வ்யாமோஹமில்லாத) மற்றபேர்களெல்லாரும் |
| பித்தரே | பைத்தியக்காரர்கள் தான். |

**அல்லிமாமலர்மங்கைநாதன் அரங்கன்மெய்யடியார்கள்தம் *
எல்லையிலடிமைத்திறத்தினில் என்றுமேவுமனத்தனும் *
கொல்லிகாவலன்கூடல்நாயகன் கோழிக்கோன்குலசேகரன் *
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. 10

| | |
|---|---|
| அல்லி மா மலர் மங்கை நாதன் | அகவிதழ்களையுடைய சிறந்த (தாமரை) மலரில் பிறந்த பிராட்டிக்குக் கணவனான |
| அரங்கன் | ஸ்ரீரங்கநாதனுடைய |
| மெய் அடியார்கள் தம் | உண்மையான பக்தர்களுடைய |
| எல்லையில் அடிமை திறத்தினில் | எல்லையிலே உள்ள சேஷவ்ருத்தியிலே |
| என்றும் மேவு மனத்தன் ஆம் | எப்போதும் பொருந்திய திருவுள்ளத்தை யுடையவரும் |
| கொல்லி காவலன் | கொல்லி நகர்க்கு அரசரும் |
| கூடல் நாயகன் | மதுரைக்கு அரசரும் |
| கோழி கோன் | உறையூருக்கு அரசருமான |
| குலசேகரன் | குலசேகராழ்வாருடைய |
| சொல்லின் | ஸ்ரீஸூக்திகளிலே அமைந்த |
| இன்தமிழ்மாலை வல்லவர் | இனிய தமிழ்ப்பாசுரங்களை ஓதவல்லவர்கள் |
| தொண்டர் தொண்டர்கள் ஆவர் | தாஸாநுதாஸராகப் பெறுவர். |

அடி வரவு :
தேட்டு தோடேறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

திருவரங்கத்தமிழ்மாலையில்—பெருமாள் திருமொழியில்
இரண்டாம் பதிகம் முற்றிற்று.

## பெருமாள் திருமொழியில்—மூன்றும் பதிகம்—மெய்யில்வாழ்க்கை

(அவதாரிகை.) ஸாம்ஸாரிகர் படியில் மிக்க வெறுப்பு உண்டாகி, அவர்களைக் காண்பதும் அவர்களோடு ஸஹவாஸஞ் செய்வதும் அஸஹ்யமான நிலைமை தமக்குப் பிறந்த படியை அருளிச் செய்கிருர் குலசேகராழ்வார் இப்பதிகத்தில். *

**மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும் * இவ்வையந்தன்னெடும் கூடுவதில்லையான் *
ஐயனே ! அரங்காவென்றழைக்கின்றேன் * மையல்கொண்டொழிந்தேன் என்றன்மாலுக்கே. 1**

மெய்யில் வாழ்க்கையை — ப்ரக்ருதி ப்ராக்ருதங்களோடு பொருந்தி வாழ்வதையே:
மெய் என கொள்ளும் — பாரமார்த்திகமாகக் கருதுகின்ற
இ வையம் தன்னெடும் — இவ்வுலகத்தாரோடு
யான் கூடுவது இல்லை — (இனி) நான் சேர்வதில்லை ;
ஐயனே — 'ஸ்வாமியே'

அரங்கா — 'ஸ்ரீரங்கநாதனே !'
என்று அழைக்கின்றேன் — என்று (பகவந்நாமங்களைச் சொல்லி) அழையா நின்றேன்;
என் தன் மாலுக்கே — என்னிடத்தில் வாத்ஸல்யமுடைய எம்பெருமான் பக்கலிலேயே
மையல் கொண்டொழிந்தேன் — வ்யாமோஹமடைந்திட்டேன்.

**நூலினேரிடையார் திறத்தேநிற்கும் * ஞாலந்தன்னெடும் கூடுவதில்லையான் *
ஆலியாவழையா அரங்காவென்று * மாலெழுந்தொழிந்தேன் என்றன்மாலுக்கே. 2**

நூலின் நேர் இடையார் திறத்து நிற்கும் — நூல் போன்று (ஸூக்ஷ்மமான) இடையையுடைய பெண்டிர் விஷயத்திலேயே பொருந்தி யிருக்கிற
ஞாலம் தன்னெடும் — (இந்த) ப்ராக்ருத மனிதரோடு யான் கூடுவது இல்லை—;
ஆலியா — (காதலுக்குப்போக்குவீடாகக்) கூத்தாடி

அரங்கா என்று — 'ஸ்ரீரங்கநாதனே!' என்று
அழையா — கூப்பிட்டு
என் தன் மாலுக்கே — ன்மேல் வ்யாமோஹமுடையனை எம்பெருமான் திறத்திலேயே
மால் எழுந்தொழிந்தேன்-மோஹமுற்றேன்.

**மாரனார் வரிவெஞ்சிலைக்காட்செய்யும் * பாரினாரொடும் கூடுவதில்லையான் *
ஆரமார்வன் அரங்கனனந்தன் * நல் நாரணன் நரகாந்தகன்பித்தனே. 3**

மாரனார் — மன்மதனுடைய
வரி வெம் சிலைக்கு — அழகிய கொடிய வில்லுக்கு
ஆள் செய்யும் — ஆட்பட்டு (விஷய ப்ரவணராய்த்) திரிகிற
பாரினாரொடும் — (இப்)பூமியிலுள்ள ப்ராக்ருதர்களோடு
யான் கூடுவது இல்லை—;
ஆரம் மார்வன் — முக்தாஹாரத்தைத் திருமார்பிலே அணிந்துள்ளவனாய்

அனந்தன் — அளவிடமுடியாத ஸ்வரூபஸ்வபாவங்களையுடையனாய்
நல் நாரணன் — ஸர்வ ஸ்வாமியாய்
நரக அந்தகன் — அடியவர்களை நரகத்தில் சேராதபடி காத்தருள்பவனான
அரங்கன் — ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலே
பித்தன் — மோஹமுடையனாயிரா நின்றேன்

**உண்டியே உடையே உகந்தோடும் * இம் மண்டலத்தொடுங் கூடுவதில்லையான் *
அண்டவாணன் அரங்கன்வன்பேய்முலை * உண்டவாயன்றன் உன்மத்தன்காண்மினே. 4**

உண்டியே — ஆஹாரத்தையும்
உடையே — வஸ்திரத்தையுமே
உகந்து ஓடும் — விரும்பி(க் கண்டவிட மெங்கும்) ஓடித்திரிகிற
இ மண்டலத்தொடும் — இந்தப் பூமண்டலத்திலுள்ள பிராகிருதர்களோடு
யான் கூடுவது இல்லை—;

அண்டம் வாழ்நன்-பரமபதத்திலே வாழ்பவனும்
வல் பேய் முலை உண்ட வாயன் — கல்நெஞ்சையுடைய பூதனையின் முலையை அமுது செய்த வாயையுடையனுமான
அரங்கன் தன் — ஸ்ரீரங்கநாதன் விஷயத்தில்
உன்மத்தன் — பைத்தியம் பிடித்தவனாயிரா நின்றேன்.

**தீதில்நன்னெறிநிற்க அல்லாதுசெய் * நீதியாரொடும் கூடுவதில்லையான் *
ஆதியாயன் அரங்கனந்தாமரை * பேதைமாமணவாளன்றன் பித்தனே. 5**

தீது இல் நல் நெறி நிற்க { குற்றமற்ற நல்வழி இருக்கச் செய்தே
(அவ்வழியில் போகாமல்)
அல்லாது செய் நீதியாரோடும் { நல்வழிக்கு எதிர்த்தட்டான வற்றைச் செய்வதை விரத மாகக் கொண்டுள்ள பிரா கிருதர்களோடு
யான் கூடுவது இல்லை—;
ஆதி (உலகங்கட்கு) முதல்வனாய்

ஆயன் { ஸ்ரீ கிருஷ்ணனாய் அவதரித்து ஸர்வஸுலபனாய்
அம் தாமரை பேதை மா மணவாளன் { அழகிய தாமரைப்பூவில் அவ தரித்த பிராட்டியின் வல்ல பனை
அரங்கன் தன் ஸ்ரீரங்கநாதன் திறத்தில்
பித்தன் { மோஹங் கொண்டிரா நின் றேன்.

எம்பரத்தர் அல்லாரோடுங்கூடலன் * உம்பர்வாழ்வை ஒன்றாகக்கருதலன் *
தம்பிரானமரர்க்கு அரங்கநகர் * எம்பிரானுக்கு எழுமையும்பித்தனே. 6

எம் பரத்தர் அல்லாரொடும் { என்னைப்போலே அநந்ய ப்ர யோஜநரா யிராதவர்களோடு
கூடலன் (நான்) கூடமாட்டேன் ;
உம்பர் வாழ் வை { தேவதைகளின் ஸ்வர்க்கம் முதலிய போகங்களையும்
ஒன்று ஆக கருதலன் ஒரு புருஷார்த்தமாக எண்ணமாட்டேன் ;

அமரர்க்கு தம்பிரான் நித்யஸூரிகளுக்கு ஸ்வாமியாய்
அரங்கம் நகர் { கோயிலிலே எழுந்தருளி யிருக்கிற
எம்பிரானுக்கு பெரிய பெருமாள் விஷயத்தில்
எழுமையும் எப்போதும்
பித்தன் பித்தனாகா நின்றேன்.

எத்திறத்திலும் யாரொடுங்கூடும் * அச்சித்தந்தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால் *
அத்தனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பித்தனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. 7

செம் கண்மால் { புண்டரீகாக்ஷனான எம்பெரு மான்
எத்திறத்திலும் எந்த விஷயத்திலும்
யாரொடும் கண்டபேர்களோடே
கூடும் அச்சித் தம் தன்னை { சேர்ந்து கெட்டுப்போவதற்கு உறுப்பான நெஞ்சை

தவிர்த்தனன் நீக்கியருளினான்; (ஆதலால்)
அத்தனே ஸ்வாமியே!
அரங்கா ஸ்ரீரங்கநாதனே!
என்று அழைக் கின்றேன் { என்று கூவா நின்றேன்;
எம்பிரானுக்கே பித்தனாய் ஒழிந்தேன்—.

பேயரேயெனக்கியாவரும் யானுமோர் பேயனே * எவர்க்குமிதுபேசியென் ?
ஆயனே! அரங்காவென்றழைக்கின்றேன் * பேயனாயொழிந்தேன் எம்பிரானுக்கே. 8

யாவரும் இவ்வுலகத்தாரடங்கலும்
எனக்கு என்வரைக்கும்
பேயரே பைத்தியக்காரர்கள் தான்;
யானும் { (அவர்களிற் காட்டில் வில க்ஷணனான) நானும்
எவர்க்கும் எவர்களுக்கும்
ஓர் பேயனே ஒரு பைத்தியக்காரன் தான்;
இது இவ்விஷயத்தை

பேசி (விரிவாகச்) சொல்வதனால்
என் என்ன ப்ரயோஜனமுண்டு?
ஆயனே 'ஸ்ரீகிருஷ்ணனே!
அரங்கா ஸ்ரீரங்கநாதனே!'
என்று அழைக் கின்றேன் { என்று (பகவந்நாமங்களைச் சொல்லி) கூவா நின்றேன்;
எம்பிரானுக்கே பேயனாய் ஒழிந்தேன்—.

அங்கையாழி அரங்கனடியிணை * தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனாம் *
கொங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல் * இங்குவல்லவர்க்கு ஏதமொன்றில்லையே. 9

அம் கை ஆழி { அழகிய திருக்கையிலே திரு வாழியாழ்வானை ஏந்தி யுள்ள
அரங்கன் ஸ்ரீரங்கநாதனுடைய
அடி இணை திருவடிகளில்
தங்கு சிந்தை பொருந்தியமனமுடையவராய்
தனி பெரு பித் தன் ஆம் { லோக விலக்ஷணரான பெரிய பித்தராய்
கொங்கர் கோன் { சேரதேசத்வர்களுக்குத் தலை வரான

குலசேகரன் குலசேகராழ்வார்
சொன்ன அருளிச்செய்த
சொல் இப்பாசுரங்களை
இங்கு இவ்விபூதியிலே
வல்லவர்க்கு ஓதவல்லவர்களுக்கு
ஏதம் ஒன்று இல்லை { (பகவதநுபவத்திற்கு) ஒருவித மான இடையூறும் உண் டாகமாட்டாது.

**அடிவரவு:** மெய் நூல் மாரன் உண்டி தீதில் எம்பரத்தர் எத்திறம் பேயர் அங்கை ஊன்.

ஸ்ரீ குலசேகராழ்வாருடைய பதிகப்பாடல்கள் முற்றுப்பெற்றன.

பெரியாழ்வார் திருமொழியில் பெரியாழ்வார் பாடிய திருவரங்கப்பதிகங்கள் மூன்று

## (அதில்) நான்காம்பத்து—எட்டாந்திருமொழி—மாதவத்தோன் (1)

**மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை *
ஓதுவித்ததக்கணையா உருவுருவேகொடுத்தானூர் *
தோதவத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பியெங்கும் *
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே. 1

* * *—அலையெறியா நின்றுள்ள கடலிற் புகுந்து உயிரொழிந்த, மஹாதபஸ்வியான ஸாந்தீபினியினுடைய பிள்ளையை (அந்த ஸாந்திபிநி, தன்னை) அத்யயநம் பண்ணுவித்ததற்கு தக்ஷிணையாக (அப்புத்திரன் மரணமடையும்போதுள்ள ரூபம் மாறாதபடி) யதாரூபமாகக் கொணர்ந்து கொடுத்தருளின எம்பெருமானுடைய திருப்பதியாவது:—பரிசுத்தமாகத் தோய்த்து உலர்த்தின வஸ்திரங்களை அணியா நிற்பவரும் நிர்த்தோஷ ப்ரமாணமான வேதத்தைத் தமக்கு நிரூபகமாக வுடையவருமான ஸ்ரீவைஷ்ணவர்கள் காவேரித் துறைகளில் அவகாஹிக்க, (அதனால்) அக்காவேரி முழுதும் அலைமோதப் பெற்று (அதனால் தாமரை மலர்களின் நாளங்கள் அலைய) அந்தப் பூக்களில் இரா நின்றுள்ள தேனானது பெருகப்பெற்ற நீரையுடைய திரவரங்கமென்னுந் திருப்பதியாம். ... ... .... .... (1)

பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும் *
இறைப்பொழுதிற்கொணர்ந்துகொடுத்து ஒருப்படுத்தவுறைப்பனூர் *
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார்.*
சிறப்புடையமறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. 2

* *.*—ஸூதிகாக்ருஹத்திலேயே இறந்தொழிந்த வைதிக புத்திரர்கள் நால்வரையும் ஒரு நொடிப்பொழுதில் (ஸ்ரீவைகுண்டத்தினின்றும்) கொண்டுவந்து (மாதாபிதாக்கள் கையில்) கொடுத்து (இப்பிள்ளைகள் எம்பிள்ளைகள் தான் என்று) ஸம்மதி பண்ணுவித்த சக்தியுத்தன் (எழுந்தருளியிருக்கிற) திருப்பதியாவது :— வேதங்களிற் கூறப்பட்டுள்ள வைதிகமான சிறந்த மூன்று அக்னிகளையும் அவிச்சின்னமாக வளர்த்துக் கொண்டிருப்பவர்களும் தந்தம் திருமாளிகைக்கு எழுந்தருளுகிற அதிதிகளான ஸ்ரீவைஷ்ணவர்களை ஆதரித்துப் போருமவர்களும் இப்படிப்பட்ட உத்கர்ஷங்களை யுடையவர்களுமான வைதிகர்கள் வாழப்பெற்றதிருவரங்கமேயாம். (2)

மருமகன்றன்சந்ததியை உயிர்மீட்டுமைத்துனன்மார் *
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க்காத்தானூர் *
திருமுகமாய்ச்செங்கமலம் திருநிறமாய்க்கருங்குவளை *
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்கமென்பதுவே. 3

***—மருமகனான அபிமந்யுவினுடைய புத்திரனான பரிக்ஷித்தை மறுபடியும் பிழைப்பித்து, மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய சரீரமானது பாரதயுத்தமாகிற நரமேதத்திலே விழுந்து அழிந்து போகாதபடி ஆசார்ய ரூபியாய் ஹிதோபதேசங்களைப்பண்ணி ரக்ஷித்தருளின கண்ணபிரானுடைய திருப்பதியாவது :— செந்தாமரை மலர்களானவை பெரியபெருமாளுடைய திருமுகத்துக்குப் போலியாக

வும், நீலோத்பல புஷ்பங்கள் திருமேனி நிறத்துக்குப் போலியாகவும் (ஒன்றுக்கொன்று) எதிர் பொருகிற முகத்தை யுடைத்தாய்க் கொண்டு விகஸிக்கப்பெற்ற நீர்வளத்தையுடைய திருவரங்கமாம். .... ... — ... (3)

கூன்தொழுத்தைசிதகுரைப்பக் சோடியவள்வாய்க்கடியசொற்கேட்டு *
ஈன்றெடுத்ததாயரையும் இராச்சியமுமாங்கொழிய *
கான்தொடுத்தநெறிபோகிக் கண்டகரைக்களைத்தானூர் *
தேன்தொடுத்தமலர்ச்சோலைத் திருவரங்கமென்பதுவே. 4

* * *—கூனையுடைய வேலைக்காரியாகிய மந்தரையானவள் ஸ்ரீராமபட்டாபிஷேக மஹோத்ஸவத்துக்கு விநாசகமான தீயசொற்களைச் சொல்ல, அச்சொற்களை அங்கீகரித்துக் காட்டுக்கு எழுந்தருளச் சொன்ன மஹா க்ரூரையான கைகேயியினுடைய வாயிலுண்டான கடினமான சொல்லைக்கேட்டு, தன்னைப் பெற்றுவளர்த்த தாயான ஸ்ரீகௌஸலையாரையும் ராஜ்யத்தையும் கைவிட்டு, காடுகள் அடர்ந்திரா நின்றுள்ள வழியே (ஸ்ரீதண்டகாரணியத்திற்கு) எழுந்தருளி (முனிவர்களுக்கு) முள்போலப் பாதகராயிருந்த (ஜநஸ்தாநவாஸிகளான) ராக்ஷஸரை நிரஸித்தருளின எம்பெருமான் (எழுந்தருளியிருக்கிற) திருப்பதியாவது :—தேன்மாறுத மலர்களையுடைய சோலைகளையுடைத்தான திருவரங்கமாம். ... ... (4)

பெருவரங்களவைபற்றிப் பிழக்குடையவிராவணனை *
உருவரங்கப்பொருதழித்து இவ்வுலகினைக்கண்பெறுத்தானூர் *
குரவரும்பக்கோங்கலரக் குயில்கூவுங்குளிர்பொழில்சூழ் *
திருவரங்கமென்பதுவே யென்திருமால்சேர்விடமே. 5

* * *—குரவ மரங்களானவை அரும்புவிடா நிற்க, கோங்கு மரங்களானவை அலரா நிற்க, குயில்களானவை களித்துக் கூவும்படியான குளிர்ந்த சோலைகளாலே சூழப்பெற்ற திருவரங்கமென்னுந் திருப்பதியானது:—பெருமை பொருந்திய வரங்களை பெலமாகக்கொண்டு (தேவர் முனிவர் முதலாயினோரிடத்துப்) பிழை செய்கையையே இயல்வாகவுடைய இராவணனுடைய உடலானது சிந்நபிந்நமாம்படி போர்செய்து அவனைத் தொலைத்து இந்த லோகத்தைக் காத்தருளினவனும் எனக்குத் தலைவனும் ச்ரிய:பதியுமான எம்பெருமான் சேருமிடமாகிய திருப்பதியாம். ... ... [5)

கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்துகிளராமே *
ஆழிவிடுத்தவருடைய கருவழித்தவழிப்பனூர் *
தாழைமடலூடுரிஞ்சித் தவளவண்ணப்பொடியணிந்து *
யாழினிசைவண்டினங்கள் ஆளம்வைக்குமரங்கமே. 6

* * *—பாதாள லோகத்திலுள்ள அஸுரர்களை வேரோடே தொலைக்கத் திருவாழியாழ்வானை ஏவி அவ்வசுரர்களுடைய கர்ப்பமளவாக அழித்தருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது:—வீணையினுடைய ஓசைபோன்றஇனிய இசையையுடைய வண்டுகளின் திரள்களானவை மலரத் தொடங்குகிற தாழைமடலினுள்ளே உடம்பை உரோசிக்கொண்டு புகுந்து அம்மடலிலுள்ள வெளுத்த

நிறத்தையுடைய சுண்ணத்தை உடம்படங்கலும் அணிந்துகொண்டு அந்தக்களிப்பாலே தென தென என்று ஆளத்திவைத்துப் பாடுமிடமான திருவரங்கமாம். (6)

கொழுப்புடையசெழுங்குருதி கொழித்திழிந்துகுமிழ்ந்தெறிய *
பிழக்குடையவசுரர்களைப் பிணம்படுத்தபெருமானூர் *
தழுப்பரியசந்தனங்கள் தடவரைவாயீர்த்துக்கொண்டு *
தெழிப்புடையகாவிரிவந்து அடிதொழுஞ்சீரரங்கமே. 7

* * *—கொழுப்பையுடையதும் செழுமை தங்கியதுமான ஊற்றுமாருமல் கிளர்ந்து நிலத்தில் பரவிக் குமிழி கிளம்பி அலை யெறியும்படி (பரஹிம்சையாகிய) தீமைகளைச் செய்கின்ற அஸுரர்களைப் பிணமாக்கி யருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது :—ஒருவரிருவரால் தழுவமுடியாதபடி மிகப்பருத்த சந்தனமரங்களைப் பெரியமலைகளினின்று வேரோடே பிடுங்கி இழுத்துக்கொண்டு வந்து (இவற்றைத் திருவுள்ளம் பற்றவேணும் என்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றதோ என்னலாம்படி) இரைச்சலையுடைய திருக்காவேரி நதியானது எம்பெருமானது திருவடிகளைத் தொழுகையாகிற சீர்மையைப்பெற்ற திருவரங்கநகராம். (7)

வல்லெயிற்றுக்கேழலுமாய் வாளெயிற்றுச்சீயமுமாய் *
எல்லையில்லாத்தரணியையும் அவுணனையுமிடந்தானூர் *
எல்லியம்போதிருஞ்சிறைவண்டு எம்பெருமான்குணம்பாடி *
மல்லிகைவெண்சங்கூதும் மதிளரங்கமென்பதுவே. 8

* * *—வலிவுள்ள பற்களையுடைய வராஹமாய்த் திருவவதரித்தும், ஒளியையுடைய நரஸிம்ஹமாய்த் திருவவதரித்தும், எல்லையில்லாத பூமியையும் ஹிரண்யாஸுரனையும் கீண்டருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது :—பெரிய சிறகுகளையுடைய வண்டுகள் அந்திப்பொழுதிலே பெரியபெருமாளுடைய திருக்குணங்களைப் பாடிக்கொண்டு மல்லிகைப் பூவாகிற வெளுத்த சங்கை ஊதாநிற்கப்பெற்றதும் திருமதிள்களையுடையதுமான திருவரங்கமாம். ... (8)

குன்றுடுகொழுமுகில்போல் குவளைகள்போல்குரைகடல்போல் *
நின்றுடுகணமயில்போல் நிறமுடையநெடுமாலூர் *
குன்றாடுபொழில்நுழைந்து கொடியிடையார்முலையணவி *
மன்றாடு தென்றலுலாம் மதிளரங்கமென்பதுவே. (9)

* * *—மலையினுச்சியிற்சார்ந்த நீர்நிறைந்த மேகம்போலவும் கருநெய்தல் பூப்போலவும் ஒலிசெய்யாநின்ற கடல்போலவும் களிப்பாலே நின்று ஆடாநின்றுள்ள மயில்களின் திரள்போலவும் இரா நின்ற வடிவழகையுடையனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது, தென்றல் காற்றானது மலயபர்வதத்திலுள்ள சோலைகளினிடையிலே நுழைந்து அங்குள்ள பூக்களின் தாதுகளை அளைந்து பரிமளத்தைக் கொய்துகொண்டு கொடிபோன்ற இடையையுடையரான பெண்களினுடைய (கலவைச்சாந்தணிந்த) முலைகளை வியாபித்து (அந்தப்பரிமளத்துடனே) நாற்சந்திகளினூடே உலாவப்பெற்ற மதிளரங்கமென்பது. ... (9)

பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனகொண்டு *
இருவரங்கமெரித்தானை யேத்தவல்லாரடியோமே. (10)

* * *—பிரமன் முதலியோரிடத்துப்பெற்ற பெரியவரங்களைப் பெலமாகக் கொண்டு யுத்தவிஷயமாகக் கோலாஹலஞ் செய்து வெளிப்புறப்பட்ட இராவணனை யுத்தத்திலே ஒழியும்படி போர்செய்து ஒழித்தருளின (வீர்யமாகிற) லக்ஷ்மியைத் தனக்கு நிருபகமாக உடையனுன எம்பெருமானுடைய திருவரங்கமென்னும் திருப்பதி விஷயமாகப் பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பத்துப் பாசுரங்களையுங் கொண்டு, மதுகைடபர்களாகிற இருவருடைய உடலைத் (திருவனந்தாழ்வானுடைய மூச்சு வெப்பத்தினுல்) கொளுத்திப் போகட்ட ஸ்ரீரங்கநாதனைத் துதிக்க வல்லவர்களுக்கு அடிமை செய்யக்கடவோம். ... ... ... (10)

அடி வரவு :

மாதவ பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிறு குன்று பரு மரவடி.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## நான்காம்பத்து—ஒன்பதாந்திருமொழி—மரவடியை

### இதுவும் திருவரங்கப் பதிகம் (2)

**மரவடியைத்தம்பிக்கு வான்பணயம்வைத்துப்போய்வானேர்வாழ *
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில் *
திருவடிதன்திருவுருவும் திருமங்கைமலர்கண்ணுங்காட்டிநின்ற *
உருவுடையமலர்நீலங் காற்ருட்டவோசலிக்குமொளியரங்கமே. 1

* * *—சித்திரகூடத்தில் வந்து ப்ரபத்தி பண்ணின பரதாழ்வானுக்கு ஸ்ரீபாதுகைகளை நன்ருக நம்புகைக்கு உரிய அடகாக அளித்து, தேவர்கள் வாழும்படி (சித்திரகூடத்தைவிட்டு அவ்வருகே) எழுந்தருளி யுத்தத்துக்கு உரிய தெற்குத் திக்கில் செய்யவேண்டிய காரியங்களைக் குறையறச்செய்து முடித்துவிட்டுப் பிராட்டியுடன் அயோத்திக்கு எழுந்தருளி ராஜ்யபரிபாலநம் செய்தருளின திருமால் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது; ஸர்வஸ்வாமியான பெரிய பெருமாளுடைய திருமேனி நிறத்தையும் பெரியபிராட்டியாருடைய மலர்ந்த திருக்கண்களின் நிறத்தையும் பிரகாசிப்பியா நின்ற அழகு பொருந்திய கருநெய்தற் பூக்களானவை காற்று அசைக்க அசைந்து கொண்டிருக்கப்பெற்ற ஒளியையுடைய திருவரங்கமாம். (1)

**தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ்சிதருரைக்குமேல் *
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய்தாரென்பர்போலும் *
மன்னுடையவிபீடணற்கா மதிலிலங்கைத்திசைநோக்கிமலர்கண்வைத்த *
என்னுடையதிருவரங்கற்கன்றியும் மற்ருருவர்க்காளாவரே. 2

* * *—தன்னுடைய [எம்பெருமானுடைய] அடியவர்கள் விஷயத்தில் புருஷகாரம் பண்ணக்கடவளான பெரிய பிராட்டியார்தாமே குற்றங்களைக் கணக்கிட்டுச் சொல்லத் தொடங்கினுலும் "எனக்கு அடிமைப்பட்டவர்கள் அக்குற்றங்களைச் செய்யமாட்டார்கள்; செய்த குற்றத்தைப் பொறுப்பதற்கு எம்பெருமானுண்டு என்று சிலவற்றைச் செய்தார்களாயினும் அவர்கள் நன்மையையே செய்தார்களத்தனை" என்று சொல்லா நிற்பவரும், ஐச்வரியம் பொருந்திய விபீஷணுழ்வானுக்காக மதிளையுடைய லங்கையின் முகமாக மலர்ந்த திருக்கண்களை வைத்தருளினவரும் எனக்கு ஸ்வாமியுமான பெரியபெருமாளை யொழிய வேறெருவர்க்கு ஆட்படுவார் ஆரேனுமுண்டோ. [பெரிய பெருமாளுக்கே ஆட்படுவ ரென்றவாறு.] ... (2)

கருளுடையபொழில்மருதுங் கதக்களிறும்பிலம்பனையுங்கடியமாவும் *
உருளுடையசகடினையும் மல்லரையுமுடையவிட்டோசைகேட்டான் *
இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி *
அருள்கொடுத்திட்டடியவரை ஆட்கொள்வானமருமூரணியரங்கமே. 3

* * *—கிருஷ்ணனை நலியவேணும் என்கிற சீற்றத்தையுடையதும் மனமிழுப்புண்ணும்படி புறம்பே சோலைசெய்து நிற்பதுமான இரட்டை மருதமரங்களையும், மிக்க கோபத்தையுடைய குவலயாபீடத்தையும் ப்ரலம்பாஸுரனையும் மிகவும் க்ரூரனை குதிரை வடிவாய்வந்த கேசியையும், உருண்டுவந்த சகடாஸுரனையும் மல்லர்களையும் நிரஸித்தருளிக் கீர்த்திபெற்றவனும், இருளைப் போக்காநின்று வீசுகின்ற கிரணங்களையுடையனை ஸூர்யனுடைய மண்டலத்தினுள்ளே அடியார்களை ஏறச்செய்து (அங்கு நின்றும் அர்ச்சிராதி மார்க்கமாய்ப் பரமபதத்திற்குக் கொண்டு போய்) அங்கு அவர்களை நிறுத்தித் தன்னுடையதான உபாயத்வாகாரத்தைத் தவிர்த்து அவர்கள் அவ்விடத்தில் நின்றும் மீளாமைக்கும் கைங்கரியலாபத்திற்கு முறுப்பாக அவர்கள் பக்கல் க்ருபைபண்ணி அடிமை கொள்ளுமவனுமான எம்பெருமான் பொருந்தி எழுந்தருளியிருக்கிற திருப்பதியாவது அழகிய திருவரங்கமாம். (3)

பதினுருமாயிரவர் தேவிமார்பணிசெய்யத்துவரையென்னு
மதில் * நாயகராகிவீற்றிருந்த மணவாளர்மன்னுகோயில் *
புதுநாண்மலர்க்கமலம் எம்பெருமான்பொன்வயிற்றிற்பூவேபோல்வான் *
பொதுநாயகம்பாவித்திறுமாந்து பொற்சாய்க்கும்புனலரங்கமே. 4

* * *—ஸ்ரீ த்வாரகையென்கிற பட்டணத்தில் பதினுருயிரம் தேவிமார் கைங்கரியம் பண்ண, அவர்களுக்கு நாயகராய்க் கொண்டு அவர்களின் நடுவே எழுந்தருளியிருந்த மணவாளப்பிள்ளை அழகிய மணவாளப் பெருமாளாய் நித்தியவாஸம் பண்ணுகிற கோயிலாவது, அப்போதலர்ந்த செவ்வித் தாமரைப்பூவானது எம்பெருமானுடைய அழகிய திருநாபியிலுள்ள தாமரைப்பூவோடு ஸாம்யம் பெறுவதற்காக ஸர்வநிர்வாஹகத்வத்தைப் பாவித்து அப்பாவனையாலே கர்வங்கொண்டு மற்ற தாமரைகளின் அழகைத்தள்ளிவிடா நின்றுள்ள நீர்வளம் மிக்க திருவரங்கமாம் (4)

ஆமையாய்க்கங்கையாய் ஆழ்கடலாயவனியாயருவரைகளாய் *
நான்முகனுய்நான்மறையாய் வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானுன் *
சேமமுடைநாரதனுர் சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில் *
பூமருவிப்புள்ளினங்கள்புள்ளரையன் புகழ்குமுறும்புனலரங்கமே. 5

* * *—ஸ்ரீ நாரத மஹர்ஷிக்குத் தன்னுடைய ஸர்வாதிகத்துவத்தை விளங்கச் செய்வதற்காக முதலில் கங்காஜலத்துள் ஆமையாயும் பின்பு அந்த ஆமை முதலிய ஜந்துக்களுக்கு இருப்பிடமான கங்கையாயும் பின்பு அக்கங்கை முதலிய நதிகளுக் குப் புகலிடமான ஆழ்ந்த கடலாயும் பின்பு அக்கடலுக்கு இருப்பிடமான பூமியாயும் பின்பு அப்பூமிக்கு ஆதாரமான பெரிய மலைகளாயும் பின்பு அம்மலைகளுக்கு ஸ்ருஷ்டிகர்த்தாவான சதுர்முகனாயும் பின்பு அச்சதுர்முகனுக்குத் தாரகமான நான்கு வேதங்களையும் பின்பு வேதங்களுக்குப் பராயணமான யாகங்களாயும் பின்பு அந்த யாகங்களுக்கு வீர்யத்தைக் கொடுக்கவல்ல தக்ஷிணையாகவும் அந்தத் தக்ஷிணாமுகமாக அனைவர்க்கும் அவரவர்கள் விரும்பின பலத்தைக் கொடுக்கவல்ல அஸாதாரண விக்ரஹ விசிஷ்டனான தானாகவுமாகி, இங்ஙனே நாரதபகவான் பல காலும் எழுந்தருளி ஸ்தோத்திரம்பண்ணி வணங்கும்படி பள்ளிகொண்டருளுமெம் பெருமானுடைய கோயிலாவது, அன்னம் முதலிய பறவைக்கூட்டங்கள் நீர்ப்பூ முதலிய பூக்களில் பொருந்தியிருந்து தங்கள் சாதிக்குத் தலைவனான பெரிய திருவடி யினுடைய கீர்த்தியை அநக்ஷரரஸமாகப் பேசாநிற்கப் பெற்றதும் நீர்வளத்தை யுடையதுமான திருவரங்கமாம். [இப்பாட்டில் அனுசந்தித்த இதிஹாஸம் ஹரிவம் சத்திலுள்ளது.] .... .... .... ... ... (5)

மைத்துனன்மார்காதலியை மயிர்முடிப்பித்தவர்களையேமன்னராக்கி *
உத்தரைதன்சிறுவனையும் உய்யக்கொண்டவுயிராளனுறையுங்கோயில் *
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய்முனிவர்களும்பரந்தநாடும் *
சித்தர்களுந்தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே. 6

* * *—தனது மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய பத்நியாகிய த்ரௌபதியை விரித்த கூந்தலை முடியும்படி செய்தருளி அப்பாண்டவர்களையே அரசாள்வித்தருளியவனும் அபிமன்யுவின் மனைவியான உத்தரை என்பவளுடைய மகனான (கருவிற் கரிக்கட்டையா யொழிந்த) பரிக்ஷித்தை உயிர் பெற்றெழுந்திருக் கும்படி செய்தருளியவனும் எல்லா உயிர்கட்கும் தலைவனுமான எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது, பக்தர்களும் ஸந்நியாசிகளும் வேதம்வல்ல ரிஷிகளும் நாட்டிலுள்ள மற்றும் பலரும் நித்திய முக்தர்களும் அஞ்சலி பண்ணி வணங்கும்படி எல்லாத் திக்குகளுக்கும் விளக்காயிருக்கிற திருவரங்க நகராம். (6)

குறட்பிரமசாரியாய் மாவலியைக்குறும்பதக்கியரசுவாங்கி *
இறைப்பொழுதிற்பாதாளங் கலவிருக்கைகொடுத்துகந்தவெம்மான்கோயில் *
எறிப்புடைமணிவரைமேல் இளஞாயிறெழுந்தாற் போலரவணையின்வாய் *
சிறப்புடையபணங்கள்மிசைச் செழுமணிகள்விட்டெறிக்குந்திருவரங்கமே. 7

* * *—வாமந ப்ரஹ்மசாரியா யெழுந்தருளி மஹாபலியினுடைய செருக்கை அடக்கி அவனுடைய ராஜ்யமாயிருந்த பூமியைத் தன்னுடையதாம்படி நீரேற்றுப் பெற்று க்ஷணகாலத்துக்குள் பாதாளலோகத்தை அவனுக்கு இருப்பிடமாகக் கற் பித்து மகிழ்ந்த எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிற கோயிலாவது, மிக்க ஒளியை யுடைய நீலரத்ன பர்வதத்தின்மேல் பால ஸௌரியர்கள் உதித்தாற்போலத் திருவனந் தாழ்வானிடத்து அழகு பொருந்திய படங்களின்மேல் செழுமை தங்கிய ரத்னங்கள் மிகவும் ஜ்வலியா நிற்கப்பெற்ற திருவரங்கமாம். .... .... ... (7)

உரம்பற்றியிரணியனை உகிர்நுதியாலொள்ளியமார்புறைக்கவூன்றி *
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்க வாயலறத்தெழித்தான்கோயில் *
உரம்பெற்றமலர்க்கமலம் உலகளந்தசேவடிபோலுயர்ந்துகாட்ட *
வரம்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்தலைவணக்குந்தண்ணரங்கமே. 8

* * *—தன்னுடைய வலிவை நினைத்துச் செருக்குற்ற இரணியனுடைய அழகிய மார்பை நகங்களின் நுனிகள் உள்ளே பொத்தும்படி திருக்கைகளால் பற்றிக் கொண்டு அவனது தலையிலுள்ள கிரீடம் பொடி படும்படியாகவும் கண்கள் பிதுங் கும்படியாகவும் வேதனை பொறுக்கமாட்டாமல் வாய் விரியும்படியாகவும் தலையைப் பிடித்து நெரித்து (பிரஹ்லாதனுடைய விரோதியை முடித்தோமென்னும் மகிழ்ச்சி யினுல்) ஆரவாரம் செய்தருளின எம்பெருமான் எழுந்தருளி யிருக்கிற கோயிலாவது, செழிப்புப் பொருந்திய தாமரை மலர்கள் மேலுலகை அளப்பதாக உயர்ந்த திருவடி யைப்போல் உயர வளர்ந்து விளங்க, வரம்பு சேர்ந்து விளைந்து நிற்பதும் கதிரை யுடையதுமான செந்நெலானது தாள்களை நீட்டித் தலைவணங்கி நிற்கப்பெற்றது மான குளிர்ந்த திருவரங்க நகராம். (உரம் - வலிவு.) .... .... (௮)

தேவுடையமீனமாயாமையாயேனமாய் அரியாய்க்குறளாய் *
மூவுருவினிராமனுய்க் கண்ணனுய்க்கற்கியாய்முடிப்பான்கோயில் *
சேவலொடுபெடையன்னஞ் செங்கமலமலரேறியூசலாடி *
பூவணைமேல்துதைந்தெழு செம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே. 9

* * *—தெய்வத்தன்மை வாய்ந்த மத்ஸ்யமாயும் கூர்மமாயும் வராஹமாயும் நரஸிம்ஹமாயும் வாமநனுயும் பரசுராமனுயும் தசரதராமனுயும் பலராமனுயும் ஸ்ரீ கிருஷ்ணனுயும் கல்கியாயும் திருவவதாரங்களெடுத்து விரோதிகளை ஒழிக்க வல்ல எம்பெருமான் எழுந்தருளியிருக்கிற கோயிலாவது ; அன்னப்பேடை தனது புருஷ ஹம்ஸத்தோடுகூடச் செந்தாமரைப் பூவின்மேலேறி அம்மலரை அசைத்து ஊசலாடிப் புஷ்ப சயநத்தின்மேல் நெருக்கத்தைச் செய்து அதனுல் கிளர்ந்த சுண்ணமாகிற சிவந்த பொடியில் மூழ்கி விளையாடா நிற்கப்பெற்ற நீர்வளத்தை யுடைய திருவரங்க நகராம். .... .... ... ... (9)

செருவாளும்புள்ளாளன்மண்ணளன் செருச்செய்யுநாந்தகமென்னு
மொருவாளன் * மறையாளனேடாதபடையாளன் விழுக்கையாளன் *
இரவாளன்பகலாளனென்னையாளன் ஏழுலகப்பெரும்புரவாளன் *
திருவாளனினிதாகத் திருக்கண்கள்வளர்கின்றதிருவரங்கமே. 10

* * *—தானே போர் செய்யவல்ல பெரிய திருவடிக்குத் தலைவனும், லீலா விபூதியை ஆளுமவனும், ஆச்ரித விரோதிகளை எதிர்த்துப் பூசல் செய்யவல்ல நந்தகம் என்கிற ஒப்பற்றதொரு கொற்றவாளை யுடையனும், நான்கு வேதங்களையும் ஆளுமவனும், போர்க்களத்தில் முதுகுகாட்டி யோடாத ஸேனைகளை யுடைய வனும், சிறந்த ஒளதார்ய முடையனும், இரவு பகற்போதுகளுக்கு நியாமகனும். அடியேனுக்குத் தலைவனும் ஸப்தலோகங்களாகிற பெரிய க்ஷேத்திரங்களை ஆளு மவனும், பெரிய பிராட்டியாரைத் தேவியாக ஆளுமவனுமான எம்பெருமான் திரு வுள்ளமுவந்து திருக்கண் வளர்ந்தருளுகிற கோயிலாவது; திருவரங்க நகராம். (10)

கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்கருதுங்கோயில் *
தென்னாடும்வடநாடுந்தொழநின்ற திருவரங்கந்திருப்பதியின்மேல் *
மெய்ந்நாவன்மெய்யடியான்விட்டுசித்தன் விரித்ததமிழுரைக்கவல்லார் *
எஞ்ஞான்றுமெம்பெருமானிணையடிக்கீழ் இணைபிரியாதிருப்பர் தாமே. 11

***—கஜேந்திராழ்வானுடைய துன்பத்தைப் போக்கின சக்கரபாணி யெம்பெருமான் விரும்பி யெழுந்தருளியிருக்கப்பெற்ற கோயிலாய், தென்னாட்டிலுள்ளாரும் வடநாட்டிலுள்ளாரும் ஸேவிக்கும்படி அமைந்த திருவரங்கமென்னும் திருப்பதி விஷயமாக, மெய்யே சொல்லாநின்ற நாவை யுடையரும் பிரயோஜனத்தை விரும்பாது அடிமை செய்பவருமான பெரியாழ்வார் அருளிச்செய்த இத்தமிழ்ப் பாசுரங்களை ஓதவல்லவர்கள் எம்பெருமானது திருவடிகளின் கீழ் எந்நாளும் நித்ய முக்தர்களின் திரளாகிற துணையைப் பிரியாமல் கூடி வாழ்ந்திருக்கப் பெறுவர். ... (11)

**அடிவரவு:** மரவடி தன் கருள் பதினாறு ஆமை மைத்துனன் குறள் உரம் தேவு செருகைந்நாகத் துப்பு.

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## பெரியாழ்வார் திருமொழி—நான்காம்பத்து – பத்தாந்திருமொழி— துப்புடையாரை

(சரமகாலத்தில் வருத்தமொன்றும் நேராமைக்காக இப்போதே அரங்கனைத் துதிக்கின்றேனென்றல்)

**துப்புடையாரையடைவதெல்லாம் சோர்விடத்துத்துணையாவரென்றே *
ஒப்பிலேனாகிலும் நின்னடைந்தேன் ஆனைக்குநீயருள்செய்தமையால் *
எய்ப்பென்னை வந்துநலியும்போது அங்கேதுநானுன்னை நினைக்கமாட்டேன் *
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 1

***—திருவரங்கம் பெரிய கோயிலில் திருவனந்தாழ்வானாகிற படுக்கையின்மேல் பள்ளிகொள்ளா நின்றுள்ள எம்பெருமானே! அடியாரைக் காப்பதில் ஸாமர்த்தியமுடைய தேவரீரை ஆச்ரயிப்பது 'ஸர்கல இந்திரியங்களும் சிதிலமாய் விடுங்காலத்தில் தேவரீர் துணையாயிருக்கும், என்கிற எண்ணத்தினாலன்றோ? இவ்வாறு துணை செய்வதற்கு உரிய அதிகாரிகள் இன்னாரென்று தேவரீர் திருவுள்ளத்திற் கொண்டிருக்குமவர்களோடு அடியேன் ஒப்பற்றவனாயினும் தேவரீர் கஜேந்திராழ்வானைக் காத்தருளியவராதலால் அவரைப்போல் அடியேனையுங் காத்தருள்வீரென்று தேவரீரைச் சரணம் புகுந்தேன் ; வாதபித்த ச்லேஷ்மங்களினால் நெருக்குண்கையாலுண்டாகக் கடவதான இளைப்பானது அடியேனைக் கிட்டி வருத்துங்காலமாகிற அந்த சரமதசையில் அடியேன் தேவரீரை க்ஷணகாலமாயினும் நினைக்க முடியாதவனாவேன். அக்காலத்துக்காக, கரணகளேபரங்கள் தெளிவு பெற்றிருக்கிற இப்போதே என்னுடைய பிரார்த்தனையை விண்ணப்பஞ் செய்து கொண்டேன். ... (1)

சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கரமேந்திஞனே *
நாமடித்தென்னையனேகதண்டஞ் செய்வதாநிற்பர்நமன்றமர்கள் *
போமிடத்துன்திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர்மாயைவல்லை *
ஆமிடத்தேயுன்னைச்சொல்லிவைத்தேன் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 2

* * *—சங்கசக்ரபாணியான ஸ்ரீரங்கநாதனே!, யமபடர்கள் மிக்க கோபத்தோடு நாக்கைமடித்துக்கொண்டு மஹா பாபியான அடியேனைப் பல வகைகளால் தண்டிக்க நினையாநின்றவர்களாய் இழுத்துக்கொண்டு போம்போது என்னுடைய நெஞ்சானது உன் விஷயத்தில் சிறிதாயினும் அவகாஹிக்கமாட்டாமல் நிற்கையாகிற ஒப்பற்றதொரு மாயையைச் செய்வதில் நீ வல்லவஞயிரா நின்ருய்; ஆதலால் ஸர்வேந்திரியங்களும் தெளிவு பெற்றிருக்கப்பெற்ற இக்காலத்திலேயே சரீரவியோக ஸமயத்தில் உன்னை நினைக்கமாட்டாத அடியேனைத் திருவுள்ளம்பற்றியருள வேணும் என்று உன்னைக் குறித்து விண்ணபஞ் செய்து கொண்டேன். ... (2)

எல்லையில்வாசல்குறுகச்சென்ருல் எற்றிநமன்றமர்பற்றும்போது *
நில்லுமினென்னுமுபாயமில்லை நேமியுஞ்சங்கமுமேந்திஞனே *
சொல்லலாம்போதேயுன்நாமமெல்லாம் சொல்லினேனென்னைக்
[குறிக்கொண்டென்றும் *
அல்லல்படாவண்ணங்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 3

* * *—சங்கசக்ரபாணியான ஸ்ரீரங்கநாதனே!, அடியேனுடைய வாழ்நாளின் எல்லையாகியசரமதசையில் யமபுரத்துக்குப் போம்வழியைக் கிட்டப்புகுந்தால் யமகிங்கரர்கள் அடித்துப் பிடிக்குங் காலத்தில் கடக்க நில்லுங்கள் என்று அவர்களைக் கிட்ட வரவொட்டாமல் தடுக்கும்படியான ஒருபாயமும் என் கையில் இல்லை; ஆதலால், வாய்விட்டுச் சொல்லுகைக்கு உரிய இப்போதே உன்னுடைய திருநாமங்களை யெல்லாம் சொன்னேன்; அடியேனைத் திருவுள்ளத்திற்கொண்டு எப்போதும் அநர்த்தப்படாதபடி ரக்ஷித்தருளவேணும். ... ... (3)

ஒற்றைவிடையனும்நான்முகனும் உன்னையறியாப்பெருமையோனே *
முற்றவுலகெல்லாம்நீயேயாகி மூன்றெழுத்தாயமுதல்வனேயோ *
அற்றதுவாணுளிவற்கென்றெண்ணி அஞ்சநமன்றமர்பற்றலுற்ற *
அற்றைக்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 4

* * *—ஒப்பற்ற ரிஷபவாஹநஞன ருத்ரனும் பிரமனும் உன்னை உள்ளபடி அறியவொண்ணுத பெருமை பொருந்தியவனே! ஒன்றெழியாதபடி எல்லா உலகங்களும் நீயேயாய் மூன்று அக்ஷரமான பிரணவ ஸ்வரூபியானவனும் ஸர்வ காரண பூதனுமான ஸ்ரீரங்கநாதனே!, யமகிங்கரர்கள் 'இவனுக்கு ஆயுஸ்ஸு முடிந்தது' என்று நினைத்து, பிடிக்கிற பிடியில் அஞ்சும்படி பிடிக்கப் புகுகிற அன்றைக்கு நீ என்னைக் காக்கவேண்டும். ... ... ... (4)

பையரவினணைப்பாற்கடலுள் பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி *
உய்யவுலகுபடைக்கவேண்டி உந்தியில்தோற்றிஞய்நான்முகனை *
வையமனிசரைப்பொய்யென்றெண்ணிக் காலனையுமுடனேபடைத்தாய் *
ஐயவினியென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 5

* * *—திருப்பாற்கடலில் சேஷசாயியான ஸ்வாமி!, எல்லா வுயிர்களும் தன்னையடைந்து உஜ்ஜீவிக்கும்படி லோகங்களை ஸ்ருஷ்டிக்க விரும்பித் திருநாபிக் கமலத்தில் பிரமனைத் தோற்றுவித்தவனே! பூமியிலுள்ள மநுஷ்யர்கள் நமது கட்டளையாகிய சாஸ்த்ர மரியாதையில் நிற்கமாட்டாது க்ருத்ரிமராய் நடப்பவர்க ளென்று நினைத்து அந்த விபரீதாசரணத்துக்குத் தக்க தண்டம் நடத்துதற்காக யமனையும் கூடவே ஸ்ருஷ்டித்தருளினவனே! பரமபந்துவானவனே! ஸ்ரீரங்க நாதனே! இனி என்னைக் காக்கவேண்டும். ... ... (5)

தண்ணனவில்லைநமன்றமர்கள் சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர் *
மண்ணொடுநீருமெரியுங்காலும் மற்றுமாகாசமுமாகிநின்றாய் *
எண்ணலாம்போதேயுன்நாமமெல்லாம் எண்ணினேனென்னைக்
[குறிக்கொண்டென்றும் *
அண்ணலேநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே.6

* * *—பஞ்ச பூதங்களும் மற்றுமுள்ள பதார்த்தங்களுமாய் நிற்பவனே! ஸர்வ ஸ்வாமியானவனே! யமகிங்கரர்கள் இரக்கமற்றவர்களாய்க் கொண்டு மிகவும் கொடிய சிக்ஷைகளைப் பண்ணுவர்கள்; அப்படிப்பட்ட சிக்ஷைகளுக்கு ஆளாகாதொழியும்படி, அநுஸந்திக்கைக்கு உரிய காலத்திலேயே உன்னுடைய திருநாமங்களை யெல்லாம் அநுஸந்தித்தேன்; அடியேனை நீ திருவுள்ளத்திற் கொண்டு எப்போதும் ரக்ஷித்தருளவேணும். .... ... (6)

செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற தேவர்கள்நாயகனேயெம்மானே *
எஞ்சலிலென்னுடையின்னமுதே யேழுலகுமுடையாயென்னப்பா *
வஞ்சவுருவின்நமன்றமர்கள் வலிந்துநலிந்தென்னைப்பற்றும்போது *
அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே.7

* * *—ருஜுவான சொற்களையுடைய வேதத்துக்கு அர்த்தமாயிருப்பவனும் நித்ய ஸூரிகளுக்குத் தலைவனுமான பெருமானே! எனக்குக் குறைவற்ற பரம போக்யமான அம்ருதம் போன்றவனே! உலகங்களுக்கெல்லாம் ஸ்வாமியானவனே! எனக்கு உபகாரகனானவனே! வஞ்சனை பொருந்திய ரூபத்தையுடையரான யமகிங் கரர்கள் அடியேனைப் பலாத்கரித்து ஹிம்ஸித்துக்கொண்டு பிடிக்கும்போது 'அஞ்ச வேண்டா' என்று என்னைக் காத்தருள்க. ... ... ... (7)

நானேதுமுன்மாயமொன்றறியேன் நமன்றமர்பற்றிநலிந்திட்டு * இந்த
ஊனேபுகேயென்றுமோதும்போது அங்குன்னை நானொன்றுநினைக்கமாட்டேன் *
வானேய்வானவர்தங்களீசா மதுரைப்பிறந்தமாமாயனே * என்
ஆனாய்நீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 8

* * *—பரமபதத்திலுள்ள நித்ய முக்தர்களுக்குத் தலைவனே! திருவடமதுரை யில் அவதரித்த மிக்க ஆச்சரிய சக்தியை யுடையவனே! பாகனுக்கு வசப்பட் டொழுகுகின்ற யானைபோல் எனக்கு வசப்பட்டிருப்பவனே! அடியேன் உன் மாயை களில் யாதொன்றையும் அறியமாட்டேன்!; யமகிங்கரர்கள் என்னைப் பிடித்து இந்தச் சரீரத்தோடே பண்ணவேண்டிய ஹிம்ஸைகளையெல்லாம் பண்ணிவிட்டுப்

பின்பு, 'இந்த யாதநாசரீரத்தினுள்ளே பிரவேசி' என்று அடிக்கும்போது அவ்விடத்தில் உன்னை நான் ஒன்றும் நினைக்கமாட்டேன்; நீ என்னைக் காக்கவேண்டும். (8)

குன்றெடுத்தா நிரைகாத்தவனே யாகோநிரைமேய்த்தவனேயெம்மானே *
அன்றுமுதலின்றறுதியா ஆதியஞ்சோதிமறந்தறியேன் *
நன்றுங்கொடியநமன்றமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது *
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டும் அரங்கத்தரவணைப்பள்ளியானே. 9

* * *—கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்துப் பிடித்துப் பசுக்களின் திரளை ரக்ஷித்தருளின கோபாலனே! மாடுகளின் கூட்டத்தை மேய்த்தருளினவனே! எனக்கு ஸ்வாமியானவனே! உனக்குப் பல்லாண்டு பாடுமவனுக்கிக் கொண்ட அந்நாள் தொடங்கி இன்றளவாக ஸர்வகாரண பூதனை உன்னுடைய விலக்ஷண தேஜோரூபமான திவ்யமங்கள விக்ரஹத்தை அடியேன் மறந்ததில்லை; மிக்க கொடுமை பொருந்திய யமகிங்கரர்கள் என்னை ஹிம்ஸித்து பலாத்கரித்துப் பிடிக்குங் காலமாகிய அத்தருணத்தில் அவ்விடத்தில் நீ என்னைக் காக்கவேண்டும்.... (9)

மாயவனை மதுசூதனனை மாதவனை மறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினையச்சுதனை அரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார் தூமணிவண்ணனுக்காளர்தாமே. 10

* * *—ஆச்சரிய சக்தியை யுடையனும் மது என்ற அசுரனை ஒழித்தருளினவனும் பெரிய பிராட்டியார்க்கு வல்லபனும் வைதிகர்களினுல் துதிக்கப்படுமவனும் இடையர்களுக்குத் தலைவனும் அடியாரை ஒருநாளும் நழுவவிடாதவனும் கோயிலில் சேஷசயநனுமான எம்பெருமானை நோக்கிப் பெரியாழ்வார் அருளிச்செய்த இப்பத்துப் பாசுரங்களையும் நிர்மலமான நெஞ்சையுடையராய்க் கொண்டு ஓதவல்லவர்கள் எம்பெருமானுக்கு எப்போதும் அடிமை செய்யப் பெறுவர். .... (10)

அடிவரவு :

துப்பு சாமிடம் எல்லை ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நானேது குன்று மாய வாக்கு.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஸ்ரீ காஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் தொகுத்த

திருவரங்கத் தமிழ்மாலையில் பெரியாழ்வார் பதிகங்கள்

மூன்றும் முற்றுப்பெற்றன.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

குறிப்பு :—திருவரங்கத் தமிழ்மாலையில் ஆண்டாள் பதிகமொன்றும் திருமங்கையாழ்வார் பதிகங்கள் ஐந்தும் துணுக்கைப் பாசுரங்களும் சேஷித்திருக்கின்றன ; அவை அடுத்த இதழில் வெளிவரும்.

